# தமிழக இஸ்லாமிய

## வரலாற்று ஆவணங்கள்




தொகுப்பு

புலவர் செ. இராசு M.A., Ph.D.,

உதவி

கு.ஜமால் முஹம்மது

# பொருளடக்கம்

# தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்

**தொகுப்பாசிரியர்**

**செ.இராசு,எம்.ஏ., பிஎச்.டி.**

ஈரோடு

**கு.ஜமால் முகமது**

ஈரோடு

மின்னூல் வெளியீடு : Kaniyam Foundation



Author Correspondence, Scan, Ocr, Proof Reading

& Acquisition of Creations: Anwar

gnuanwar@gmail.com

Cover Image: Manoj

manojopenworks@gmail.com

# தொகுப்பாசிரியர் உரை

ஒரு நாட்டு வரலாற்றை முழுமையாக உருவாக்குவதற்குத் தக்க சான்றுகளாகத் திகழ்பவை கல்வெட்டு, செப்பேடு, ஓலைப்பட்டயம், இலக்கியம், அரசு ஆவணம், பதக்கம், நாணயம், வெளிநாட்டார் குறிப்பு ஆகியவையாகும். இவை அனைத்தையும் பயன்படுத்தி வரலாறு படைப்போர் மிகச்சிலர். அவர்களும் மேற்கண்ட பல பிரிவுகளைச் சேர்ந்த இன்றியமையாத இஸ்லாமிய ஆவணங்களைச் சிறிதும் பயன்படுத்துவதில்லை. அவற்றைத் தொகுத்து வெளியிடும் முயற்சி பெரும் அளவு நடைபெறாததே இதற்குக் காரணம் ஆகும்.

இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களின் பங்கு இல்லாமல், அவை இடம் பெறாமல் தமிழக வரலாறு முழுமையாகாது. அவ்வகையில் அவற்றை வெளிப்படுத்தும் முயற்சியில் நண்பர்கள் பலர் முயன்று ஈடுபட்டுள்ளனர். இராமநாதபுரம் முனைவர் எஸ். எம். கமால், புதுக்கோட்டை முனைவர் ஜெ. ராஜா முகம்மது. பாளையங்கோட்டை செ. திவான், இலங்கை மானாமக்கீன், பாளையங்கோட்டை முனைவர் முகம்மது நாசர், ஈரோடு எம்.கே. ஜமால் முகம்மது. ஈரோடு டாக்டர் வெ. ஜீவானந்தம், ஈரோடு ஸ்டாலின் குணசேகரன், ஈரோடு சி.எம்.ஏ. அப்துல் காதர், ஈரோடு செவாலியர் கொங்கு கொளந்தசாமி, ஈரோடு முனைவர் பி. சின்னையன் ஆகிய பலர் ஒவ்வொரு துறையில் அரிய பணிகள் சில ஆற்றியுள்ளனர். தினமணி நாளிதழ் வெளியிட்ட ரம்ஜான் மலர் மூலமும் பல செய்திகள் அறிமுகமாயின. திருச்செங்கோடு எம். விஜயகுமார். ஈரோடு கே.ஏ. திருஞானசம்பந்தம், தஞ்சாவூர் ஆறுமுகம் சீதாராமன் போன்ற நாணயத் தொகுப்பாளர் பணிகளும் பாராட்டத்தக்கது.



…

ஈரோடு உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றிய நான் 1982, பிப்ரவரி மாதம் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லியல்- கல்வெட்டியல் துறையில் பணிக்குச் சேர்ந்த பின்னர் கள

ஆய்வு செல்லும்போது பல இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களைப் பார்க்க நேர்ந்தது. அதிராம்பட்டினம் செப்பேடு, புதுக்கோட்டைப் பதக்கம், திருவறம்பூர் ஓலை ஆவணம் போன்றவை பல எங்கள் துறைக்கே ஆய்வுக்கு வந்தன.

காயல்பட்டினத்தில் நடைபெற்ற அனைத்துலக இஸ்லாமிய இலக்கிய மாநாட்டில் பேராளராகப் பதிவு செய்துகொண்டு பேராசிரியர் வானமாமலை அவர்கள் வெளியிட்ட ‘கான்சாகிபு சண்டை’ என்ற நூல்பற்றி ஆய்வுரை நிகழ்த்தச் சென்றேன்.

என் நலன் விசாரித்த டாக்டர் கேப்டன் அமீர் அலி அவர்கள் ‘இத்தலைப்பில் அச்சிட்ட நூல் இருப்பதால் யார் வேண்டுமானாலும் இத்தலைப்பில் பேசலாம். சின்ன மெக்கா என நாங்கள் அழைக்கும் இக்காயல்பட்டினத்தில் உள்ள பள்ளிவாசல், தர்காக்களில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. முடிந்தால் அவைகளைப் பார்த்து அவைபற்றிப் பேசுங்கள்” என்று அன்புடன் கூறினார். அவற்றைப் பார்வையிட்டு அன்று மாலையே மாநாட்டில் ’காயல்பட்டினம் கல்வெட்டுக்கள்’ என்ற தலைப்பில் பேசினேன்.

எனது உரையைப் பலரும் பாராட்டினர். அந்த ஆர்வத்தால் தொடர்ந்து இஸ்லாமிய ஆவணங்களின் தொகுப்பைத் தொடங்கினேன். புதுக்கோட்டை, ராஜகிரி, சென்னை, கீழக்கரை, கொழும்பு போன்ற பல ஊர்களில் நடைபெற்ற இஸ்லாமிய வக்கிய மாநாடுகளில் இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்பற்றி உரையாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. டாக்டர் கேப்டன் அமீர் அலி அவர்கள் இளையாங்குடி டாக்டர் ஜாகீர் உசேன் கல்லூரிக்கு இருமுறை அழைத்து இஸ்லாமிய ஆவணங்கள்பற்றிப் பேசுமாறு பணித்தார்கள். அதனைக் கல்லூரி மலரில் அச்சிட்டார்கள்.

சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், குன்றக்குடி அடிகளாரின் திருவருள் பேரவை, தமிழ்ப் பல்கலைக்கழகம் (அறக்கட்டளைப் பொழிவு) ஆகியவற்றிலும் இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்பற்றிப் பேசும் வாய்ப்புக் கிடைத்தது.

சில கல்வெட்டு ஆய்வாளர்கள் தாங்கள் கண்டுபிடித்த அரிய இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களைத் தமிழகத் தொல்லியல் கழகப் பருவ ஏடான ‘ஆவணம்’ இதழிலும், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடான ‘கல்வெட்டு’ இதழிலும் வெளியிட்டனர். அவை இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

இந்நூலில் உள்ள பெரும்பான்மையான ஆவணங்களின் மையக்கருத்து ‘மதநல்லிணக்கம்’ என்பதுதான். இஸ்லாமியப் பெருமக்கள் இந்துக்களையும், இந்துக் கோயில்களையும், இந்து மடங்களையும். இந்துப் பெருமக்கள் இஸ்லாமியப் பெருமக்களையும், பள்ளிவாசல், தர்காக்களையும் பெருமையுடனே மதித்துப் போற்றிக் கொடைகள் கொடுத்துப் புரவலர்களாக விளங்கிய செய்திகள் தமிழ்நாட்டில் பன்னெடுங்கால ஆவணங்களில் பரவலாய்க் கிடைக்கின்றன.

இந்தியாவில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுக்களில் அரபு, பர்சியன் கல்வெட்டுக்களே மிக அதிகம் ஆகும். மைய அரசின் தொல்லியத் துறை, கல்வெட்டுப் பிரிவினர் தமிழ் உட்பட

இந்திய மொழிகள் அனைத்திற்கும் தலைமையகத்தை மைசூரில் நிறுவியுள்ளனர். உருது, அரபு, பர்சியன் மொழிக் கல்வெட்டுகட்கு மட்டும் தனித் தலைமை அலுவலகத்தை நாகபுரியில் நிறுவியுள்ளனர். தொல்லியல் துறை வெளியிடும் கல்வெட்டு ஆண்டறிக்கைகளில் அரபு,பர்சியன் மொழிக் கல்வெட்டுக்களுக்குத் தனிப்பகுதி ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் உள்ள அரபு,பர்சியன் மொழிக் கல்வெட்டெழுத்துக்களோடு அந்தந்த வட்டார மொழியிலும் செய்தியைப் பொறிப்பது இஸ்லாமியப் பெருமக்கள் வழக்கம். அவ்வகையில் தமிழ்நாட்டில் பல அரபு, பர்சியன் மொழிக் கல்வெட்டுக்கள் தமிழிலும் அருகிலேயே எழுதப் பட்டுள்ளன. தமிழ்க் கல்வெட்டுக்களில் பெரும்பாலும் தமிழ் வருடம் மாதம், தேதியும், தமிழ் எண்களுமே பொறிக்கப்பட்டுள்ளன.

அடக்கத் தலங்களில் உள்ள கல்வெட்டுக்கள் மிகப் பெரும்பான்மை ஆதலின் அவைபற்றிய பொதுவான குறிப்பும், சில மாதிரிக் கல்வெட்டுக்களும் மட்டுமே இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு ஆவணத்திலும் அவையுள்ள இடம், காலம், செய்தி ஆகியவை கொடுக்கப்பட்டுள்ள காரணத்தால் தொகுப்புச் செய்திகள் முழுமையாக முன்னுரையில் இடம் பெறவில்லை.

தமிழக எல்லைகட்குள்ள ஆவணங்கள் மட்டுமே இங்குத் தரப்பட்டுள்ளன இந்தியா முழுவதும் இவை கிடைக்க வாய்ப்புள்ளன

இந்நூலில் உள்ள ஆவணங்களை நான்குவகையாகப் பிரிக்கலாம். முதலாவது இஸ்லாமிய அரசர்களும், ஆட்சியாளர்களும், பிற அலுவலர்களும், வணிகர்களும். பொதுமக்களும் சைவ வைணவக் கோயில்கட்கும், மடங்களுக்கும் செய்த அறப்பணிகள், கொடுத்த கொடைகள், நிலம், தோப்பு, இறை படிமங்கள் அளித்தமை. கோயிலை விட்டுச் சென்ற இறைபடிமங்களை மீண்டும் கோயிலில் எழுந்தருளச் செய்தமை போன்ற பல அறப்பணிகளைச் செய்து உதவியுள்ளனர்.

இவையன்றிப் பொதுப்பணிகளாக ஏரி, குளம், வாய்க்கால், மடை, மதகு. கலிங்கு ஏற்படுத்திக் கொடுத்துள்ள இஸ்லாமியப் பெருமக்கள் பலர். சென்னையை அடுத்துள்ள பல்லாவரத்தில் பார்ப்பனர்கள் மட்டுமே வாழும் அக்கிரகாரத்திற்குக் கிணறு வெட்டிக் குடிநீர் வசதி செய்து கொடுத்தவர் ஷேக் அலாவுதீன் மகன் ஷேக் முசாலியார் என்பவர். தான் கொடையாகக் கிணறு வெட்டிய இடத்தை அதே பார்ப்பனர்களிடம் விலைகொடுத்து வாங்கியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்க அரிய செயலாகும்.

இரண்டாவதாக இத்தொகுப்பில் இடம் பெறுவது இந்துக்கள் இஸ்லாமியப் பள்ளிவாசல், தர்க்காக்களுக்கும். இஸ்லாம் சமயப் பெரியவர்கட்கும் கொடுத்த பற்பல கொடைகளாகும். பாண்டியர், நாஞ்சில் நாட்டு அரசர், தஞ்சை நாயக்கர், மதுரை நாயக்கர். இராமநாதபுரம் சேதுபதிகள், புதுக்கோட்டை தொண்டை மான்கள், மராட்டியர், சிவகங்கை அரசர்கள், பாளையக்காரர்கள். வணிகர்கள், பொதுமக்கள் ஆகிய பல இந்துப் பெருமக்கள் இவ்வாறான

கொடை பல தந்துள்ளனர்.

சீதக்காதி போன்ற பெருமக்களும், ஜவ்வாதுப் புலவர் போன்ற அறிஞர்களும் சேதுபதி அவையில் சிறப்புப் பெற்றுள்ளனர். பள்ளிவாசல், தர்காக்களில் விளக்கேற்ற, விழா நடத்த, ஏழைகட்கு அன்னமிட, ஆடை வழங்க, பள்ளிவாசல், தர்க்காக்களைப் புதுப்பிக்கக் கொடைகள் இந்துக்களால் வழங்கப்பட்டுள்ளன.

இஸ்லாமியப் பெருமக்கள் தங்கள் நிறுவனங்கட்கு அளித்த கொடைகள் இத்தொகுப்பில் மூன்றாவதாக இடம் பெற்றுள்ளன. காயல்பட்டினம் கல்வெட்டுக்களில் இஸ்லாமியப் பெருமக்களின்

ஏழு தலைமுறைப் பெயர்கள் அளிக்கப்பட்டிருப்பது வேறு எங்கும் இல்லாத செய்தியாகும். இந்துக்களின் அரசிகளையும், தெய்வப் பெண்களையும் நாச்சியார் என்று அழைப்பதுபோல (குந்தவை நாச்சியார், சூடிக்கொடுத்த நாச்சியார்) இஸ்லாமியப் பெண்களும் நாச்சியார் என்று அழைக்கப்பட்டுள்ளனர். அரசர்களிடம் பல்வேறு பட்டப் பெயர்களை இஸ்லாமியப் பெரியவர்கள் பலர் பெற்றுள்ளனர்

நான்காவது பகுதியில் சிறப்புமிக்க பொதுச் செய்திகள் பல இடம் பெற்றுள்ளன. சில பதக்கங்களும், காயல்பட்டினத்தில் 'அஸர்' என்ற மாலைநேரத் தொழுகை நேரத்தைக் குறிக்கும் கல்வெட்டுக்களும் முக்கியமானவை. (இவற்றை அன்புடன் வழங்கியவர் புதுக்கோட்டை டாக்டர் ஜெ. ராஜா முகம்மது அவர்கள்). அரசு ஆவணங்கள் பற்றியும், இஸ்லாமிய அரசர்கள் வெளியிட்ட நாணயங்களும் இறுதியாக இடம் பெற்றுள்ளன. ஹைதர் அலி, திப்பு சுல்தான் ஆகியோர் ஆட்சிக் காலத்தில் பாளையக்காரர் நிலை என்ற ஆய்வுக் கட்டுரையும் இடம் பெற்றுள்ளது.

மேற்கண்ட ஆவணங்கள் அனைத்திலும் ஒலிக்கின்ற ஒரே குரல் 'மத நல்லிணக்கம்' என்பதேயாகும். இன்று இந்திய நாட்டுக்குத் தேவையான ஒருமைப்பாட்டு உணர்வுகளை மிக ஆழமாகவே இந்த ஆவணங்கள் நமக்குப் பாடம் புகட்டுகின்றன.

இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ள ஆவணங்களின் எண்ணிக்கை முடிந்த முடிவு அல்ல. இவை போன்று இன்னும் பல நூறு ஆவணங்கள் இருக்கக்கூடும். வரலாற்று ஆர்வலர்களும், ஆய்வாளர்களும் கள ஆய்வு மூலம் அவைகளையெல்லாம் தேடித் தொகுக்க இச்சிறு நூல் வழிகாட்டியாகவும், ஒரு தூண்டு கோலாகவும் இருக்கும் என்று நம்புகிறோம்.

**இஸ்லாமியக் கல்லூரிகளின் வரலாற்றுத் துறையும் தமிழ்த் துறையும் இணைந்து இன்றியமையாத இப்பணியை மேற்கொள்ள லாம். இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பெருமக்கள் செய்துதவ வேண்டும்.**

இந்நூலுக்கு வேண்டிய சில ஆவணங்களைக் கொடுத்துதவிய இராமநாதபுரம் டாக்டர் எஸ். எம். கமால், புதுக்கோட்டை டாக்டர் ஜெ.ராஜா . முகம்மது, சென்னை சு. இராசகோபால், திருச்செங்கோடு எம். ஜெயக்குமார், தமிழ்நாடுஅரசு தொல்லியல் துறை, தமிழகத் தொல்லியல் கழகம் ஆகியவர்கட்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

என்னை இப்பணியில் ஊக்கப்படுத்திய கேப்டன் என்.ஏ. அமீர் அலி, கவிக்கோ அப்துல் ரகுமான், முனைவர் கவிஞர் தமிழன்பன், ஈரோடு கே.எஸ். அமானுல்லா, தாராபுரம் எம்.ஜெய்லானி, ஈரோடு டாக்டர் வெ. ஜீவானந்தம், என்.ஹெச். முகம்மது இக்பால், ஈரோடு ஏ. அப்துல் ஜப்பார், ஈரோடு டாக்டர் அமரர் பி. சின்னைய்யன், ஈரோடு சாகுல் ஹமீது. ஈரோடு ஜி. முகம்மது தாஜ், பாளையங்கோட்டை செ. திவான், டாக்டர் முகம்மது நாசர், காரைக்கால் டாக்டர் சாயபு மரைக்காயர், காயல்பட்டினம், கீழக்கரை இஸ்லாமியப் பெருமக்கள் ஆகிய அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

மத நல்லிணக்கம் கூறும் இவ்வரலாற்று ஆவணங்கள் ஒவ்வொன்றும் கிடைக்கும் போதெல்லாம் நண்பர் ஈரோடு ஜமால் முகம்மது அவர்களிடம் கூறி மகிழ்வேன். மேலும்மேலும் என்னை இப்பணியில் ஈடுபடுத்தி, அவ்வப்போது ஏற்பட்ட ஐயங்களைப் போக்கி இப்பதிப்பு திருத்தம் அடையவும், செம்மையாகவும் உதவி, இப்பதிப்பு முயற்சியையும் உரிய முறையில் மேற்கொண்டு ஏற்பாடு செய்தவர்கள் அவர்களேயாவர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

ஈரோடு வணிகர் ஹாஜி. கே.கே.எஸ்.கே. ரபீக் அவர்கள் தம் கல்வி அறக்கட்டளை மூலம் சமயப்பணி, சமூகப்பணி, கல்விப்பணி ஆகியவைகளைச் சீரும் சிறப்புமாகச் செய்பவர்கள். இந்த ஆவணங்கள்மீது மிகுந்த ஈடுபாடும் மற்றும் ஆர்வமும் கொண்டு என் இல்லம் வந்து இவற்றைப் பார்வையிட்டுப் பதிப்பதற்குத் தக்க உதவிகள் செய்வதாக அன்புடன் கூறினார்கள். அவர்கட்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

பதிப்புத் துறையில் சிறப்புற்று விளங்கி, பல இஸ்லாமிய மார்க்க நூல்களையும், வரலாறு, இலக்கிய நூல்களையும் வெளியிட்டு அனுபவம் பெற்ற சென்னை. நேஷனல் பப்ளிஷர்ஸ், யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் உரிமையாளர் எஸ்.எஸ். ஷாஜகான் அவர்கள் பல அலுவல்கட்கிடையே ஈரோடு வந்து கையெழுத்துப் படியைப் பெற்றுச்சென்று குறுகிய காலத்தில் மிகச்சிறப்பாகப் பதிப்பித்துள்ளார்கள் அவர்கட்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக

தமிழகப் பெருமக்கள் இத்தொகுப்புப் பணியைப் பாராட்டு வதுடன் இந்நூலுக்கு நல்லாதரவும் தந்து வரவேற்பார்கள் என்று நம்புகிறேன்.

அன்புள்ள

புலவர் செ. இராசு, எம்.ஏ., பிஎச்.டி... ஈரோடு

கொங்கு ஆய்வு மையம்

64/5, டி.பி.ஜி. காம்ப்ளக்ஸ்,

உங்கள் அனைவரையும் இறைவன் ஒரே ஆத்மாவிலிருந்து படைத்தான்

-குர் ஆன் அத்தியாயம் 4

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"

-திருமூலர்

# 1. முருகன் கோயிலுக்குத் தோப்பு அளித்த ராவுத்தர்கள்

**இடம்-** காஞ்சிபுரம்- மாவட்டம் செய்யூர் வட்டம், சென்னை - புதுவை கடற்கரைச் சாலையில் உள்ள இடைக்கழி அருகிலிருக்கும் நயினார் குப்பம் பேருந்து நிலையத்திலிருந்து 1/2 கி.மீ.தூரத்தில் உள்ள தோப்பில் நடப்பட்ட தூண்.

**காலம்**- விசய நகர மன்னர் மூன்றாம் சீரங்கதேவ மகாராயர் காலம் (1642-1655) கி.பி. 1645 : தாரண வருடம்

**செய்தி**-விசய நகர மன்னர் காலத்தில் அப்பகுதியை வெங்கலப்ப நாயக்கர் நிர்வாகம் செய்து வந்தார். அவரது அலுவலர் குயீசனா ராவுத்தர். அவரது புண்ணியமாக நயினார் குப்பத்தை அமரக் கிராமமாகப் பெற்றிருந்த றெகனாராவுத்தர், நல்லன் ராவுத்தர், அல்லி ராவுத்தர். கான் ராவுத்தர் ஆகிய நால்வரும் அருகில் செய்யூரில் உள்ள கந்தசாமி கோயிலுக்குத் தென்னை, மா, பலா மற்றும் பல மரங்கள் அடங்கிய தோப்பு ஒன்றை கொடையாக அளித்தனர். அந்நிலமும் குடிகளும் கொடையாகக் கொடுக்கப்பட்டனர்.

இதற்குத் தீங்குச் செய்தவர்கள் தாய், தகப்பன், குரு, கங்கைக்கரையில் காராம் பசுவையும் கொன்ற பாவம் அடைவார்கள் என்று எழுதப்பட்டுள்ளது.

தூண் 9 அடி உயரமுள்ளது. தூணின் உச்சி வளைவாய் கிணறு அல்லது ஏற்றத்தின் தூணாக இருக்கலாம்.

**கல்வெட்டு**

1. தாரண வரு
2. ஷம் பங்கு
3. னி மாதம் 25
4. தேதி ஸ்ரீமந் ம
5. கா மண்ட
6. லேசுபர் சீர
7. ங்கராயர் தே
8. வ மகாராய
9. ர் அவர்கள் ரா
10. ச்சியம் பண்
11. ணுகையில்

12. சுவாமிக்கு
13. வெங்களப்ப னா
14. யக்கர் சீர்மையி
15. குரமு கொண்
16. டா கந்தவாலத்து
17. குயீசன ராவுத்தர்
18. புண்ணியமாக ெ
19. றகனா ராவுத்தர் ந
20. ல்லன் ராவுத்த
21. ர் அல்லி ராவுத்
22. தர் கான் ராவுத்
23. தர் யிவர்கள் நா
24. லு பேரும் சே
25. ர்ந்து விட்ட
26. தன்மம் எ
27. ங்கள் அ
28. மரக் கிராமம் நயி
29. னார் குப்பத்தி
30. ல்_

 31.-ர் மக

31. மானிய
32. த்துக்கு
33. த் தோப்பு தெ
34. ளன மரமும்
35. மா மரம் பலா
36. மரம் மற்றும் உ
37. ள்ள பல விருஷ்

38. ஷமும் நிலமு
39. ம் தோட்டத்
40. திவே யிருக்
41. கிற குடியும்
42. செய்யூர் கந்தகவா
43. மியாற்கு சறுவ
44. மான்யமாக சந்
45. திராதித்த வ
46. ரைக்கும் கட்ட
47. ளையிட்டோ
48. ம் விந்த தன்மத்
49. துக்கு ஆதாமொ
50. ருவர் அகுதம் பண்
51. ணினவர்கள் தாய்
52. தகப்பன் குரு
53. வினையும் கெ
54. ங்கை கரையி
55. லே காராம்ப
56. சுவை கொ
57. ன்ற தோஷத்
58. திலே போக
59. கடவர்களாக
60. வும் உ

*கல்வெட்டு. எண் 64. அக்டோபர் 2004: பக்கம் 5-7: தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு[^1]

## 2. மங்களேசுவரியம்மனுக்கு சையத் இஸ்மாயில் செய்த வெண்கலத் திருவாசி

**இடம்**-இராமநாதபுரம் மாவட்டம். இராமநாதபுரம் வட்டம். உத்தரகோசமங்கை மங்களேசுவரியம்மன் சன்னதி வாயில் திருவாசியில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள்.

**காலம்**- 1924

**செய்தி**- மதுரையில் மானேஜராக இருந்த சையத் இஸ்மாயில் சாயபு அவர்கள் 230 விளக்குகளுடன் முகப்பில் யாழி முகம் கொண்ட வெண்கலத் திருவாசி ஒன்றை மங்களேசுவரியம்மனுக்குக் கொடையாக அளித்தார். அதன் எடையும். வேலை செய்த ஆசாரியின் பெயரும் அதில் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1.சாலிவாகள சகாப்தம் 1845 சரியான குரோதி வருஷம் ஆவணி மாதம்

2.27 தேதி சோம் போரமும் கிருஷ்ண பட்சத்துத் துவாதசியும் பூச நட்சத்திரமும்

3.வரிகநாம் யோகமும் கவுன்பானகரணமும் கூடிய சுப தினத்தில்

4.திருவுத்தரகோச மங்கை ஸ்ரீமங்களேசவரியம்மன் சன்னதிக்கு மதுரை

5.யிலிருக்கும் மகாராசராசஸ்ரீ சையது மிசுமாயில் சாயபு அவர்கள் மானேஜர் அதிகாரத்தில் மேற்படி நோயில் அமிசத்திலிருந்து செய்து வை

6.த்த 230 விளக்குள்ள வெங்கல யாழிமுகத் திருவாச்சி

7.க்கு சேர்

8.842 3/4

9.சிலப்பம் வீரபுத்திர ஆசா

10.ரி சுஹஸ்த விகிதம்

*ஆவணம். 7. சூலை... 1996 தமிழகத் தொல்லியக் கழகம், பக்கம் 122[^2]

# 3. குற்றாலநாதருக்கும் நெல்லை காந்திமதியம்மனுக்கும் இஸ்லாமிய வணிகர்கள் கொடை

தென்காசியில் உள்ள அகமது பேட்டையில் ஏற்றுமதி இறக்குமதிப் பொருளை வியாபாரம் செய்யும் மணியம் இசுமாயில் ராவுத்தர் உள்ளிட்ட இசுலாமிய வணிகர்கள் அனைவரும் குற்றாலம். குற்றாலநாதசுவாமி திருவிழாப் பூசைக் கட்டளைக்கும். திருநெல்வேலி காந்திமதியம்மனின் சிறுகாலைச் சந்திக் கட்டளைக்கும் கொடுத்த மகமைக் கொடையை இச்செப்பேடு கூறுகிறது.

அகமது பேட்டை வணிகர்கள் இல்லாமல், செங்கோட்டை, புளியரை, பண்புளி, கடையநல்லூர். சிவராமபப்பேட்டை, சுரண்டை முதலிய ஊர்ச் சந்தையில் வியாபாரம் செய்யும் இசுலாமியர்களும் இம்மகமையை மாதா மாதம் அளிக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

இதற்குச் சைவர்கள் எவரேனும் தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலும், இசுலாமியர்கள் தீங்கு செய்தால் தாய்க்கு விக்கினம் செய்த தோஷத்திலும் போவார்கள் எனக் கூறியுள்ளனர்.

பட்டயம் எழுதியவர் மாடன் செட்டியார். தானாதிபதி அம்மைநாதன் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளார். இசுலாமி யர்கள் சார்பில் இசுமாயில் ராவுத்தர் கையொப்பமிட்டுள்ளார். கோயில் கார்பாரு சந்திர குமாருப்பிள்ளை செப்பேடு செய்து வைத்தார்.

இரண்டு செப்பேடு தயார் செய்து குற்றாலம் குற்றாலநாத சுவாமி கோயிலுக்கும். திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. கொடை அளித்த ஆண்டு கி.பி.1795.

1. மெக்கன்சி ஆவணம் ஆர் 5371-2: தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை -5.
2. தென்னிந்தியக் கோயில் சாசனங்கள். மூன்றாம் தொகுதி முதல் பாகம், எண் 1089. பக்கம் 1079-4.
3. Annual Report on Epigraphy (A) 43 of 1946.

**செப்பேடு**

1. சாலிவாகன சகார்ந்தம் 1717 வருஷம் செல்லா
2. நின்ற கொல்லம் 964 பெருஷம் கீலக வருஷம் கார்த்திகை மாதம்
3. 25 தேதி சுவாமி குத்தாலநாதசுவாமி கட்டணைக்கு அசாது வாலா சாயபு 4
4. அனுமது பேட்டை மணியம் இசுமாயில் ராவுந்தர் முதலான பல

5. ரும் பட்டையம் எழுதிக் கொடுத்தபடி பட்டையமாவது சுவா
6. மிக்கு நித்தியல் பிளா பூசையில் கட்டனை வைந்து நடத்திவரும்
7. படி படித்தரப்படிக்கு நடத்திவரும் வகைக்கு நாங்களெல்லாரும் 8
8. வசைவகைத்துக் கொடுத்து யேறுசாத்து இறங்கு சாத்து
9. கச்சை ஒன்றுக்குக் கால்மாகாணிவீதமும் நடை ஒன்றுக்கு மரு
10. வறும் சட்டமொன்றுக்கு மாகாணிப் பன வீதமும் இன்
11. னொன்றுக்கு அரை மாகாணி வீதமும் இந்தப்படிக்கு திருநெல்
12. வேலி காந்திமதியம்மன் சிறுகாலைச்சந்தி மகமைப்படிக்கு தென்
13. காசி அகமது பேட்டையிலுள்ள வணிக சேகரம் செங்கோட்டை
14. புளியரை பண்புளி கடையநல்லூர் சிவராமபேட்டை சுரண்டை
15. சந்தை முதலான துறையிலும் மகமை வைத்து கொடுத்தபடியி
16. னாலே மாசம் மாசம் உள்ள பணம் துறைவளியும் கணக்குப்
17. பார்த்து வாங்கிக் கொண்டு சுவாமிக்கு கட்டளை யென்றென்றைக்
18. கும் நடத்திவருவோமாகவும் இப்படி நடத்தி வருகுத கட்டளை
19. தர்மத்துக்கு யாதொரு விக்கினம் செய்தால் பழமையாயுள்ள 20
20. பட்டையப்படிக்கு பஞ்சாட்சரத்துக்குட்பட்டவன் கெங்கைக்
21. கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலும் இஸ்லாமான
22. முகமதிய மதத்தில் தாய்க்கு விக்கினம் செய்த தோஷத்திலும்
23. போவாராகவும் இந்தப்படி சம்மதித்து விளா பூசை கட்டளைக்கு
24. பட்டையமெளுதிக் குடுத்தோம் பேட்டை மணியம் இஸ்மாயில் ராவுத்தர்
25. முதலான பலரும் இந்தப் பட்டையம் எழுதினேன் மாடன் செட்டி.
26. யார் தானாதிபதி அம்மை நாதன் எழுத்து இந்தப்படிக்கு இசு
27. மாயில் ராவுத்தர் காருமாறு கோவில் சந்திரகுமாருப்பிள்ளை
28. இந்தச் செப்புப்பட்டயம் செய்து எழுதி வைத்து 73
29. நி தென்காசி சேகர மயிலும் ஈடலைமுத்துப்பிள்னை திரிகூ
30. டாசலபதி துணை.

# 4. திப்பு சுல்தானின் கொடைபெற்ற கொங்குநாட்டுக் கோயில்கள்

ஹைதர் அலியும், திப்பு சுல்தானும் கொங்கு நாட்டில் பல பள்ளிவாசல்களிலும், தர்ஹாக்களிலும் தொழுகை நடத்தியதாகச் செவிவழிச் செய்திகளும், சில ஆவணங்களும் உள்ளன. திப்பு சுல்தான் கொங்கு நாட்டு சைவ, வைணவக் கோயில்கட்கும் கொடையளித்துள்ளார்.

நாமக்கல் மாவட்டம், இராசிபுரம் வட்டம் மின்னக்கல்லில் ஒரு பார்ப்பனர் அக்கிரகாரம் உள்ளது. அப்பகுதிக்கு உத்தண்ட மல்ல சமுத்திரம் என்று பெயர். அங்குப் பாமா ருக்மணி சமேத கோபாலகிருஷ்ணன் கோயில் உள்ளது. தந்தை காலத்திவேயே அவ்வூருக்கு வந்து **'திப்பு சுல்தான் பகதூர்"** அவர்கள் அக்கோயிலுக்கு ஜோடிகை மானியமாக 575 ராஜகோபால வராகன் கொடையளித்ததாக அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

ஈரோடு மாவட்டம் பெருந்துறை வட்டம். குன்னத்துரை அடுத்துள்ள குறிச்சி என்ற ஊரில் 'செல்லாண்டியம்மன் கோயில் உள்ளது. அக்கோயில் வழிபாட்டுக்காகவும். பூசாரிகள் நலத்திற்காகவும் இப்புகல்தான் கொடை வழங்கியுள்ளார். அதற்குரிய ஆவணம் கறுப்பு கேன்வாஸ் துணியில் கன்னடத்தில் வெள்ளை எழுத்துக்களால் எழுதப்பட்டது. அந்த ஆவணம் மைசூரில் இந்திய கல்வெட்டுத் துறையின் முன்னாள் இயக்குநர் டாக்டர். கே.வி. ரமேஷ் அவர்கள்வசம் உள்ளது.

ஈரோடு மாவட்டம் பவானி வட்டத்தில் **'திப்பு செட்டி பாளையம்'** என்ற ஊர்உள்ளது. அண்மையில் உள்ள ஜம்பையில் கிடைத்த பாடல் ஒன்றில் அவ்வூர் 'திப்பு செட்டி பாளையம்' என்று எழுதப்பட்டுள்ளது. இப்புகல்தான் தொடர்பு இதனால் விளங்கும்.

சேலம், நாமக்கல் மாவட்டக் கல்வெட்டுக்கள்", தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு

பவானியாற்று பெருவெள்ளம்..

## 5. கொங்கணேசுவரருக்குக் கொடை தந்த இஸ்லாமியர்கள்

மராட்டிய மன்னர் இரண்டாம் ஏகோசி (1735-1737) காலத்தில் 6.12.1735 அன்று தஞ்சாவூர் கொங்கனேசுவரர்-ஞானாம்பிகை. அன்ன பூரணி ஆகியோருக்குச் சோமவாரக் கட்டளை நடத்த கடைக்கு ஒரு காசு கொடுத்துப் பூசையை நடத்தியவர்களில் 'பாசிக்கடை மீரா சாயபு" ஒருவர்.

மராட்டிய மன்னர் பிரதாபசிங் (1739-1763) காலத்தில் 6.12.1735 அன்று "பலபட்டடைச்செட்டியார்கள், வர்த்தகர்கள், பதினெட்டுப் பட்டடை' ஆகியோருடன் சேர்ந்து"துலுக்கர் லெப்பை" வியாபாரிகளும் தஞ்சாவூர் கொங்கணேசுவரருக்கு மகமைக் கொடை கொடுக்க ஒப்புக் கொண்டு இசுலாமிய வணிகர்கள்

பாசிப்பேட்டை அகமது ராவுத்தன்

அரசாங்கண்டு ராவுத்தன்

சின்னபிள்ளை ராவுத்தன்

ஆகியோர் பொதி ஒன்றுக்கு முக்கால் பணம் கொடுத்தனர்.

பிரவுர ராசகிரியார் சந்தப்பேட்டை

சயிது ராவுத்தன் மகன் முத்துராவுத்தன்

ராசகிரியார் மீரா லெப்பை

மூக்குப்புறி கூளமீரா லெப்பை

சிறுத்து லெப்பை

மாதாரு லெப்பை

மாம ராவுத்தன்

எலிப்பாடி ராவுத்தன்

மீரயாளி ராவுத்தன்

களு சாத்தின ராவுத்தன் சின்ன மீரா வெப்பை

பெரிய மீரா லெப்பை

ஆகியோர் கட்டு ஒன்றுக்கு முக்காணி பணம் கொடுத்தனர்.

தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்: தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு ,இராசு. பக் 91, 152, 154.

# 6. வராகசாமி கோயிலுக்கு சாத்துல்லாகான் காலக் கொடை

டில்லி பேரரசர் பரூக்ஷா பாதுஷா ஆட்சியின்போது அவரின் கீழ் கர்நாடக நவாபாக இருந்தவர் நவாப் சாத்துல்லாகான் சாகிப் அவர்கள். அவருடைய ஆணையின்படி ராஜா தோடர்மால் மூலம் ஸ்ரீமுஷ்ணம் வராகசாமி என்ற பெருமாள் கோயிலுக்குக் கீழ் புளியங்குடி புத்தூர், நெடுஞ்சேரி, மலையான்புத்து முதலிய 5 ஊர்களை மானியமாகக் கொடுத்து அதை நிர்வகிக்க உள்ளூர்ப் பாளையக்காரருக்கு அதற்குரிய சன்னதும் கொடுத்தார்.

இச்சிறப்பு மிகு கொடை 1.5.1714 அன்று அளிக்கப்பட்டு அதற்குரிய செப்பேடும் எழுதப்பட்டது.

Annual Report on Epigraphy 15(A) 1953, 87 (A) 1953

# 7. கான் சாகிபு வரலாற்றில் மீனாட்சியம்மன்

ஆர்க்காட்டு நவாப் முகமதலியிடம் சுபேதாராகப் பணி யாற்றிய கான்சாகிபு முறையாக வரிவசூல் செய்யவும். அடங்காத பாளையக்காரர்களை அடக்கவும் மதுரை மண்டலத்தை வரிவசூலிக்கும் குத்தகையைப் பெற்றிருந்த கும்பினியார் சார்பில் 1757ஆம் ஆண்டு மதுரைக்கு அனுப்பப்பட்டார்.

வந்த அன்று மீனாட்சியம்மனை வணங்கியதாக அவர் வரலாற்றுப்பாடல் கூறுகிறது.

"நானூறு பொன் கையில் கொடுத்து - அந்த

நாழிகையில் மீனாட்சிக்குச் சிறப்புச் செய்யச் சொல்வி"

பானுமதி சூடும் மீனம்மான் - பாதம்

பணிந்து சொக்கேசரையும் பேலமாக வந்து

கர்த்தாக்கள் வந்திருக்கும் மேடை -அந்தக்

கருங்கல்லுச் சவுக்கையிலே ஒயிலாகச் சாய்ந்து

மீனாட்சி கிருபைகளினாலே - நல்ல

வெங்கலக் கதவுதனைப் பேர்த்தவனெடுத்து

தீரன்எனும் கான்சாகிபு துரைதான் - அதிலே

ஒரு கோடி திரவியம் இருக்க மளமகிழ்ந்து

விஸ்தார அரண்மனையும் கட்டி – அதிலே

மேல்வீடு மாளிகையும் தான் உண்டு பண்ணி அரண்மனையிலே மகிழ்வாக இருந்து"(பக்கம் 25)

என்பது அப்பகுதியாகும் கான் சாகிபு

மதுரை மீனாள் தாயே

எனக்கிந்தத் திரவியத்தைக் கொடுக்க வேணும்

என்று வேண்டிக் கொண்டாராம் (பக்கம் 31)

கான்சாகிபு மனைவி 'மாஷா' பிரெஞ்சுக் கத்தோலிக்கக் கிறித்துவப் பெண்ணாக இருந்து இஸ்லாம் மார்க்கம் மாறியவள். அவளும் பலமுறை நினைத்து வேண்டியதாகவும், வணங்கிய தாகவும் நூலில் கூறப்படுகிறது.

கான்சாகிபுவின் பணியாளர்களே சதிசெய்து அவரைப் பிடித்துக் கொடுக்க வரும்போது மதுரை மீனாட்சியே ஒரு

பார்ப்பனப் பெண் வடிவத்தில் வந்து எச்சரிக்கை செய்ததாகவும் பார்ப்பாரப் பேய் மிரட்டுவதாக எண்ணி எவரிடமும் கான்சாகிபு கூறவில்லை என்றும் கதைப்பாடல் கூறுவது,

நம் உள்ளத்தை உருக்குவதாக உள்ளது.

”ராசபர் மேஸ்வரி மீனான் பார்ப்பாரப் பெண்போல – மீனாள்

லோகநாயகியும் கானனுக்கு மோசம் வந்ததென்று

பாதகன் தலைமாட்டில் வந்துநின்று கொண்டு

உன்னுடைய உம்பு தின்னுபோட்டு - கானு

உந்தனுக்கு ரண்டகம் நினைந்திட்டாரப்பா

இனிமேலே மதுரையிலிருந்தால் - நீயும்

இறந்து போவாயடா கான்சாகிபு துரையே

மலையாளம் போய்ச் சேரு கானு-என்று

மதுராபுரி மீனாளும் சொல்லினாளப்பா

பார்ப்பாரப்பேய் எந்து லவுண்டி - நம்மைக்

கட்டியே மிரட்டுதென்று காஞ்சாயபு துரையும்

திடீரென்று முத்தப்போ பார்த்து - கானு

சேதிகளை எவரோடும் சொல்வாம் லிருந்தான்

என்பது ”கான்சாகிபு சண்டை கதைப்பாடல் பகுதியாகும் (பக்கம் 111)

# 8. அன்வருதீன் கொடுத்த உமாமகேசுவரர்

தென்பாண்டி நாட்டுத் திருநெல்வேலியில் காந்திமதியம்மன் உடனமர் நெல்லையப்பர் கோயிலில் இன்றும் வழிபாட்டில் உள்ள உமாமகேசுவரர் படிமம் அன்வருதீன் என்பவரால் கொடுக்கப் பட்டது.

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை சார்பில் நடைபெற்று வந்த கருத்தரங்கில் கூறப்பட்ட செய்தி

# 9. சிவன்கோயில் தேருக்கு மசூதி சார்பில் பூசை"

விரிஞ்சிபுரம் சிவன் கோயில் தேர்த் திருவிழாவின்போது தேர் மசூதி முன்னர் வரும்போது மசூதியின் சார்பில் சிறப்புப் பூசை நடைபெறுகிறது.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை சார்பில் நடைபெற்ற கருத்தரங்கில் கூறப்பட்ட செய்தி

# 10. சாததுல்லாகான் காசி- இராமேசுவரம் யாத்திரை

பீஜப்பூர் சுல்தான் சார்பில் செஞ்சியில் ஆட்சி செய்தவர் நவாபு சாத்துல்லாகான் சாயபு. அவர் காசி யாத்திரை சென்று அதன் தொடர்ச்சியாக இராமேசுவரம் செல்லும்போது விழுப்புரம் வட்டத்தில் உள்ள பனமலை தாலகிரீசுவரர் கோயிலில் வணங்கினார். பனமலைக் கோயில் முன் மண்டப வாயிற்படியில் உள்ள அவர் கல்வெட்டில் அவர் தன்னை 'மகாமண்டேலசுவர ராஜாதிராஜ ராஜபரமேசுவரன்' என்று குறித்துக் கொண்டுள்ளார்.

சக வருடம் 1596 (கி.பி. 1674) ஆனந்த வருடம் மாசி மாதம் 11ஆம் தேதி வெள்ளிக் கிழமை அவர் பனைமலைக் கோயிலுக்குச் கொடையும் கொடுத்துக் கல்வெட்டு பொறித்துள்ளார். பின்னர் இவர் 1710ஆம் ஆண்டு ஆர்க்காடு நவாப் ஆக்கப்பட்டார். இவர் சொந்த ஊர் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த வேப்பத்தூர் ஆகும்.

Annual Report on Epigraphy 618 of 1915

## 11. சிவன் கோயிலுக்கு இலுப்பைத் தோப்பளித்த கான்சாகிபு

**இடம்**-விழுப்புரம் மாவட்டம். திருக்கோவிலூர் வட்டம், கூவனூர் அருகில் வயல் நடுவில் உள்ள பாறை

**காலம்** -பிரமாதி, சகம் 1650; கி.பி. 1728

**செய்தி**-பாறையில் மூன்று பகுதியாக வெட்டப்பட்டுள்ள கல்வெட்டில் கற்பூரவல்லி அம்மன், அகத்தீசுவரருக்குத் திருவிளக்குக்காக எண்ணெய் வழங்கிய செய்தி கூறப்பட்டுள்ளது. மூன்றாம் பகுதியில் அசரது சிபிவெ கானுசாயபு அவர்களும் பிறரும் இலுப்பைத் தோப்பைக் கொடையாகக் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. மதரர் பள்ளிவாசல் பெயர் உள்ளது. கானுசாயபு அங்குப் பணியாற்றுபவராக இருக்கலாம்.

இடப்புறம் பெரிய சூலமும், மூன்றாம். பகுதிக்குமேல் சூரியன், சந்திரன், பிறை ஆகியனவும் செதுக்கப்பட்டுள்ளன. இசுலாமியர் கொடுத்த கொடையானதால் ”பிறை’யும் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. ஸ்பஸ்திஸ்ரீ வி
2. சயாத்புத சாவி
3. இவாக சகாப்த
4. ம் 1650
5. தின் மேல் செ
6. ல்லா நின்ற
7. பிறமாதி சம்வ
8. த்சரம் வைய்யா
9. சி மாதம் 25 தேதி சுக்கி
10. ரவாரணான் திறிதி
11. னாள் இந்தசுபதினத்தில் அகி
12. லாண்டகோடி பிறமாண்ட
13. னாயகராகிய கற்பூரவல்லி அம்பா
14. ளுக்கும் ஸ்ரீ அகஸ்தீஸ்வர சுவாமியா
15. ர் திருவிளக்கு நிமித்தியம் உளக்கு

16. மேற்கு இலுப்பைத்தோப்பு அசர
17. து சிபிலெ கானுசாயபு அவர்களும்
18. ராசமானிய ராயஸ்ரீபண்டாரத்தா
19. ரவர்களும் கிராமத்தார் வயித்தியனாத
20. பிள்ளை மெச்சியாபிள்ளை மத்துமு
21. ண்டான முடிகளும் தான பூர்வமாக
22. சாசனம் பண்ணிக்குடுத்தோம் யிதுக்கு யாதாமொ
23. ருத்தர் விகுதம் பண்ணினார்
24. கெங்கைக் கரையில்
25. காராம்பசுவை
26. கொன்ற தோஷத்தி
27. ல் போவாராக

*ஆவணம் 14-ஆம் பக்கம், 91-92: 2003: தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு

# 12. சங்கர மடத்திற்கு கோல்கொண்டா சுல்தான் கொடை

கோல்கொண்டா சுல்தான் அபுல் ஹசன் தனாஷா என்பவர் காஞ்சிபும் சங்கரமடத்திற்கு 16.11.1677 அன்றும், 1685ஆம் ஆண்டும் இரண்டு கொடைகள் அளித்துச் செப்பேடுகள் வெட்டிக் கொடுத்துள்ளார்.

அச்செப்பேடுகள் தெலுங்கிலும். பெர்ஷிய மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. ஆனால் எழுத்துக்கள் தெலுங்கு வரிவடிவில் உள்ளன.

**முதல் செப்பேடு**

காஞ்சிபுரம் காமகோடி பீடத்தின் பூஜைக்காகவும், இதர டத்தின் செலவுகட்காகவும் வருடந்தோறும் 115 வராகன் பொன் ளிக்க ஆணையிடப்பட்டதைக் கூறுகிறது. இச்செப்பேடு 11.1677 அன்று எழுதப்பட்டது.

**இரண்டாம் செப்பேடு**

சுல்தான் அபுல்ஹசன் தனாஷா தன் ஆட்சிக்குட்பட்ட கிராமமான மேல்பாக்கம்” என்ற பெரிய கிராமத்தின் வருவாய் முழுவதையும் காஞ்சிபுரம் மடத்தில் உள்ள சந்திரமவுலிச்சுவர சுவாமியின் பூசைக்காக ஒவ்வொரு போகமும் தவறாமல் சந்திரசூரியர் உள்ளவரைக் கொடுக்க ஆணையிட்டார்.

மேல்பாக்கத்தில் ஒரு சிறு பகுதி சங்கராச்சாரியார் விருப்பப்படி ஸ்ரீராமா சாஸ்திரிகள் என்பவருக்கு வழங்கப்பட்டது. இச்செப்பேடுகளில் கோல்கொண்டா சுல்தானின் அதிகாரிகள் அக்கண்ணா, மாதண்ணா ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர்.

தமிழ்நாட்டுச் செப்பேடுகள்: இரண்டாம் தொகுதி; ச. கிருஷ்ணமூர்த்தி: பக்கம் 247 – 248

# 13. சங்கர மடத்திற்கு இஸ்லாமியர் மரியாதை

தஞ்சை மாவட்டம் கும்பகோணம் நகரில் மேலக்காவேரிப் பகுதி இஸ்லாமியர்கள் மொகரம் பண்டிகைக்கு இசை, வாத்தியக் கருவிகள் துணையுடன் நகரில் பல தெருக்களில் ஊர்வலம் போவது வழக்கம்.

6.9.1862 அன்று அவ்வாறு மொகரம் பண்டிகை ஊர்வலம் போகும்போது சங்கரமடத்தின் எதிரில் ஐம்பது கஜ தூரத்திற்கு சைக்கருவிகள் வாசிப்பது இல்லை என்று முடிவு செய்து அதைத் தம் பிற்காலத்தவர்களும் தெரிந்து கொள்ள சங்கரமடத்தின் எதிரில் உள்ள சாலையில் இருபுறமும் 50 கஜம் தூரம் இடைவெளியும் வடக்கிலும் தெற்கிலும் எல்லைபக்கம் நட்டு இந்த விபரத்தைத் தெரிவித்துள்ளனர். அக்கல்வெட்டுக்கள் இன்றும் உள்ளன.

நேரில் பார்த்துப் படிக்கப்பட்டது.

**கள ஆய்வு**

**23.03.24**

இந்தக் கல்வெட்டு குடந்தை சங்கர மடத்தின் நுழைவு வாயிலில் இடது பக்கம் உள்ளது அங்கு உள்ள மடத்தின் காவலாளி இடத்தைக் காண்பித்தார். சங்கர மடத்திற்க்கு தோழர் மன்னை தாஜிதீன் அவர்கள் ஆடுதுறையிலிருந்து தனது இரு சக்கர வாகனத்தில் கும்பகோணம் அழைத்துச் சென்றார்

முகவரி: no 13, Mutt St, opp. Sankara Madam, Swaminatha Nagar, Valayapettai Agraharam, Kumbakonam, Tamil Nadu 612001

Google Map

Gps Location: 10.966638514460262, 79.37779421424524

-அன்வர்

கல்வெட்டைக் காண அழைத்துச் சென்ற நண்பர் 'மன்னை'தாஜ்ஜூதீன்

# 14. வரதராசப் பெருமாளைப் பிரதிட்டை செய்த சாததுல்லாகான்

இந்தியாவில் உள்ள ஏழு புனித தலங்களுள் ஒன்றாகக் கருதப்படுவதும். நகரங்களில் சிறந்ததாகக் கருதப்படுவதும் (நகரேஷு காஞ்சி) காஞ்சிபுரம். அண்னியர் படையெடுப்பைக் கண்டு அஞ்சிய பக்தர்களும் நிர்வாகிகளும் காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் ஆகிய வரதராசப் பெருமாள் திருமேனியை உடையார் பாளையம் எடுத்துக் கொண்டு சென்று அங்குப் பாளையக்காரர் பாதுகாப்பில் வைத்தனர் (கி.பி.1688)

படையெடுப்பு அச்சம் நீங்கிய நிலை ஏற்பட்டவுடன் மீண்டும் வரதராசப் பெருமாளை உடையார் பாளையத்திலிருத் காஞ்சிக்குக் கொண்டு வந்து பிரதிட்டை செய்ய நிர்வாகிகள் விரும்பினர். வரதராசப் பெருமான் திருமேனியழகில் பெரிதும் ஈடுபட்ட உடையார்பாளையம் பாளையக்காரர் மீண்டும் வரதராசப் பெருமாளைக் காஞ்சிபுரத்தார்களுக்குக் கொடுக்க மறுத்து விட்டார்.

காஞ்சிபுரம் ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாச்சார்ய சீனிவாசதாச ஆத்தான் ஜீயர் சுவாமிகள். நவாப் சாததுல்லாகான் உதவியை வேண்டினார். நவாப் தன் தளபதி லாலா தோடர்மால் அவர்களைப் படையோடு அனுப்பி வரதராசப் பெருமானை மீண்டும் காஞ்சி கொண்டு வந்து பிரதிட்டை செய்ய ஏற்பாடு செய்தார். சாலிவாகன சகம் 1632 (கி.பி. 1710) விரோதிவருஷம் பால்குண அபரபட்சத் திரிதியையும் உத்திரட்டாதி நட்சத்திரமும் கூடிய சனிக்கிழமை பெருமாள் காஞ்சிபுரத்தில் பிரதிட்டை செய்யப்பட்டார். இன்றும் காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயிலில் ஒருநாள் ‘உடையார் பாளையம் விழா’ நடைபெறுகிறது.

இதைக் குறிக்கும் நீண்ட கல்வெட்டு காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயிலில் தாயார் சன்னதி வடபுறம் உள்ள கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. 19-ஆம்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே அக்கல்வெட்டு மெக்கள்சி உதவியாளர்களால் படி எடுக்கப் பட்டது.

1. South Indian Temple Inseptitions. Vol III; part II: No 1207; page 1216-1219

2.Annual Report on Epigraphy, 639 of 1919

3.தமிழக அரசு சுவடி நூலகம் No 100 Page 161 II

## 15. சூடிக்கொடுத்த நாச்சியார் படிமம் தந்த பரூக்சீயர்

**இடம்**-வேலூர் மாவட்டம், வாலாஜாப்பேட்டை வட்டம். சோளிங்கர் பக்தவத்சல சுவாமி கோயில் முதற் பிரகாரம் வடக்குச் சுவர்.

**காலம்**-2.5.1716; சாலிவாகன ஆண்டு 1637 துர்முகி வைகாசி 4.

**செய்தி**-சோளிங்கர் பக்தவத்சலசுவாமி கோயிலில் ஆண்டாள் படிமம் இல்லை என்று வேண்டிக்கொள்ள மன்னர் பரூக்சீயர் ஆணையால் படிமம் செய்யப்பட்டு, சுவாமியும் திருவீதியுலா எழுத்தருளச் செய்யப்பட்டது.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்திஸ்ரீமந் மகாமண்டலேஸ்வர ராஜாதிராஜ ராஜ பரமேஸ்வர ராஜப்பிரதாப முகலாயி பரூக்சீய சாயிபு பாச்சா அவர்கள் பிருத்விராஜ்யம் பண்ணியருளாநின்ற சாலிவா
2. கன சகாப்தம் 1637க்கு மேல் செல்லா நின்ற துன்முகி வருஷம் வைய்யாசி மாதம் 4 தேதி சப்த்தமி புத வாரம திருவோண நக்ஷத்திரமும் பெத்த யிந்த னாள் ஸ்ரீ கெடி காசலம் அக்காரக் கன்னி தக்கான் ஸ்ரீகாரியத்துக்குக் கர்த்தராகிய கந்தாடை குமாரர் தொட்டையாச் சாரியார் அவர்கள் முத்திரைக்குச் சுற்தர் ஆன
3. பக்ஷிராஜபரிகரம் இவேளைவாளும் திருக்கடிகை ஸ்தானத் தாரும் பாறுபத்தியம் வெங்காஜி பண்டிதரும் உபாதானம் துவாதெசி திருவேங்கட அய்யங்கார் குமாரர் திருவளூரப்பய்யங்கார் மண்டபத்துக்குப் பொலியூட்டு பண்ணிக் குடுத்தபடி ஸ்வாமி தக்கான் சன்னதியில் சூடிக்குடுத்த நாச்சியார் யில்லபாதபடி யினாலே இந்தச் சூடிக்கு
4. டுத்த நாச்சியாரை ஏறியருளப்பண்ணி சம்ரோக்ஷணை பண்ணிவிக்கத் தக்கதாக தேவரீர் சங்கல்ப்பித்தருளின படியினாலே நாங்களனைவரும் சம்மதிச்சு உங்கள் உபதான மண்டபத்துக்கு எங்கள் கோயிலொ டொத்தாயி கிரி பிரதக்ஷணத்துக்கு பெருமாளை எழுந்தருளப்பண்ணி படியுங் கைக் கொண்டு
5. வ... செய்ய... கடவோமாகவும் இந்தப்படிக்கு ஸ்தலத்தார் அனைவரும் சம்மதிச்சு பொலியொட்டு சாஸநம் பண்ணிக் குடுத்தோம். இதுக்குத் தப்பத்தக்கது இல்லை.இந்தப் பிரகாரம் ஆசந் தற்கஸ்தாயியாசி நடத்துவிக்கக் கடவோமாகவும் இந்தப்படிக்குப் பண்ணிக் குடுத்த தர்ம சாசனம் பக்ஷிராஜ பரிசு
6. ரம் ஸ்ரீ வைஷ்ணவாள் கயி எழுத்து ஸ்தானத்தார் கயி எழுத்து ஸ்ரீகாரியம் வெங்காஜிராயர் கயி எழுத்து ஊரவர் முதலியான் கயி எழுத்து தற்ம்மணன் கயி எழுத்து சுயிக்குன முதலிகள் னாராயணன் கயி எழுத்து இவர்கள் சம்மதியில் ஸ்தலக்கணக்கு ஆதியூர் உடையான் வீர ராகவன் புத்திரன் னாராயணன் கயி எழுத்து ஸ்ரீறாம் ஐயம்

# 16. திருவரங்கத்தில் நவாபு செய்த பைசல்

திருவரங்கம் கோயிலில் நீண்டநாள் தீர்த்தம் மரியாதை பற்றி ஒரு வழக்கு கந்தாடை அண்ணங்கார் வரதாச்சாரியார் ரெங்காச்சாரியார் இருவரிடையே நிலவி வந்தது. இவ்வழக்கு ஆர்க்காடு மன்னர் அசரத் நவாபு சாயபு அவர்களிடம் சென்றது. அவர் நேரில் வந்து விசாரித்துத் தீர்ப்பு அளித்த விபரம் ஒரு ஆவணமாக எழுதப்பட்டுள்ளது. அதன் மூல நகல் சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசு கீழ்த்திசை சுவடிச் சாலையில் உள்ளது. அதன் எண்.டி.3891 ஆகும். அதன் விவரம் இங்கே அளிக்கப்படுகிறது.

**ஆவணச் செய்தி**

திருவரங்கம் வைணவர்களுக்குக் ‘கோயில்’ என்று அன்றும் இன்றும் பாராட்டப்படவது. சிறப்புமிகு அத்திருவரங்கத் தலத்தில் உள்ள கந்தாடை அண்ணங்கார் வரதாச்சாரியார் என்பவர் 1797ஆம் ஆண்டு ஆர்க்காடு மன்னர் அசரத் நவாபு சாய்பு அவர்களிடம் ’பிராது” ஒன்றைக் கொடுத்தார். 10 தலைமுறை 120 ஆண்டுகளுக்கு முன்னிருந்து மதுரை நாயக்க மன்னர் சொக்கநாத நாயக்கர் காலத்திலிருந்து (1656-1882) தம் பரம்பரை உரிமையை ரெங்காச்சாரியார் பரம்பரை அனுபவித்துக் கொண்டு வருவதாகவும், அதைத் தமக்கு மீட்டுத் தருமாறும் கந்தாடை அண்ணங்கார் வரதாச்சாரியார் கேட்டிருந்தார்.

கந்தாடை குடும்பம் திருவரங்கத்தில் புகழ்வாய்ந்த பழைய குடும்பம். அவர்கள் பெயரில் திருவரங்கத்தில் கந்தாடை அண்ணன் அப்பன் திருமாளிகை என்ற பெயரில் மண்டபம் ஒன்றுள்ளது. அரங்கநாதர் நாள்தோறும் எழுந்தருளும்போது வைஷ்ணவர்களுக்கு அங்கு அன்னதானமிட பெரிய கோனம்மாள் என்பவர் 2.1.1535 அன்று 800 பொன் கொடையாக அளித்துள்ளார். அவர்கள் பரம்பரையில் கந்தாடை மாதவய்யங்கார் என்பவர் திருவரங்கம் கல்வெட்டில்குறிக்கப் பெறுகிறார்.

ஒருநாள் நவாபு சாய்பு அவர்கள் திருவரங்கம் வந்து இவ்வழக்கை விசாரித்தார். விசாரணையின்போது வழக்காளிகள் இருவரும் இருந்தனர். மற்றும் திருவரங்கம் கோயில் தொடர்பான பன்னிரண்டுபேரை நவாபு நேரில் அழைத்திருந்தார். மக்கள் நீதி

மன்றம்போல அந்த அவை காணப்பட்டது. (1) ஸ்ரீரங்கநாத ஜீயர் (2) வேதவியாசப்பட்டர் (3) தாளம் அண்ணுவய்யங்கார் (4) அமுல் சுப்பராயர் (5) பாரிசு சிராஸ்தார் வெங்கிட்டராயர் (6) கானு கோயில் சீனிவாசராயர் (7) கரானா வெங்கிட்டராயர் (8) கானு சமாளி பெடிகார் ரெட்டியார் (9) சிரஸ்தார் நாராயணய்யர் (10) சிரஸ் தார் குருநாதபிள்ளை (11) வீர ராகவ சோசி (12) சுப்பிரமணிய சோசி ஆகியோரும் தலத்தாரும் சிலர் இருந்தனர்.

தீர விசாரித்து நவாபு அவர்கள் பிள்வருமாறு தீர்ப்பளித்தார். அதனை அட்டவணை குமாரசாமி முதலியார் ஓலையில் எழுதினார்.

’நவாபு சாய்பு அவர்கள் சகலமான பேர்களிடத்திலும் தயவு பண்ணுகிறபடியினாவே

தயா விசியமாய் ராசா நாள் முதல் ரெங்காச்சாரியாருக்குத் தீர்த்தமானபடியினாலே வேறே பேச்சுச் சொல்லாமல் உத்தரவு பண்ணினார். என்னவென்றால் இரு வருக்கும் தீர்த்த மரியாதை பேருக்குப் பாதியாய் ஒரு மாதத்துக்கு 15 நாள் அண்ணங்காருக்கும். 15 நாள் ரெங்காச்சாரியாருக்கும் திட்டம் பண்ணினார்கள்.

இதனாலே முசுத்திகள் தலத்தார் முதலானபேரும் வழக்காளி இருவரும் சம்மதியில் திட்டம் பண்ணினார்கள்.

அசூர் உத்திரவுப்படிக்கு வழக்காளி இருவரும் தீர்த்தம் மரியாதை கோவிலிலேயே நடக்க ருசுவும் மிராசு இதுகள் பேர் பாதியாய் அனுபவிச்சுக் கொண்டு எண்ணெய்க்கும் செச்சறைப் படாமல் தீர்த்தப் பிரசாதம் நடப்பிவிச்சுக் கொண்டு தம்முடைய காரியத்திலே இருக்கவும். ஒரு வேளையிலே இவர்களில் ஒருத்தர் இந்தத் தீர்ப்புக்குச் சகித்தை பண்ணினார் சருக்காருக்கு நொத்தராய் மிராசம் விட்டு சர்க்கார் ஆக்கினைக்கும் உட்பட்டவராவார்.

தமிழக வைணவ வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய இத்தீர்ப்பின் மூல ஓலையில் தொடர்புடையவர்கள் கையெழுத்துக்கள் உள்ளன.

தமிழக அரசின் கீழ்த்திசைச் சுவடி நூலகம் எண்.டி. 3891

# 17. மதுரை சுல்தான் காலக் கொடைகள்

1. புதுக்கோட்டை மாவட்டம்: திருமெய்யம் வட்டம். ராங்கியம் பூமீசுவரர் கோயில் தென்புறச் சுவரில் "ஆதி சுரத்தானுக்கு யாண்டு 732 வது சித்திரை மாதம் 15 தியதி, பூர்வபட்சத்து ஏகாதசியும் திங்கட்கிழமையும் பெற்ற பூசத்துநாள்" என்று தொடங்கிக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. பாடிகாவல் உரிமை அளிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு எண் -669**

1. ஈரோடு மாவட்டம், தாராபுரம் வட்டம், அயங்கியம் கலியுகக் கண்ணீசுவரர் கோயிலில் மகாமண்டப வடபுறச் சுவரில் எம்மண்டலமுங் கொண்ட ஆதிசுரத்தானுக்கு யாண்டு 751 அப்பிசை மாதம் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.
2. தென்பொங்கலூர்க்கா நாட்டு அலங்கியமான உத்தமசோ நல்லூர் வெள்ளாளன் தேவன் சிவந்தகால் பெருமாள் என்ப நாயனார் ஞானமூர்த்திதே நாயனார் திருமடத்திற்கு இறையிலியாக நிலக்கொடை வழங்கியுள்ளார். "ஆதிசுரத்தான்' என்பதை வீரசுந்தரன் என்று தவறாகப் படித்துள்ளனர்.

-1920-ஆம் வருட கல்வெட்டு அறிக்கை

மதுரை சுல்தான்கள் ஆட்சிக் காலத்தில் பல அறச்செயல்கள் தடைபெற்றுள்ளமையை ஆதிசுரத்தான் (மதுரை சுல்தான்) கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இதுபோல் இன்னும் பல கல்வெட்டுக்கள் இருக்கக்கூடும்.

திருச்சிராப்பள்ளி வட்ட இலுப்பூரிலும் ஆதிசுரத்தான் காலக் கொடைக் கல்வெட்டு உள்ளது.

புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் - எண்669

Annual Report on Epigraphy – 160 of 1920

# 18. -A இலுப்பூர் சிவன் கோயிலுக்கு மதுரை சுல்தான் கொடை

திருச்சி வட்டம், இலுப்பூரில் உள்ள சிவன் கோயிலில் இறைவனுக்கு பொன்வாசிநாதசுவாமி என்று பெயர். கல்வெட்டில் "தேவும் திருவும் உடைய நாயனார்" என்று பெயர் கூறப்படுகிறது.

ஹிஜ்ரி 745-ஆம் ஆண்டு தை மாதம் மதுரையில் ஆதி சுல்தான் ஆட்சிக்காலத்தில் அன்னவாசல் கூற்றம் இருக்குமணி உடையான் பெரியவள் வழுவாதரையர் என்பவரைக் கொண்டு தச்சன்வயல் என்ற ஊரைக் குடிநீங்காத் தேவதானமாக ஏலத்துக்குவிட்டு கிடைத்த 80 "வாளால் வழி திறந்தான்" பணத்தைக் கொண்டு கோயிலில் பூசை நடத்த ஏற்பாடு செய்தார். அந்த ஊரின் வருவாயிலிருந்து 80 பணம் கோவிலுக்கும் கொடுக்க வேண்டும்.

கல்வெட்டின் தொடக்கத்தில் 'ஆதி ஈரத்தாள்" (கல்தாள்) என்று எழுதப்பட்டுள்ளது. புதுக்கோட்டை மாவட்டம் ராங்கியம் ஈரோடு மாவட்ட அலங்கியம் ஆகிய ஊர்களிலும் 'ஆதி சுல்தான்' கல்வெட்டுக்கள் உள்ளன.

Annual Report on Epigraphy 297 of 1944

## 19. சலுகைகள் அளித்த சும்சுதீன் அடில்ஷா

மதுரையில் சும்சுதீன் சுல்தான் அடில்ஷா ஆட்சி செய்யும்போது பொதுமக்கள். கடைக்காரர்கள், வணிகர்கள், உழவர்கள் ஆகியோருக்குப் பல்வேறு சலுகைகள் அளித்ததாக மதுரை சுல்தான் சுயாவுதீன் தர்காவில் உள்ள கல்வெட்டுக் கூறுகிறது.

Annual Report on Epigraphy 115 (D) of 1962

# 20. கள்ளர்களைப் பிடித்த ராவுத்தர்கள்

நத்தம் பகுதி பாளையக்காரராக இருந்தவர் லிங்கைய நாயக்கர் அவரிடம் அலுவலர்களாக இருந்தவர்கள் சிங்கார ராவுத்தர் வத்தலை ராவுத்தர் ஆகியோர். கி.பி. 1604.ஆம் ஆண்டு கரும் காலக்குடி அருகில் கன்னர் திருடவந்தனர். சிங்கார ராவுத்தரும், வத்தலை ராவுத்தரும் திருடர்களைப் பிடித்துக் கொடுத்தனர். இச்செய்தி மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், கருங்காலக் குடியில் உள்ள உப்புச்சுனையின் மேல்பக்கப் பாறையில் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. சகாப்தம் 1526
2. க்கு மேஸ் செல்லா நின்ற
3. குரோதி வருஷம் கார்த்திகை மாதம்
4. 3 தேதி லிங்கைய நாயக்
5. கரையன் காரியத்
6. துக்கு கடவாரான சி
7. ங்கார ராவுத்தர் வத்தலை ரா
8. வுத்தர் கள்ளரைப் பிடித்து
9. ..யுங் கள்ளன்...

(அழிந்து விட்டது)

Annual Report on Epigraphy – 150 of 1974

## 21. பார்ப்பனப் பெண்ணுக்காக உயிர்துறந்த பக்கிரிசாயபு

ஒரு பார்ப்பனப் பெண்ணின் பொருட்டு உயிர்துறந்து வீர மரணம் அடைந்த ஒரு தீரமிக்க இஸ்லாமியர் பக்கிரிசாயபு அவர்களின் வரலாற்றை இச்செப்பேடு கூறுகிறது. இந்தச் செப்பேடு தஞ்சை நாயக்க மன்னர் விசயராகவ நாயக்கரால் கொடுக்கப் பட்டுள்ளது. (1640-1574)

தஞ்சாவூர் நாயக்கமன்னர் விசயரகுநாத நாயக்கர் வழங்கியது இச்செப்பேடாகும். ஆனந்த வருடம் கார்த்திகை மாதம் 13ஆம் நாள் என்று காணப்படுகிறது. கி.பி. 1674ஆம் ஆண்டாகும். இச்செப்பேட்டில் மிகவும் அரிய செய்தி ஒன்று கூறப்படுகிறது.

தஞ்சாவூரிலிருந்து வல்லத்திற்குச் செல்லும் காட்டு வழியில் பக்கிரிசாயபு என்பவர் நடந்து சென்றுகொண்டிருந்தார். வல்லத்திலிருந்து தஞ்சாவூர் நோக்கி வந்து கொண்டிருந்த ஒரு பெண்ணைச் சிவர் வழிமறித்துக் கெடுக்க முயன்றனர். அதைக் கண்ட பக்கிரிசாயபு அப்பெண்ணைக் காப்பாற்றப் போராடினார். திருடர்கள் பக்கிரிசாயபுவைக் குத்திக் கொன்றனர்.

தன் மானத்தைக் காக்கும் பொருட்டு சாயபு உயிர் விட்டாரே என்று கலங்கிய அப்பார்ப்பனப் பெண் தன் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு அங்கேயே மரணமடைந்தாள்.

அப்போது திருடர்கட்குக் கண்பார்வை போய்விட்டது. திருடர்கள் இறைவனை நோக்கி “நாங்கள் அறியாமல் செய்து விட்டோம். தாங்கள் மன்னித்தால் பார்ப்பனப் பெண்ணுக்குக் கோயில் கட்டுகிறோம்” என்று வேண்டினர். கண்பார்வை கிடைத்தது. வேண்டிக் கொண்டவாறே அப்பெண்ணுக்கு நினைவுக் கோயில்கட்டிக் குளமும் வெட்டினர்.

இந்தக் கோயிலுக்கு விசயராகவ நாயக்கர் 1500 குழி நன்செய் நிலத்தைக் கொடையாக அளித்தார். இதைச் செப்பேடாகவும் வெட்டினார்.

தமிழ்நாட்டுச் செப்பேடுகள்: பகுதி 2: பக் 59; ச. கிருஷ்ணமூர்த்தி

## 22. ஷேக்'கின் அலுவலர் கட்டிய ஆகாச ராசன் மண்டபம்

கோயமுத்தூர் மாவட்டம், அவினாசி வட்டம், அவினாசி அருகில் உள்ள வேலாயுதம்பாளையத்தில் ஆகாசராசன் கோயிலில் ஆகாசராசன் மண்டபத்தைக் கட்டியவர் ஷேக் அவர்களின் காரியத்துக்குக் கர்த்தரு, சென்னி திருமலை செட்டியார் பேரனும் ஆகிய ஒருவர் (பெயர் அழிந்து விட்டது) கலியுகம் 4793 ஆங்கிரச வருடம் சித்திரை முதல் தேதி கட்டினார் (கி.பி. 1693)

Annual Report on Epigraphy – 298 of 1960

# 23. -A இந்துக்களும் இஸ்லாமியர்களும் இணைந்து கொடுத்த கொடை

தஞ்சை மாவட்டம், கும்பகோணம் வட்டம் திருநாகேசுவரம் கிரி குஜாம்பாள் சன்னதி முன்பாக நடப்பட்டுள்ள கல்.

காலம் -கி.பி. 1783

நவக்கிரகத் தலங்களுள் ஒன்றான திருநாகேசுவரத்தில் உள்ள இந்துக்களும் முஸ்லிம்களும் தங்கள் கடைகளில் மகமைப்பணம் வசூல் செய்து அம்மன் கோயிலிலும் பள்ளிவாசலிலும் விளக்கெரிக்க ஏற்பாடு செய்யப் பட்டது. இரண்டு குடை மகமையைப் பள்ளி வாசலுக்குக் கொடுக்க அனைவரும் சம்மதித்தனர். தோஷம் என்பது தோழம் என எழுதப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. உஸ்வஸ்தி ஸ்ரீ
2. சாலிவாகன சகா
3. த்தம் 1705 க
4. லியாத்தம்
5. 4964 யினிமேல் செல்ல
6. ஈ நிண்ட குரோதி ளூ தையி
7. மீ திருனாகீசுவரம் ளாகலிங்க
8. சுவாமியார் குண்டுமுலை
9. அம்மனுக்கு உள்ளூர் கடைக்காரர் அறி
10. வரும் மகமைப்பட்டையம் செ
11. யிது குடுத்தபடி பட்டையமாவது
12. நிதம் திருவிளக்கு பாத்துவர உப்
13. பிலியப்பன் கோவில் கடைமுதல்
14. வடக்குக் கடை ராவுத்தர் கடைவரை
15. ரக்கும் கடை 1க்கு நிதம் அரைக்கா

16. சு வீதம் அவரவர் கடைத் தெருவி
17. மாதம் ஒருத்தர் முறையா தன்
18. டி எல்லாக் காசம் ஒருத்தர் வச
19. மாயி குடுத்து திருவிளக்குத் தாட்சி
20. வராமல் பாந்து வரயிருக்கிர
21. பேர் விசாரிச்சு பரிபாலனம் ப
22. ண்ண வேண்டியது சன்னாபுரம்
23. முதல் கடைக்காசு வடக்குக் க
24. டைக்கார வாங்கிறது ராவுத்தர்
25. பள்ளி வாசலுக்க ரெண்டு கடெ மா
26. னியம் யிந்தப்படி அளவரும் ச
27. ம் மதிச்சோம் யிதுக்கு விகாதம்
28. நினைச்சால் கெங்கை கரையில்
29. காராம் பசுவைக் கொண்
30. ண தோழம் வரும் ராவு
31. த்தர் மாரி
32. ல விகாதம்
33. நினைச்சா
34. ல் மக்கா
35. விவே செ
36. ய்யாது
37. செயித
38. தோழம்
39. வரும்

இக்கல்வெட்டை அனுப்பி உதவியவர். சு.இரசகோபால், தொல்வியல்துறை, சென்னை

## 24. அக்கிரகாரத்தில் கிணறு வெட்டிய ஷேக் முசாமியார்

இடம்-சென்னை, பல்லாவரம் அக்கிரகாரத்தில் உள்ள கிணற்றின் அருகேயுள்ள கல்வெட்டு

காலம் -பிரமாதிச வருடம், ஆவணி மாதம் 15: கி.பி.1733.

செய்தி-பல்லாவரம் அக்கிரகாரத்திற்கு" அவுளம்மா சமுத்திரம்' என்று பெயர். அங்கு வசிக்கும் அய்யங்கார்களுக்கு தர்மக் கிணறு ஒன்றை சேகு அலாவுதீன் குமாரர் சேகு. முசாமியார் வெட்டிக் கொடுத்தார். கிணறு வெட்டும் இடத்தையும் அய்யங்கார்களிடம் விலை கொடுத்து வாங்கிக் கிணறு வெட்டிய செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது. இது மிக மிக அரிய செயலாகும்.

**கல்வெட்டு**

1. பிறமாதிச வருஷம் ஆவணி மாதம் 15
2. அகரம் பல்லாபுரத்துக்கு பிரதி னா
3. மமான அவுபளம்ம சமுத்திரத்தி
4. ல் யிசமானர் முதலான அசேஷ்
5. வித்துவ சென அய்யங்கார்கள்
6. சேகு அலாவுத்தீன் குமாரன் சே
7. முசாமியரவர்களுக்குப் பிறத்
8. தெரு ரெட்டைத்தெருவில் கண
9. க்குப்பிள்ளைகள் வீட்டுக்குக் கிழ
10. க்கு வடவண்டை வாசல்ப் பிறத்
11. தில் கிழக்கு மேற்கு இருபதடியு
12. ம் தெற்கு உமக்கு தற்மமாகக் கிணத்துக்குக்
13. கிறையமாகக் கொடுத்து னா
14. ங்கள் வாங்கிக் கொண்ட
15. வடக்குக்
16. யிருபதடியு ம்
17. பணம் ரெண்டு இந்தப்பண

18. ம் ரெண்டும் நாங்கள் வாங்கி
19. க் கொண்டு தற்மகிணத்து
20. க்கு தெற்கு வடக்கு இருபதடியு
21. ம் கிழக்கு மேற்கு இருபதடியு
22. ம் உமக்கு ஆச்சந்திரார்க்
23. கமாக இந்தப் பண்ணயம்
24. சூரிய சந்திராதித்தருள்ள னா
25. ள் வரைக்கும் உ
26. மக்கே நடக்
27. கக் கடவதாக
28. வும் இந்த
29. ப்படி சம்
30. மதித்து த
31. ற்மக் கிண
32. த்துக்கு சிறை
33. யப்பத்திரங்
34. குடுத்தோம்
35. யிசமானர் மு
36. த் தண்ண அசே
37. ஷ வித்துவசென
38. அய்யங்கார்க
39. ள் சேகு முசா
40. மியாருக்கு யிந்
41. தாப் புண்ண
42. யத்தை ஆ தா மொருவ
43. ர்விகாதம்
44. பண்ணின

45. சுவர்கள் செங்

46. கைக்கரை

47. யிலே காரா

48. ம் பசுனது

49. க் கொன்ற

50. பாவத்தி

51. லே போக

52. க் கடவாரா

53. கவும்.

Annual Report on Epigraphy 56 of 1909.

தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 26 எண்: 58: இதற்குப் பெர்சியன்மொழிக் கல்வெட்டு உண்டு.

ARE 138 of 1967; South Indian Inscription Vol X 780.

## 25. கிணறும் குளமும் வெட்டிய அசன்கான்

சென்னை மயிலாப்பூரில் பாட்ஷா பாக் என்னும் இடத்தில் உள்ள ஈத்கா பள்ளிவாசல் உபதேச மேடையருகில் ஒரு கல் உள்ளது. அதில் ஹிஜ்ரி 1135-ஆம் ஆண்டு (கி.பி. 1722-23) எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. அசன்கான் என்பவர் அவ்வாண்டில் கிணறும் குளமும் அமைத்த செய்தி கூறப்படுகிறது.

**** Annual Report on Epigraphy 142 (D) of 1971

## 26. கால்வாய் வெட்டிய ஆர்க்காடு நவாப்

ஹிஜ்ரி 1205ஆம் ஆண்டு (கி.பி. 1790-91) ஆர்க்காடு நவாப் வாலாஜா பாசன வசதிக்காகக் கால்வாய் ஒன்றை வெட்டினார். அக்கால்வாய் நவாப் பெயரால் 'வாலாஜா கால்வாய்' என்றே இன்றும் அழைக்கப்படுகிறது.

Annual Report on Epigraphy 110 of 1955

# 27. கால்வாய் வெட்டிய சையத் ஷா மொயினுதீன்

இடம் -கடலூர் மாவட்டம், சிதம்பரத்திலிருந்து எட்டு கி.மீ. தொலைவில் உள்ள கிள்ளை என்ற கிராமத்தில் உள்ள பக்கிரி வாய்க்கால் மதகுக் கல்வெட்டு

காலம் -கி.பி.1875, மே மாதம் 10

செய்தி-சையத் ஷா மொயினுதீன் பார்ஷா சாயபு என்பவர் தன் முன்னோர் ஹஜரத் சையத் ஷா ரசுமதுல்லா சாயபு தன் மானிய நிலங்களுக்குப் பாசன வசதி பெற வாய்க் காலையும் மதகையும் சொந்தப் பணத்தில் அமைத்ததை மீண்டும் புதுப்பித்த செய்தி கூறப்படுகிறது.

இவ்வாய்க்கால் ராஜா வாய்க்கால் பாயமான் பிரிவில் தொடங்கி பாசனத்துக்குப் பயன்பட்டு வெள்ளாற்றில் கலக்கிறது.

மக்கள் இவ்வாய்க்காலை பக்கிரி வாய்க்கால் என்றே இன்றும் அழைக்கின்றனர். மொயினுதீன் மகன் சையத் ஷா உயாம் 1905ல் வாரிசு இல்லாமல் இறந்தார். நீதிமன்ற ஆணைப்படி அறங்காவலர் வசம் நிலங்கள் உள்ளன.

**கல்வெட்டு**

1. ஹஜரத் சைய்யத் ஷா ரகமதுல்லா சாயபுக்கு கிள்ளையிலிறு
2. க்கப்பட்ட நன் இனாம் நிலங்களில் பாய்ச்சலுக்கு ஆதியி
3. ல் சொந்தத்தில் பணம் போட்டு வாய்க்கால்
4. வெட்டி இந்த மதகும் கட்டினார் மதகு சி
5. கஸ்தாய் போனபடியால் மறுபடி மேற்படியா
6. றுடைய 4வது தலைமுறை பேரப்பிள்ளை சையது
7. ஷா மொயினுதின் பார்ஸா சாயா தன் சொந்
8. தப்பணம் சிலவு செய்து இந்த மதகை அஸ்த்தியா
9. ரமும் புதிதாய்க் கட்டினார் 1875 வருஷம்
10. மே மாதம் 10 தேதி

*ஆவணம்' 10, 1999; பக்கம் 91; தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு.

## 28. கண்மாய் மடைக்கல் அமைத்த வத்தலை ராவுத்தர்

மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், கருங்காலக்குடியில் நத்தம் லிங்கைய நாயக்கரின் காரியத்துக்குக் கர்த்தராக இருந்தவர் வத்தவை ராவுத்தர். கருங்காலக்குடியில் வயலிப்பாறை என்னும் பகுதியில் உள்ள கண்மாயில் நீர்ப்பாசன வசதிக்காக மடை ஒன்றை வத்தலை ராவுத்தர் அமைத்தார். அவர் கட்டிய மடைக்கல்லிலேயே க்கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது. இவர் கி.பி. 17ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் வாழ்ந்தவர். அமைக்கப்பட்ட குளத்தின் பெயர் வயலிக்குளம்.

கல்வெட்டு

1. வத்தலை
2. ராஜபேத்தர்
3. தந்த ம
4. டம்

Annual Report on Epigraphy 157 of 1974

# 29. குளத்தில் மதகு அமைத்த பத்ரே ஆலம்

இடம் - திருச்சிரப்பள்ளி மாவட்டம், நாவலூர் குட்டப்பட்டு

என்னும் ஊரில் உள்ள பெரிய குளம், பாப்பன்குளம்

ஆகிய இரு குளங்களிலும் குமிழியில் உள்ள கல்வெட்டு

(குமிப்ரி - மதகு)

காலம் - ஹிஜ்ரி 1166; கி.பி. 1746

செய்தி - குமிழிக் கல்லில் நிலவின் சின்னமும் அரபு மொழியில்

'பத்ரே ஆலயம்' என எழுதப்பட்டுள்ளது. 'பத்ரே அலயம்' என்பவர் இக்குமிழிகளை அமைத்துள்ளார்.



...

**கல்வெட்டு**

1. ஹிஜ்ரி

2 1166

3. பத்ரே ஆலயம்

ஆவணம்: 12 சூலை 2001. தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு. பக்78

கல்வெட்டுகுறித்து தகவல் தந்துதவிய திரு வெ.சுபாஷ் சந்திர போஸ் (திருச்சி) படியெடுத்து உதவிய திருவாளர்கள் ,ப.பூபாலன் ,க.ஈசுவரன், சநடராசன் , (தொல்லியல் துறை) ஆகியோருக்கு நன்றி

கி. ஸ்ரீதரன், திருச்சி.



* 'ஆவணம்' 12 சூலை 2001, தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு, பக்78

...



கல்வெட்டு குறித்து தகவல் தந்துவிய திரு. வெ. சுபாஷ்சந்திரபோஸ் (திருச்சி), படியெடுத்து உதவிய திருவாளர்கள், ப. பூபாலன், க.ஈசுவரன், ச. நடராசன், (தொல்லியல்துறை) ஆகியோருக்கு நன்றி.

78 ஆவணம், இதழ் 12, 2001

...

## 30. ஏரிக்குக் கலிங்கு கட்டிய மம்முது பாகூர் சாயபு

இடம்-வேலூர் நகரம், வேலூர் நகருக்குக் குடிநீர் வழங்கும் ஒட்டேரியின் மேற்கக் கலிங்கில் உள்ள கல்வெட்டு.

காலம்-கி.பி. 1772

செய்தி ஹஜ்ரத் மகமது பாகூர் சாயபு என்பவர் ஏரிக் கலிங்கு அமைத்ததைக் கூறுகிறது.

**கல்வெட்டு**

1. நந்தன
2. வருஷம் ஆவ
3. ணி மாதம் 20
4. தேதி அசரது ம
5. ம்மது பா
6. கூற் கா
7. யபு க
8. ட்டி வச்ச
9. கலிங்
10. கில்

*ஆவணம் 15. ஜூலை 2004. பக் 68; தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு

# 31. அபூப் சகா மரைக்காயர் நிர்வாகத்தில் கட்டிய கலிங்கு

இராமநாதபுரம் மாவட்டம், திருவாடனை வட்டம், தொண்டி கைக்களான்குளம் கலிங்குக் கல்

**காலம்** -9.11.1795; மருது பாண்டியர் திருப்பணி

**செய்தி**-தொண்டிப்பட்டணம் கைக்களான்குளம் கலிங்கு மருது பாண்டியரால் கட்டப்பட்டபோது, அப்பகுதிக்கு அரசு அதிகாரியாக இருந்தவர் அப்சா மரைக்காயர் என்பது குறிக்கப்பட்டுள்ளது. கட்டிட வேலை செய்தவர் அருணாசல ஆசாரி.

**கல்வெட்டு**

1. சிவமயம் கலியுகம் 4855 சாலிவாகன சகாப்
2. தம் 1717 இதின்மேல் செல்லாநின்ற றாகக்ஷத அற்
3. ட்பிசி மாதம் 27 சோமவாரமும் பஞ்சமியும் புநற்பூச நக்ஷத்ர
4. மும் கூடிய சுபதினத்தில் தொண்டிப்பட்டணம் கைக்களான்
5. குளம் கலிங்கு கட்டி முகிஞ்சுது ராசமானிய ரா. மருதுபாண்டி
6. யின் உபயம். அபுப்சகா மரைக்காயர் அதிகாரத்தில் கட்டி முகிஞ்சது.
7. அருணாசல ஆசாரி கட்டி முகிஞ்சுது

மருது பாண்டிய மன்னர்கள். மீ. மனோகரன், பக்கம் 687

# 32. வழிப்போக்கர் மண்டபம் கட்ட ஆர்க்காடு நவாப் ஆணை

**இடம்**-விழுப்புரம் மாவட்டம். திண்டிவனத்திலிருந்து வயிரபுரம் போகும் வழியில் உள்ள அய்யன் தோப்பு செங்கல் மண்டபம்.

**காலம்-** ஆர்க்காடு நவாப் சாததுல்லாகான் விரோதி கிறிது வருஷம் சித்திரை மாதம் முதல்தேதி

**செய்தி** -ஆற்காடு நவாப் ஆட்சிக் காலத்தில் வழிப்போக்கர்கள் தங்க முத்தான் செட்டி மண்டபம் கட்டினர்.

1. ஸ்ரீ விரோதி கிறுது வருஷம் சித்திரை
2. மாதம் முதல் நிண்டிவனம்...
3. நவாபு சாதுக்துலா கான் சாயுபு
4. ...திண்டிவனம்
5. நகரம் அயின ஊரில்
6. ...வாணிய
7. கோத்திரம்
8. செட்டி குமாரன் சனா
9. தம்பி செட்டிகும்....
10. ....செட்டி தம்பி......
11. முத்தப்பன் தம்பி
12. முத்தான இந்த.....
13. -15.....
14. புண்ணி[யம்]

ஆவணம் 14, ஆலை 2003, பக் 104: தமிழக தொல்லியல் கழக வெளியீடு.

## 33. அஞ்சினான் புகலிடம்' அமைத்து வரி நீக்கிய நவாபு

பேரரசர் ஔரங்கசீப் பெரும்படை ஜூரல்ஃகார்கான் தலைமையில் செஞ்சிமீது படையெடுத்தபோது, மக்கள் உயிருக்கும் பயந்தனர். அவர்கள் எல்லாம் 'நஞ்சனபேட்டை' என்னுமிடத்தில் பாதுகாப்பாகத் தங்கலாம் என்று கூறி அவ்வாறு பாதுகாப்பு அளித்தவர் சாததுல்லாகான்.

'காசாய வர்க்கக் குடிகள்' தலைக்கு நான்கு பணம் அளிக்க வேண்டும் என்றும், 'உழுகுடிகள்" கொடுக்க வேண்டிய வரியில் முக்கால் பங்கு அளிக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது.

பீஜப்பூர் சுல்தான் அலி அடில்ஷா நெசவாளர்கட்கும், மனிகை வியாபாரிகட்கும் உள்ள வரியை நீக்கினார். சுல்தானின் அதிகாரி கானி ஆஜம்கான் சாயபு 12 ஆண்டுகட்கு 'சிற்றாவம்' முதலிய வரிகளை நீக்கினார்.

Annual Report Epigraphy 617,619 of 1915

## 34. முகம்மது அலி மரைக்காயர் கட்டிய நாகூர் சத்திரம்

**இடம்**-நாகப்பட்டினம் மாவட்டம், நாகூரில் பேருந்துவழி நெடுஞ்சாலைமேல் புறம் உள்ள பழைய வீட்டுத் திண்ணைச்சுவரில் உள்ள கல்வெட்டு

**காலம்** -9.12.1812

செய்தி-நாகூர் நூர் முகமது மரைக்காயர் மகன் முகமது அலி மரைக்காயர் பொதுமக்கள் உபயோகத்திற்காகக் குளம், திருவாசல், தோட்டம், வீடு, கடை ஆகியவைகளைக் கொடையாகக் கொடுத்தார். மக்கள் 'சத்திரம்' என்று அழைக்கின்றனர். இதற்கு உதவி செய்பவர்கள் அல்லாவுடைய றெகுமத்துக்குப் பெறுவார்கள் தீமை செய்வோர் அல்லாவுடைய முனிவில் அகப்படுவார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. இன்று சத்திரம் பயன்பாட்டில் இல்லை.

**கல்வெட்டு**

1. கிகறத்து 1227 வருஷம் ஏமல்
2. ஆங்கிலா வருஷம் கார்த்திகை மாதம் 26 தேதி
3. னாகூரிலிருக்கும்
4. நூறு முகம்மது மரைக்காயர்
5. குமரர் முகம்மது அலி மரைக்காயர்
6. அல்லாவுக்காக வெகு ச
7. னங்களுக்கு உதவும்
8. படியாகச் செய்துவைத்த
9. குளம் திருவாசல் தோட்டம்
10. வீடு கடைத் திருப்பணி அடங்
11. கலும் தறுமம் பண்ணினதுக்கு
12. யெல்லை ராசவீதிகி மேற்க்கத்ய கீ
13. ள்புறம் தெற்கு வடக்கு சாதி
14. அடி 194 மேல்தலை சா
15. தி அடி, 206 கிளக்கு மேற்க்
16. கு சாதி அடி 295 யிதெ
17. சாற்ந்த தாராசம் தெற்க்

18. கு வடக்கு சாதி அடி 15 கி
19. ளக்கு மேற்க்கு சாதி அடி
20. 72 இதுகள் அடக்கலு
21. ம் தற்மிமத்துக்கு விட்டபடி
22. யினாலே யெந்தக் காலத்
23. நிலேயும் யிதுக்கு உதவி
24. யாக யிருக்குற பேர்கள்
25. யெல்லாம் அல்லாவு
26. டைய நெகுமத்துக்குப் பெ
27. றுவார்கள் யாதொரு
28. முகாந்திரத்திலே விகர்த
29. ம் நினைக்குற பேர்கள் யெ
30. ல்லாம் அல்லாவுடை
31. ய முனிவில் அகப்படு
32. வார்கள்

“கல்வெட்டு” இதழ் 88: அக்டோபர் 2005; தமிழ்நாடு தொல்லியல்துறை வெளியீடு,

# 35. தஞ்சை பெரிய கோயிலில் சோனகன் சாவூர் பரஞ்சோதி

மாமன்னன் முதலாம் இராசராசன் காலத்தில் (985-1014) சுட்டப்பட்ட ஈடும் எடுப்பும் அற்ற தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் காந்தருவிகளுக்கும். தளிச்சேரிப் பெண்டுகளுக்கும் நாயகம் செய்யும் (தலைவர்) உயர் அலுவலராக இருந்தவர் 'சோனகன் சாவூர் என்பவர் ஆவார். அவர் தஞ்சாவூர்ப் புறம்படியில் இராஜவித்யாதரப் பெரும் தெருவில் வாழ்ந்து வந்தார்.

அவர் மூன்று தவணைகளில் (5+15+12) 32 பொற்காசுகள் கொடுத்து 96 ஆடுகளை விளக்கெரிக்கத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் மூலப்பொருளாக வைத்தார். இவருக்குப் பரஞ்சோதி என்ற பெயர் பட்டப் பெயராக விளங்கியது.

சோனகன் காவூர் இராசேந்திரசோழன் காலத்தில் (1012-1044) கங்கை கொண்ட சோழபுரத்தில் பெருந்தரத்து அதிகாரியாகவும்; நமந்திர ஓலை நாயகமாகவும் இருந்துள்ளார். இவை இரண்டும் பொறுப்பான பெரும் பதவிகள் ஆகும். இராசேந்திர சோழனால் சோனகன் சாவூருக்கு 'இராசேந்திர சோழக் கந்தருவப் பேரரையன்' என்ற உயர் பட்டமும் அளிக்கப்பட்டது.

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட முதலாம் ராசேந்திர சோழனின் ஏசாயம் செப்பேட்டில் இதே சாவூர்சோனகன் பரஞ்சோதி 'ஓலைநாயகம்' என்ற உயர் அதிகாரியாக "சோனகள் சாவூர் பரஞ்சோதி ஆன இராஜேந்திரச் சோழக் கத்திருவர் பேரரயன்" என்று குறிக்கப்படுகின்றன. டாக்டர்.எ.சுப்பராயலு, 4. கிருஷ்ணமூர்த்தி. மா. சந்திரமூர்த்தி ஆகியோர் 'சோனகள்' என்று படித்து இஸ்லாமியர் என்று சரியாக எழுதியிருக்க, முன்னாள் தொல்லியல் துறை இயக்குநர்கள் டாக்டர் இரா. நாகசாமியும், நடன.காசிநாதனும் 'சோழகன்' 'சோழகோள்" என்று பிழையாகப் படித்துள்ளனர். 'சோனகன்' என்று தெளிவாக உள்ளது.

சோனகன்' என்ற சொல்லுக்குத் தமிழ் அகராதிகள் துலுக்கர் என்றே பொருள் கூறுகிறது. இராசராசன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்குக் கொடுத்த அணிகலன்களில் 'சோளகச்சிடுக்கு' என்பதும் ஒன்றாகும்."சோனகன்விளை, சோணகன் பேட்டை" என்பன தமிழ் நாட்டு இசுலாமிய ஊர்களாகும். கடலூர். தொண்டி, காயல்பட்டினம் போன்ற ஊர்களில் இசுலாம் பெருமக்கள் வாழும் தெருக்கள் "சோனகர்" தெரு என்று அழைக்கப்படுகிறது.4"

1. S.L.I Vol | | No 95
2. EC. Vol X No 3
3. தமிழ்நாட்டுச் செப்பேடுகள், முதல் தொகுதி பக் 341, 342
4. "எசாலம் வரலாற்றுப் புதையல்" பக் – 104

# 36. ஆனைமங்கலம் செப்பேட்டில் துருக்கன் அகமது

கடாரத்து மன்னன் மாறவிஜயோத்துங்கபன்மன் சோழநாட்டு நாகப்பட்டினத்தில் கட்டிய சூளாமணி பௌத்த விகாரத்திற்கு இராசராசன் (985-1014) ஆனைமங்கலம்' என்ற பேரூரைக் கொடையாக அளித்தான். இராசேந்திரன் காலத்தில் அதற்குரிய செப்பேடு எழுதப்பட்டது. அந்த ஆனைமங்கலச் செப்பேடுகள் 'லெய்டன்" நகர அருங்காட்சியகத்தில் உள்ளது.

அந்தக் கொடைக்குப் பல ஊர் உயர் அலுவலர்கள் கையெழுத்திட்டுள்ளனர். அச்செப்பேட்டில் முக்கியமான பகுதி:

"க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுப் பட்டனக் கூற்றத்துப் பிரமதேயம் சன்னமங்கலத்துச் சபையோம் சொல்ல எழுதினேன் இவ்வூர்க் கரணத்தான் மத்யஸ்தன் துருக்கன் அகமுதனேன். இன என் எழுத்து என்றும் இப்படி பிடி சூழ்ந்து பிடாகை நட அறவோலை செய்து கொடுத்தோம்."

'துருக்கர்" என்பது இசுலாமியர்களைக் குறிக்கும் சொல் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய கொங்கு நாட்டு அடியார்க்கு நல்லார் 'யவனத் துருக்கர்" என்ற சொல்லைக் கையாளுகிறார்.

1. கல்வெட்டு ஓர் அறிமுகம். பக்-6
2. ஆனைமங்கலச் செப்பேடு இச்செப்பேடு லெய்டன் நகர அருங்காட்சியகத்தில் உள்ளது

## 37. திருமுருகன் பூண்டி ஆவணத்தில் இஸ்லாமியர்

மதுரை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் கோவை மாவட்டத்துத் திருமுருகன் பூண்டி, அவிநாசி, மங்கலம் முதலிய ஊர்களைப் பாலவேளாளர் பைசலிய கோத்திர வீரவிக்கிரம சோழியாண்டாக் கவுண்டர் நிர்வாகம் செய்து வந்தார். அவர் மதுரைக்கு வரிப்பணம் 15000 பொன் செலுத்த முடியாதபோது எழுமாத்தூர்ப் பனங்காடைகுலக் கொங்கு வேளாளர் பொய்ங்காக் கவுண்டரும். மருதுறை ஆந்தை குலத்து செல்லப்பக் கவுண்டரும், கொற்றனூர் ஆந்தை குல சரவணக் கவுண்டரும் ஆளுக்கு 5000 பொன் வீதம் கொடுத்து வீரவிக்கிரம சோழியாண்டாக் கவுண்டரிடம் அவ்வூர்களை விலைக்கு வாங்கினர்.

அவ்வூர்களின் காணியுரிமை மாற்றத்தை உள்ளூர்ப் பொதுமக்கள் பலரும் ஆதரித்துக் கையெழுத்திட்டனர். அவர்களில் மூவர் இஸ்லாமமியர். பட்டயத்தில்

'முசலிமான் சேக்கு அப்துல்கான்,இபுராமு,மீராகன் மம்முது கான்" என்று காணப்படுகிறது.

கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள். தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு

## 38. பட்டக்காரர் பட்டாபிஷேகத்தில் சுமால்சாயபு பங்கு

இராமாயணத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சி இராமன் முடிசூடல். அம்முடி சூட்டு நிகழ்ச்சியில் மிக முக்கியமானவர்கள் பட்டாபிஷேகச் சடங்கில் பங்கு பெறுவார்கள். இராமர் பட்டாபிஷேகத்தில் அங்கதன் உடைவாள் ஏந்தியதாகக் கம்பர் பாடுகிறார். அங்கதன் வாலியின் மைந்தன்.

பழைய கோட்டைப் பட்டக்காரர்கட்கு முடிசூட்டும் பட்டாபிஷேக நிகழ்ச்சி மிக முக்கியமானது. கொங்கு நாட்டுப் பிற பட்டக்காரர்களும், பாளையக்காரர்களும், மிட்டாதார். மிராசுதார்களும், அரசு அலுவலர்களும், உற்றாரும் உறவினரும் கூடி செய்யும் மிக முக்கியமான நிகழ்ச்சி. அம்முடிசூட்டு விழாவில் முக்கியமான சடங்குகளில் மிக முக்கியமானவர்கள் மட்டுமே நேரடியாகப் பங்கேற்பர் பட்டாபிஷேகத்தில் பழையகோட்டை மரபு அரண்மனை ஆயுதங்களான சமுதாடு, வல்லயம், சொட்டை முனை என்ற ஆயுதங்களைப் பிடித்துப் பட்டாபிஷேகத்தில் பங்கு பெறும் உரிமை இசுலாமியப் பெரியவர்கட்கு அளிக்கப்பட்டிருந்தது.

19ஆம் பட்டக்காரர் கொற்றவேல் சர்க்கரை மன்றாடியார் முடிசூட்டுவிழா பழையகோட்டையில் நடைபெற்றது. அந்நிகழ்ச்சியில்,

"போர்வீரராம் ஐதர்அலி சர்க்காரின்

புலி போன்ற தாசில்களும்

புனிதமுன சிரஸ்துகளும் ஒருபுறம்"

(தாசில்தார், சிரஸ்தார்கள்) வீற்றிருந்தனர்.

முடிசூட்டும்போது சமுதாடு வல்லயம் பழைய கோட்டைக் கேயுரிய சொட்டை முனை ஆயுதங்களைக் கமால் சாயபு பிடித்து நின்றதாகச் சடைப் பெருமாள்பிள்ளை பாடிய திண்ட

பாடலில் காணப்படுகிறது.

”தங்காது விசிறிவெண் சாமரை ளதுவீச

தகுந்தவா சனைதிமிர்த்து

சந்தனம் புஷ்பங்கள் பன்னீர்க ஈதுவீச

சமூகவித் வான்கள்பாட

சதுர்மறைக னோடுவெகு மறைகளும் ஓத

சக்கரக் குடைபிடிக்க

சமுதாடு வல்லார் சொட்டை யைக்கமால்

சாயயு பிடித்து நிற்க

என்பது பாடல் பகுதி

பழையகோட்டை மரபுப்பாடல் எண் 47, பக்கம் 60

## 39. செந்தில் திருப்பணியில் சீதக்காதி

திருச் சீரலைவாய் என்று சிறப்பிக்கப்பெறும் திருச்செந்தூர் முருகன் கோயில் பெரும் புகழ்பெற்றது. புறநானூறு, சிலப்பதிகாரம், திருமுருகாற்றுப்படை முதலிய இலக்கியங்களில் சிறப்பிக்கப் படுவது. முருகப் பெருமானின் அறுபடைவீடுகளில் இரண்டாவது. அருணகிரிநாதர் இத்தலத்திற்கு 83 திருப்புகழ்ப் பாடல்கள் பாடியுள்ளார்.

இக்கோயிலில் மிகப் பெருமை மிக்கது. மேலைக் கோபுரம் ஆகும். அதனை முன்னின்று கட்டும் திருப்பணியை மேற்கொண்டவர் திருவாவடுதுறை ஆதீன ஓடுக்கத் தம்பிரான் தேசிசு மூர்த்தி சுவாமிகள். அவர் கோயில் அருகில் உள்ள திருவாவடுதுறைக் கட்டளை மடத்தில் தங்கித் திருப்பணி வேலையை மேற்கொண்டு வந்தார்.

ஒன்பது நிலைகளையுடைய அக்கோபுரத் திருப்பணி ஆறு நிலைகள் கட்டியவுடன் பொருள் தட்டுப்பாடு ஏற்பட்டது. திருப்பணி வேலை நின்றுவிட்டது. தேசிக மூர்த்தி சுவாமிகள் மிக வருத்தினார். முருகனை வேண்டினார்.

ஒருநாள் அவர் கனவில் முருகன் தோன்றி “வள்ளல் சீதக்காதி கீழக்கரையில் உள்ளார் அவரிடம் செல்க” என்று கூறினார்.

தேசிகர் கீழக்கரை சென்றார். சீதக்காதியைக் கண்டார். சீதக்காதி அவர் கருத்தறிந்து ஒரு மூட்டை உப்பைக் கொடுத்துக் கோயிலுக்குச் சென்று அவிழ்த்துப் பார்க்குமாறு கூறினார்.

அவ்வாறே கோயில் வந்த தீட்சிதர் உப்பு மூட்டையை அவிழ்த்துப் பார்த்தார். உள்ளே ஏராளமான தங்கக் காசுகள் ருந்தன. அவற்றைக் கொண்டு தேசிகர் கோபுர வேலையை விதே முடித்தார். இந்த அரிய செய்தி திருச்செந்தூர் தல் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது.

திருச்செந்தூர்க் கோயில் வரலாறு - தேவஸ்தான வெளியீடு.

## 40. வேளாள புராணத்தைப் புகழ்ந்த ஐயாவு ராவுத்தர்

இவர் ஈரோடு மாவட்டம் காங்கயத்தைச் சேர்ந்தவர். காங்கயம் அட்டாவதானி சேசாசலக் கவிராயரிடம் தமிழ் கற்றுப் பெரும்புலவராக விளங்கினார். இவர் செய்த தொழில் காளை, குதிரைகட்கு லாடம் அடிக்கும் வேலை! “லாடவேலை” ஐயாவு ராவுத்தர் என்றே இவர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

வீராட்சி மங்கலம் கந்தசாமிக் கவிராயர் பாடிய வேளாள புராணத்தைக் கொங்கார்பாளையம் முத்துசாமிக் கவிராயர் ஈரோடு நித்திய கலியாண சுந்தரம் அச்சுக் கூடத்தில் 1907ஆம் ஆண்டு அச்சிட்டார். அந்நூலுக்கு ஐயாவு ராவுத்தர் சாற்றுக்கவிகள் அளித்துள்ளார். ஐயாவு ராவுத்தர் காங்கயம் அட்டாவதானி சேஷாசலக் கவிராயரிடம் தமிழ் கற்றவர்.

1) மணிதாங்கும் எழில் மாடம் அவருங்காழில் வீராட்சி
மங்கலத்தில்
மினிதாங்கும் அகல்ஞாலம் முழுதேத்த வந்ததிக
பாவவல்லோரின்
அனிதாங்கும் கலிகந்த சாமிரனும் நாமவன்
அன்பின் கீர்த்தி
கணிதாங்கும் குவளைமாக் காராளர் குலப்பெருமை
கதிக்கவேண்டி

2) சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும்
தொடராஇன்பத்து
என்நோக்கம் நள்ளோக்காய் இசையும்நிலக் காணமுறையின்
ஏயும் அன்பால்
முன்நோக்கும் புலவர் அவர் தம்நோக்கும் தன்நோக்காய்
பொழிய நாளும்
பன்னோக்கும் ஆர்ந்திடும்வே ளாளர்புரா எணத்தை இங்கு
பணிந்து தந்தாள்

என்பவை அவற்றில் இரு பாடல்களாகும்.

## 41. கந்தன் சர்க்கரைக்கு வாள் பயிற்சி தந்த காதர் பாட்சா

தமிழ்நாட்டில் பல வேலூர்கள் உண்டு. அதனால் வட ஆர்க்காடு மாவட்டத்திலிருந்து பிரிந்து மாவட்டத் தலைநகராக விளங்கும் வேலூரை மக்கள் ராய வேலூர் (அரசர் உள்ள வேலூர்) என்று அழைப்பர்.

அங்கு 16ம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் மிகப் புகழ்வாய்ந்த வாள்போர் வீரர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் காதர் பாட்சா என்பதாகும். வாள்போர் பயிற்சி அளிப்பதில் காதர் பாட்சா மிகவும் வல்லவர்.

ஈரோடு மாவட்டம், காங்கயம் வட்டம், பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் கொங்கு வேளாளர் சமூகத் தலைவர்கள் ஆவர். அப்போது 14ஆம் பட்டக்காரராக இருந்த சுந்தன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் வாள் பயிற்சி பெற, குறிப்பாக இரண்டு சைகளிலும் இரு வாள்களை வைத்துக் கொண்டு இரு கைகளாலும் சண்டை செய்யப் பழக வேண்டும் என்று விரும்பினார்.

காதர் பாட்சா பழைய கோட்டைக்கு வந்தார். பழைய கோட்டை அரண்மனையில் தங்கி 48 நாட்கள் பயிற்சி அளித்தார். பட்டக்காரர் இருகைகளிலும் வாள் எடுத்துச் சண்டை செய்யவும் வல்லமை பெற்றவர். பட்டக்காரர் மிக மகிழ்ந்து அவருக்குப் பயிற்சி அளித்த தொகையுடன் ஒரு குதிரையையும் இனாமாகக் கொடுத்தார். இந்நிகழ்ச்சியைப் பழையகோட்டை அரண்மனைப் சுவடிப் பாடல் விளக்குகிறது.

அட்டான நாடுபுகழ் கந்தன்சர் கணான்னும்
அதிபருக்கு
பட்டாணி முகாமதிய ராயவேலூர் காதர்
பாட்சா என்பொன்
எட்டாறு நானிளிலே இரண்டுகை யிலும்கத்தி
எடுத்து வீச
நெட்டாகப் பழக்கஒரு குதிரைஒன்று இனாம்கொடுக்க
நிலை பெற்றானே

பழையகோட்டை மரபுப் பாடங்கள் எண் 37 பக்கம் 41

# 42. பாரதப் பார்த்தனைப் பாடிய பக்கீர் சாயபு

ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலத்தைச் சேர்ந்தவர் பக்கீர் சாயபு. பெரும்புலவர். பவானி - தளவாய்ப் பேட்டை தே.ர. அரங்கநாதக் கவிராயர் இயற்றிய "அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை' என்ற நூலுக்குச் சாற்றுக்கவி அளித்துள்ளார். பக்கீர் சாயபு தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

**பாடல்**

"துதிக்கும்அருங் கவிப்புலவர் தமக்கொருளு டாமணியாய்த்

தோன்றி வையம்

மதிக்கும்உயர் அறிஞர்மதித் திடப்பார்த்தன் மாத்திரையின்

மண்யை முல்லைப்

பதிக்குரிய பரமனடி பழிச்சு,அரங்கக் கவிராஜன்

பாக்கள் தோறும்

உதிக்கும்ஒவ்வொர் பதம்பரம பதம்எனதற் சுகந்தரவே

உரைத்தான் மாதோ"

என்பது அவற்றில் ஒரு பாடலாகும்.

## 43. மாரியம்மன் புகழ்பாடிய மதார்சா ராவுத்தர்

பொள்ளாச்சி - அம்பராம்பாளையம் ஜமால் ராவுத்தர் மகன் மதார்சா ராவுத்தர் பெரும்புலவர். கோவை - பொள்ளாச்சி வழியில் உள்ள சூலக்கல் மாரியம்மன் மீது அம்மானை, சிந்து, கும்மி போன்ற நூல்களைப் பாடியுள்ளார். அவை 1909, 1919ஆம் ஆண்டுகளில் பொள்ளாச்சி கோபால விலாச அச்சுக்கூடத்தில் அச்சிடப் பட்டுள்ளன.

கணித சக்கரம் உள்ளவனாம் - மாரி
கம்பீரமான பரஞ்சோதி
பணிதி அளித்திடும் மாரிக்கன் - பதம்
பாக்கும்மி அடிங்கடி

என்பது கும்மிப் பாடல்களில் ஒன்று.

'செந்தமிழ் பாடும்படி செப்பினாள் மாரியம்மன்' என்று பாடிய புலவர் மதார்சா ராவுத்தர் தன்னைப் பற்றிக் கீழ் வருமாறு பாடியுள்ளார்.

"ஆம்பராவதி நதிசூழ் அம்பராம் பாளையத்தில்

ஜணல் ராவுத்தர்பெற்ற தபோபல புத்திரனாம்

அங்கா பரமேசுவரி அம்புயப் பதங்களையும்

மதுரவீரன் உபய வசைமவர்த் தாளினையும்

பக்தியுடன் நாளும் பரவித் துதிசெய்வோன்

மாடன் முதலாள மற்றுமுள்ள பேல்களையும்

ஓட்டிக் கருவறுக்கும் உத்தமனாம் மதார்சா"

இவருடைய நூல்களுக்குப் புரவிபாளையம் ஜமீன் சமஸ்தானத்

தமிழ்ப் புலவர் சாற்றுக்கவி அளித்துள்ளார்.

”மதார்சா ராவுத்தர் மாரியம்மன் பேரால்

எதார்த்த விதமாக எண்ணி - பதார்த்தமது இன்னதெனத் தேரா எளியர் அயம்அடைய சொன்னதமிழ்ப் பாலே சுகம்”

என்பது அவற்றில் ஒரு பாடலாகும்.

உதவி, முனைவர் நா. கணேசன், ஹூஸ்டன், அமெரிக்கா

# 44. பட்டக்காரர் மீது நான்மணிமாலை பாடிய அப்துல் சுகூர் சாஹிப்

இவர் கோவை மாவட்டம் கணியூரைச் சேர்ந்தவர். தமிழ்ப் புலவர், பண்டிதர் எனப் பலராலும் பாராட்டப் பெற்றவர். இவரைக் கொங்கு நாட்டுப் புலவர் தலைமணி" என்று கி.ஆ. பெ. விசுவநாதம் பாடியுள்ளார். 26ஆவது பழைய கோட்டைப் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் மீது இவர் 'நான்மணி மாலை' என்ற இலக்கியம் பாடியுள்ளார். இந்நூல் 1930ஆம் வருடம் அச்சாகியுள்ளது. நான்மணிமாலை 40 பாடல்கள் கொண்டது. இவரைப் பற்றி ஒரு புலவர்,

"தென்னாட்டு மகமதியர் குலதிலகன்
தீன்மார்க்கத் திறமை வாய்ந்தோன்
தென்னாட்டுத் தமிழ்முனியும் திறமையற்றுப்
பின்நிற்கும் தேர்ச்சிபெற்றோன்
முன்னாட்டுப் பேரறிஞர் மனமகிழப்
பிரசங்கம் முனைந்து செய்வோன்
சொன்னாட்டும் அப்துல்சுகூர் என்றழைக்கும்
திருநாமம் துலங்கப் பெற்றோன்'

என்று பாடியுள்ளார்.

கா. அப்துல் சுகூர் அவர்கள் நூலைப் பாராட்டி ந.மு. வேங்கடசாமி நாட்டார், கி.ஆ.பெ. விசுவநாதம், திருச்சி தி.பொ. பழனியப்பாபிள்ளை, திருப்பத்தூர் கா.அ. சண்முக முதலியார், கணியூர் சுப்பராமையன், உத்தமபாளையம் ஆர். நாராயணசாமி, திருநெல்வேலி தி. கருணாலயப்பாண்டியப் புலவர், நாவலூற்று சுவாமிசிவநேசம், தாராபுரம் பஞ்சாபகேசய்யர், கோயமுத்தூர் டி.எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர், காங்கயம் தெய்வசிகாமணி முதலியார், தாராபுரம் ஆறுமுகம்பிள்ளை போன்றோர்

சாற்றுக்கவிகள் கொடுத்துள்ளனர். இந்நூலாசிரியர் தம் சொந்த ஊராகிய உடுமலை வட்டக் கணியூரில் இருந்த சன்மார்க்கச் சங்கம், தமிழ்ச் சங்கம் ஆகியவற்றில் தலைமைப் பொறுப்பு வகித்தவர்.

நான்மணிமாலை என்பது வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா

என்ற வரிசையில் அந்தாதித் தொடை அமையப்பாடுவது. அதில் ஒரு பாடல்:

"ஏர்பிடித்த காராளர் இன்குலத்து நற்றவத்தின்

சீர்பிடித்த நல்லதம்பிச் சீமான்போல் - யார்பிடித்தார்

வாகையெனும் மாலையணி மாஅரையர் இன்குழுவில்

ஈகையெனும் மாகொடையை யே"

(பாடல் எண் 13)

இணையிலான் றுணை.

## நல்லதம்பிச் சர்க்கரையார்,

# நான்மணி மாலை.

காப்பு.

நேரிசை வெண்பா.

நான்மணிமா லைப்புயத்து நல்லதம்பிச் சர்க்கரைமேல்
நான்மணிமா லைப்பா நவிலுவிக்கும்—நான்மணிமா
மேவுநில விற்பொலியும் வேதமுக னுட்பொருளை
நாவுநில வப்புகழ்வ னன்கு.

11-8-1930.

## நூல்.

நேரிசை வெண்பா.

பொன்பூத்த நல்லதம்பிப் பூமான் புகிபுரக்க
மின்பூத்த மாமயிலே! மேவாவேல்—கொன்பூத்த
நல்லரசெங் கேதவத்தி னற்றவசெங் கேதமிழின்
வல்லரசெங் கேவழுத்து வாய். 1

கட்டளைக்கலித்துறை.

வாய்மை தவறு மனத்தா லெவர்க்கும் வழங்குவன்
றூய்மை புருபாவிட் பாமாலை தோளிற் சுமப்பவன்காண்
செய்மையுள் ளாரும் புகழ்நல்ல தம்பிசஞ் சீரியசற்
றுய்மை யுடைய விவன்கீர்த்தி சேடனுஞ் சாற்றுவனோ? 2

அறுசீர் விருத்தம்.

சாற்றவரும் புகழ்ப்பழைய கோட்டைநகர் சக்கரமுன்
தவமே யாய்ந்து
சோற்றவரும் புண்ணியமோ தவல்சைவ முளுற்பிபகன்
னெனபா னேயோ

...

## 45. வெள்ளையம்மாளுக்கு சர்தார் பெற்றுத்தந்த உரிமை

ஈரோடு மாவட்டம், காங்கயம் வட்டம் காடையூரில் கொங்கு வேளாளரில் சேடகுலப் பெரியவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு வெள்ளை நிறமாக ஒரு பெண் பிறந்ததால் எவரும் திருமணம் செய்து கொள்ள முன்வரவில்லை. அவளை மணம் செய்து கொள்பவர்களுக்குத் தன் உரிமையில் கால்யங்கு தருவதாக அறிவித்தார் (கால் காணி). அப்பெண்ணின் பெயர் வெள்ளையம்மாள்.

நாமக்கல் வட்டம், திருச்செங்கோடு வட்டம் கருமாபுரத் திலிருந்து கால்நடைப் பட்டியை ஓட்டிவந்த காங்கேயன் (பொருள்தந்தகுல வேளாளர்) அதற்கு உடன்பட்டுத் திருமணம் செய்துகொண்டு மாமனார் வீட்டிலேயே தங்கிவிட்டான்.

சேடகுலப் பெரியவர் இறந்துவிடவே அவர் மக்கள் நால்வரும் கால்காணி தர மறுக்கின்றனர். காங்கேயனைக் கொன்றுவிட்டுத் தங்கையைக் கணவர் ஊருக்குத் துரத்துகின்றனர்.

காங்கயத்தில் அப்பெண்ணையும் அவள் குழந்தைகளையும் சந்தித்த குதிரைவீரர்கள் தலைவராகிய ஒரு இசுலாமிய சர்தார் உதவியால் அவளுக்குக் கால்காணி மட்டுமல்லாது முழுக்காணி உரிமைகளையும் கொடுத்துவிட்டுச் சேடகுலச் சகோதரர்கள் ஊரைவிட்டே போய்விடுகின்றனர்.

குலகுருவின் ஆலோசனைப்படி வெள்ளையம்மாள் இனி தன் வழியினர் இஸ்லாமிய சர்தாருக்கு நன்றிக் கடனாக ஆண்மக்கள் காது குத்தாமலிருந்து பின் திருமணம் செய்ய வேண்டும் என்று விரும்பினாள். இன்றும் அவ்வாறே அவர் வழியினர் செய்து வருகின்றனர். காது குத்தாமல் இருப்பதால் அவர்கள் 'முழுக்காது குலத்தினர்" என்று அழைக்கப்படுகிறார்கள். கொங்கு வேளாளரில் பொருளந்தை குலத்தினர் காடையூர்க் காணியாளர்களை மட்டும் முழுக்காது குலம் என்று அழைக்கப்படுகிறார்கள்.

சர்தார் செய்த உதவியால் வெள்ளையம்மாள் பெற்ற காணி விபரத்தைக் 'கண்ணாடிப் பெருமாள்" என்பவர். ஒரு காவியமாகவும பாடியுள்ளார். காடையூர் சிவன் கோயிலில் இந்நிகழ்ச்சி ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

காடையூர் முழுக்காது குல வரலாறு: புலவர் செ. இராக

# 46. -A. ஹைதர் அலி மதித்துப் போற்றிய கிறித்தவப் பாதிரியார்

ஆங்கிலேயக் கிழக்கிந்திய கம்பெனியின் நாடு பிடிக்கம் ஆசையால் கம்பெனி வெள்ளையர்கள்மீதும், பிற வெள்ளையர்மீதும் ஹைதர் அலி கொண்ட கோபம் யாவரும் அறிவர்.

ஆனால் கிறித்தவப் பாதிரிமார்களிடம் அன்பும் இரக்கமும் கொண்டிருந்தார். மைசூர் சீரங்கப்பட்டணத்தில் அவர் மாளிகை அருகிலேயே மேனாட்டுப் பாதிரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார்.



...

பிரஷியா நாட்டில் சோனேபர்க் என்ற ஊரில் 1726-ல் பிறந்தவர் கிறிஸ்டியன் ஃபிரரெடரிக் ஸ்வார்ட்ஸ். 1749ல் டேனிஷ் மிஷனரிக் குழுவில் இடம்பெற்று கிழக்கிந்தியர் கம்பெனிக் கப்பலில் பயணம் செய்து 17.7.1750ல் கடலூர் வந்தார். 10 ஆண்டுகள் தரங்கம்பாடியில் இருந்தார். 1754-ல் கடலூர். 1758 நாகை. 1760 இலங்கை 1766-1776 திருச்சியில் பணியாற்றிப் பின் தஞ்சையில் வாழ்ந்து 13.2.1798ல் மறைந்தார்.

கிழக்கித்தியக் கம்பெனியில் செல்வாக்கு பெற்றிருந்த அவர் ஹைதர் அலிக்கும் - கம்பெனிக்கும் சமரசம் செய்து வைக்க விரும்பி ஹைதர் அலியையும் இருமுறை சந்தித்துள்ளார். ஹைதர் அலி ஸ்வார்ட்ஸ் மீது மிகுந்த மரியாதை வைத்திருந்தார்.

தன் நாட்டில் உள்ள எல்லா அதிகாரிகளும் ஸ்வார்ட்ஸ் பாதிரியாருக்கு எந்தத் தொல்லை

யும் கொடுக்கக்கூடாது என்றும், அவர் மிகப் புனிதமான மனிதர் என்றும், அவருக்குப் பாது காப்புக் கொடுத்த வேண்டும் என்றும் ஹைதர் அலி ஆணை பிறப்பித்திருந்தார். கிழக்கிந்திய கம்பெனி ஸ்வார்ட்ஸ் இயக்குநர்கள் பாதிரியாருக்கு

*தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள்: செ.இராசு; தமிழ்ப் பல்கலைக்கழக

வெளியீடு பக்கம் 85. 86, 87

மரியாதை செலுத்த ஒரு நினைவுக் கல்வெட்டுப் பொறித்தனர். அந்த ஆங்கிலக் கல்வெட்டு சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டை யில் உள்ள தூயமேரி தேவாலயத்தில் வைக்கப்பட்டுள்ளது. அதில் மேற்கண்ட ஹைதர் அலியின் ஆணை பற்றிய குறிப்பு வருகிறது.

**சென்னை புனிதமேரி தேவாலயக் கல்வெட்டு**

கிழக்கிந்திய கம்பெனியின் இயக்குநர்கள் சுவார்ட்சு பாதிரியாருக்குத் தங்கள் புகழஞ்சலியைத் தெரிவிக்கும் பொருட்டு 1807ஆம் ஆண்டு சென்னைக் கோட்டைக்குள் அமைந்துள்ள தூய மேரி தேவாலயத்தில் ஒரு நினைவுக் கல்வெட்டைப் பதித்தனர். அதில் கீழ்வருமாறு ஆங்கில உரைநடையில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் ஸ்வார்ட்சு பாதிரியாரின் வாழ்வுப் பணிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

SACRED IN THE MEMORY OF

THE REV CHRISTIAN FREDERIC SWARTZ.

WHOSDE LIFE WAS CONTINUED EFFORT TO IMITATE THE EXAMPLE

HIS BLESSED MASTER

EMPLOYED AS A PROTESTANT MISSIONARY FROM THE

GOVERNMENT OF DENMARK.

AND IN THE SAME CHARACTER BY THE SOCIETY IN ENGLAND FOR

THE PROMOTION OF CHRISATIAN KNOWLEDGE

HE DURING A PERIOD OF FIFTY YEARS, 'WENT ABOUT DOING GOOD"

MANIFESTING IN RESPECT TO HIMSELF, THE MOST ENTIRE

ABSTRACTION FROM TEMPORAL VIEWS.

BUT EMBRACING EVERY OPPORTUNITY OF PROMOTING BOTH THE

TEMPORAL AND ETERNAL WELFARE OF OTHERS.

IN HIS RELIGION APPEARED NOT WITH A GLOOMY

ASPECT, OR FORBIDDING MIEN.

BUT WITH A GRACEFUL FORM AND PLACID DIGNITY.

AMONG THE MANY FRUITS OF HIS INDERATIGABLE LABOURS WAS THE

ERECTION OF THE CHURCH AT TANJORE

THE SAVINGS FROM A SMALL SALARY WERE, FOR MANY

YEARS, DOVOTED TO THE PIOUS WORK

AND THE REMAINDER OF THE EXPENSE SUPPLIED BY INDIVIDUALS

AT HIS SOLICITATION

THE CHRISTIAN SEMINARS AT RAMNADPORAM AND IN THE

TINNEVELLY PROVINCE WERE ESTABLISHED BY HIM.

BELOVED AND HONOURED BY EUROPEANS

HE WAS IF POSSIBLE, HELD IN STILL DEEPER REVERENCE BY THE

NATIVES OF THIS COUNTRY, OF EVERY DEGREE AND EVERY SECT. AND

THEIR UNBOUNDED CONFIDENCE IN HIS INTEGRITY AND TRUTH.

WAS, MANY OCCASIONS.

RENDERED HIGHLY BENEFICIAL IN THE PUBLIC SERVICE

THE POOR AND INJURED

LOOKED UP TO HIM AN UNFAILING FRIEND AND ADVOCATE

THE GREAT AND POWERFUL

CONCURRED IN YIELDING HIM THE HIGHEST HOMAGE EVER PAID IN THIS

QUARTER OF THE GLOBE TO

EUROPEAN VIRTUE

THE LATE HYDER ALLY CAWN,

IN THE MIDST OF A BLOODY AND VINIDCTIVE WAR WITH THE CARNATIC

SENT ORDERS TO HIS OFFICERS

”TO PERMIT THE VENERABLE FATHER SWARTZ

TO PASS UNMOLESTED, AND SHOW HIM RESPECT AND KINDNESS,

FOR HE IS A HOLY MAN, AND MEANS NO

HARM TO MY GOVRNMENT”

THE LATE TULJAJEE RAJA OF TANJORE,

WHEN ON HIS DEATH-BED DESIRED TO ENTRUST TO HIS PROTECTING CARE

HIS ADOPTED SON, SERFOJEE, THE PRESENT RAJA WITH THE

ADMINISTRATION OF ALL THE AFFAIRS OF HIS COUNTRY.

ON A SPOT OF GROUND, GRANTED TO HIM BY THE SAME PRINCE.

TWO MILES EAST OF TANJORE

HE BUILT A HOUSE FOR HIS RESIDENCE, AND MADE IT

AN ORPHAN ASYLUM

HERE THE LAST TWENTY YEARS OF HIS LIFE WERE

SPENT IN THE EDUCATION

ADN RELIGIOUS INSTRUCTION OF CHILDREN,

PARTICULARLY THOSE OF INDIGENT PARENTS, WHOM THE

GRATUITOUSLY

MAINTAINED AND INSTRUCTED,

AND HERE 13TH OF FEBRUARY 1798,

SURROUNDED BY HIS INFANT FLOCK, AND IN THE PRESENCE OF

SEVERAL OF HIS DISCONSOLATE BRETHREN.

ENTREATING THEM TO CONTINUE TO MAKE RELIGION

THE FIRST OBJECT OF THEIR CARE,

AND IMPLORING WITH HIS LAST BREATH THE DIVINE

BLESSING OF THEIR

LABOURS

HE CLOSED HIS TRULY CHRISTIAN CAREER IN THE

72ND YEAR OF HIS AGE

THE EAST INDIA COMPANY

ANXIOUS TO PERPETUATE THE MEMORY OF SUCH TRANSCENDENT WORTH

AND GRATEFULL SENSIBLE OF THE PUBLIC BENEFITS WHICH

RESULTED FROM HIS INFLUENCE

CAUSED THIS MONUMENT TO BE ERECTED

ANN, DOM 1807,

The monument was erected by

Bacon, Junior Sculptor, London, 1806

# 47. நாகூர் தர்காக் கல்வெட்டுக்கள்

நாகூர் தர்காவில் உள்ள கல்வெட்டுக்கள் ஒன்றாகத் தொகுத்து கொடுக்கப்பட்டுள்ளன.

இடம் -நாகூர் தர்கா உள் மினார்

காலம்-தஞ்சை நாயக்கர் விசயராகவ நாயக்கர் (1640-1674) காலம் பார்த்திப ஆடி. 15; கி.பி. 3.7.1645

செய்தி-தஞ்சை நாயக்க மன்னரின் அதிகாரியாக இருந்த நாகூர் மீரா ராவுத்தர் உள் மினாரைக் கட்டினார் (முழுவதும் காறை பூசி மறைந்திருந்த இக்கல்வெட்டு அடையாளம் காணப்பட்டு காறை பெயர்த்தெடுக்கப்பட்டு படிக்கப் பட்டது)

**கல்வெட்டு**

1. விசயராகவ நாயக்கர் கொடை
2. பாத்திய வருஷம் ஆடி மாதம் 10 தேதிஸ்ரீ விசையராவுக
3. நாயக்கய்யன் காரியத்துக்குக் கர்த்தரான
4. மதாறு ராவுத்தர் நாவூர் மீரா ராவுத்தர் முத
5. ல் வாசலில் கட்டின மினாற் மிரா ராவுத்தர் த
6. ம்மத்துக்கு அருதம் பண்ணின பேர்
7. மக்கத்திலே அகுதம் ப
8. ண்ணின பாவத்திலே
9. போக கடவாராகவும்
10. கெங்கைக் கரையில் காரா
11. ன் பசுவை கொன்ற பா
12. வத்திலே போககடவாராகவும்

**பிரதாபசிங் கொடை**

**இடம்**-நாகூர் தர்கா முன்னர் உள்ள வெளி மினார்

**காலம்**-தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாப சிங் மகாராசா (1739-1763) காலம், யுவ வருடம் தை மாதம் 11; கி.பி. 1755.

**செய்தி**-தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் மகாராசா வெளி மினார் கட்டி வைத்தார். நாகூரில் அதிகாரியாக இருந்தவர் சேக் அப்துல் மலிக் அவர்கள் குறிக்கப் பெறுகிறார்.

மராட்டிய அதிகாரிகள் மானோசி செகதாப், ராமோசி நாயக்கர் ஆகியோரும் குறிக்கப் பெறுகின்றனர்.

**கல்வெட்டு**

1. அசரத்து மீறா சாயிபு
2. ராஸ்ரீ பிறதாபசிங்கு ம
3. காராசா சாயிபு அவர்
4. கட்டிவச்ச மணாறா
5. ரா. மானோசி சிகதாபு ரா.
6. அவர்கள் ராரா, ராமோசி
7. னாயக்கர் அவர்கள் மத்தி
8. ஷத்தில் உத்தாரப்படிக்கு சேகு
9. மலிக்கு நாகூர் மத்திஷத்
10. தில் மனாரா பதினொரு நிலம் க
11. ட்டி முடிஞ்சுது யுவ வருஷம் தை மாதம்
12. நேதி கும்பம் வச்சது

**3. பிரதாபசிங் மகாராசா**

இடம்-மேலே உள்ள கல்வெட்டில் தென்புறம் உள்ள கல்வெட்டு

காலம்-1752ல் மினார் கட்டத் தொடங்கியதைக் குறிக்கிறது. 1752ல் கட்டத் தொடங்கி, 1755ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது.

**கல்வெட்டு**

1. ஆங்கிரஸ வருஷம் மாசி மாதம் 9
2. அசறது மீரா சாயிபு அவர்கள் த
3. ற்காவில் இந்த மினாற் பதினோர
4. ங்கணம் ரா. பிறதாபசிங்கு மகா
5. ராசா சாயிபு அவர்களுடைய தற்மம்
6. சேகு அப்துல் மல்லிகையவர்கள் ராம
7. ரசா சாயிபு அவர்கள் உத்தாரப்
8. டிக்கு கட்டி வைத்த மனா

9. ரா

**4. தங்கக் கலசம் வைத்த காசியப்பா ராவுத்தர்**

மேற்படி மினார் கீழ்புறக் கல்வெட்டு

1. திருச்சிராப்பள்ளி பாலக்கரை
2. ம. காசியப்பா இராவுத்தரால்
3. இம் மினாரின் சிகரத்தில்
4. நங்கக் கலசம் வைக்கப் பெற்றது
5. 1916

**5. கோவிந்தசாமி செட்டி கொடை**

நாகூர் காகா தனம் பாவிய கல்வெட்டு

1. 1923 நவம்பர் மாதம்
2. நாகூர் 2 பக்திரி
3. செட்டியார் குமா
4. றன் கோவிந்த
5. சாமி செட்டியால்
6. போடப்பட்டது

**6.தங்கக் கவசம் வைத்த மகாதேவ அய்யர் வடக்கு மனோரா கல்வெட்டு**

வடக்கு மனோரா கல்வெட்டு

1. உ
2. கூத்தா நல்லூர்
3. எஸ். மகாதேவ ஐயர் அவர்களால்
4. தங்க கலசம்
5. வைக்கப்பட்டது
6. 9.2. 1956

**7. செய்கு தாவூது வைத்த தங்கக் கலசம் கீழ்ப்புறக் கல்வெட்டு**

1. கரைப்பாக்கம்
2. ஜனாப் கு. செய்கு தாவூத் அவர்களால்

3. இந்த மணவறாவின் சிகரத்தில்
4. தங்கக் கலசம் வைக்கப்பட்டது
5. ஹிஜ்ரி 1374 ஷப்பால் 10 தேதி மன்மத வருஷம்
6. வைகாசி 19 தேதி 1955 ஜூன் 2 தேதி

**8. குஞ்சு மரைக்காயர் கட்டிய பீர் மண்டபம் பீர் மண்டபத்தில் உள்ள கல்வெட்டு**

காலம் - ஹஜ்ரி 972 றசப் மாதம்

செய்தி - குஞ்சு மரைக்காயர் காதார் மீரா சாயபு தன் சொந்தப் பணத்தில் பீர் மண்டபம் கட்டிய செய்தி கூறப்படுகிறது.

**கல்வெட்டு**

1. பீர் மண்டபம்
2. பிசுமில்லாகி
3. றரு கிசரத்து
4. 972 வெருஷம் றசப்
5. மாதம் முதல் நாகர் கலா
6. ரத்து சாகுல் கமீதொலி
7. ஆண்டவரவர்கள் சீசறு
8. மான குஞ்சு மரைக்
9. காயர் முகம்மது அ
10. பு பக்கர் மரைக்கா
11. யரவர்கள் குமாரரு
12. மாகிய குஞ்சு மரைக்
13. காயர் காதிறு மீறா சா
14. கிபு சொந்தத்தில் சில
15. வு செய்து கட்டிய பீர்
16. மண்டபம் 7031
17. நள வருஷம் சித்திரை மாதம்,

**9. மண்டபத் திருப்பணி செய்த அப்துல் காதர்**

**இடம்** - முன் மண்டபத் தூண்

**காலம்** - பிரமாதி வருடம், கி.பி. 1879

செய்தி - முன் மண்டபத்தின் கீழ்ப்புறம் ஒரு பத்தியை நாகூர் அகமது லெப்பை குமாரர் ஹாஜி அப்துல் காதர் கட்டி வைத்தார். இதனைக் கட்டிய கொத்தனார் இருவர் பெயரும் கூறப்படுகிறது.

**கல்வெட்டு**

1. பிஸ்மில்லாஹி
2. இந்தக் கட்டிடமும் கீள்
3. புறம் ஒரு பத்தி கட்டிடமும்
4. ஹஜரத்து ஷாஹனாவ்
5. ஹமீது செய்யிது
6. அப்துல் காதிர் ஒலி
7. கஞ்ஜ சவாயி கஞ்ஜ் பகுசு
8. பாத்துஷாஃ சாஹிபு
9. ஆண்டவரவர்களுக்காக
10. நாகூர் அஃமது வெவ்வை
11. குமாரற் ஹாஜி
12. அப்துல் காதிர்
13. நகுதாவால் கட்டப் பட்டது
14. பிரமாதி வரு 1879
15. இந்த வேலை திருச்சினாப்பள்ளி ஒறையூர்
16. சின்னத் தம்பி முத்து கருப்ப கொத்தர் குமா
17. ரர்கள் கறும். சிலந்திலிங்கம்
18. தாறானூர் அண்ணாவி
19. மினார் கட்டிய சையது மரைக்காயர்

**இடம்**-நாகூர் தர்கா வடக்கு மினார்

**காலம்**-19ஆம் நூற்றாண்டு; ஸ்ரீமுக மாசி: கி.பி. 1873

**செய்தி**-நாச்சிகுளம் உதுமா மரைக்காயர் பேரனும், நல்லதம்பி மரைக்காயர் மகனுமான நகுதா நல்ல சையது மரைக்காயர் கட்டிய விபரம் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. அமானல்லாயி சா
2. த்துக்தண நிறெகவு
3. ம் சிறிமுக வருஷம் மாசி
4. மாதம் நாச்சிகுழம்
5. உதுமா மரைக்கா
6. யர் குமாரர் நகுதா
7. தம்பி மரைக்காய
8. ர் குமாரர் நகுதா correct
9. நல்ல செயிது மரை
10. க்காயர் அவர்கள் நா
11. கூர் மீரா சாயபு
12. அவர்கள் தறுகா
13. வில் கட்டிவச்ச மினாற்

11.கிழக்குப் பக்கம் உள்ள கல்வெட்டு

ஹிஜிரி 1325ஆம் வருடம் ரங்கூன் ஹாஜி முகம்மது தம்பி சம்மாட்டியார் தங்கக் கவசமும், வெள்ளிக்கதவும் செய்தார்.

1. பிஸ்மில்லாஹி
2. ஹலாத்து குத்துபவ் மஜீது கவு
3. துலிஸ்லாம் செய்யிதப்து
4. ல் காதிறு ஷாகுல் ஹமீது
5. ஆண்டவரவர்கள் ஹவுலா
6. ஷரீமன் மண்டபத்தின் மே
7. வ் தங்கக் கவசமும் தர்கா
8. நாலாவது வாயிலின் வெள்ளி
9. கதவும் இந்தக் கட்டிடமும்
10. செய்கு மதார் சாகிபு குமா
11. ரர் றெங்கூன் ஹாஜி முக

12. ம்மது தம்பி சம்மாட்டி
13. யாரால் கட்டப்பட்டது
14. ஹிஜரத்து 1326 வருஷம்
15. ஜமாஸ்துலாகிறு மாதம்

**12.மராட்டிய மன்னர்கள் மினார் கட்டினர்**

முன் மினாரில் மராத்தி மொழியிலும் ஒரு கல்வெட்டு விரிவாக எழுதப்பட்டுள்ளது. அதில் பிரதாப சிங் (1739-1763) கட்டிய 11 நிலை மினாருக்கு அவர் தந்தை துளசா மன்னர் காலத்திலேயே இடம் அளிக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

தமிழ்க் கல்வெட்டைவிட மராத்தி மொழிக் கல்வெட்டு மிக விரிவாக உள்ளது. இங்கு மராத்திக் கல்வெட்டின் மொழிபெயர்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. காலம் கி.பி. 1752.

**மொழிபெயர்ப்பு**

சுபம் ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகம் 1674 கலியுகாப்தம் 4853 ஆங்கிரச வருடம் மாசி மாதம் 15ஆம் தேதி சுக்கிலபட்சம் பவுர்ணமியன்று அசரத் மீரா சாகிப் அவர்களுடைய சன்னதிக்கு மேற்கு போசன குலதீப மகாராசா ராச ஸ்ரீ ஏகோசி அவர்கள் மகனான ஸ்ரீ துளசிராசா சாகிப் அவர்கள் வணங்கி அளித்த இடத்தில் பசுக்களையும் அந்தணர்களையும் காப்பாற்றுகின்ற வரான ஸ்ரீமத் சத்ரபதி மகாராசா ராசஸ்ரீ ஸ்ரீமந்த் பிரதாபசிம்ம மகாராசா சாகேப் அவர்கள் 11 நிலைகளையுடைய கோபுரத்தைத் தருமமாகக் கட்டி அளித்தார்,

சர்கேய் மானோசி செசதாப் அவர்கள் நாகூர் பந்தர் கார்பார் சுருணோசி போன்ஸ்லே மத்யஸ்தர் அப்துல் மாலிக் ஆகியோர் இந்த அறச்செயலை நிறைவேற்றி முடித்தனர்.

அசரத் சாகேப் அவர்களுடைய இடத்தில் பக்தி பூர்வமாக இந்த ஆவணம் சந்திரசூரியர் உள்ளவரை நடக்க வேண்டும் என்று எழுதிக் கொடுக்கப்பட்டது. வமிச பரம்பரையாக இந்தக் கொடையை வளர்த்துவர வேண்டும் என்ற எண்ணத்துடன் இக்கட்டிடம் கட்டப்பட்டது.

தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள். இராசு தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு.

# 48. அதிராம்பட்டினம் தர்காவிற்கு செவ்வப்ப நாயக்கர் கொடை

அதிராம்பட்டினத்தில் உள்ள தர்காவின் பெயர்ஹசரத் ஹாஜா அலாவுதீன் ஜிஸ்திய்யா வலியுல்லா சாகிப்தர்கா என்பதாகும். அந்தச் சிறப்புமிகும் தர்காவின் நுழைவாயிலின் மரநிலை சேதமடைந்து விழுந்தபோது செப்பேடு ஒன்று வெளிப்பட்டது. அச்செப்பேட்டை தர்கா அண்ணாவியர் கொண்டு வந்து கொடுக்க இந்நூலாசிரியரால் படிக்கப்பட்டது.

தஞ்சை நாயக்க மரபின் முதல் மன்னர் செவ்வப்ப நாயக்கர். அவர் 29.12.1531ஆம் ஆண்டு அந்தத் தர்காவிற்கு அதிராமப் பட்டினம் கிராமம் முழுவதையும் சர்வ மானியமாகக் கொடுத்தார். அதாவது அதிராமப்பட்டினத்தின் சகலவிதமான வரிகளையும் அரசுக்குச் செலுத்த வேண்டியதில்லை. ஆனால் எல்லா வரியையும்

தர்காவிற்குக் கொடுக்க வேண்டும்.

சாகிப் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடத்திற்கு மகிழங்கோட்டை என்று பெயர். அங்கு கிணறு வெட்டிக் கொடுக்கப்பட்டது. ஆண்டு தோறும் தவறாமல் கந்தூரி நடத்த வேண்டும். தர்காவின் நிர்வாகிகள் சாகிப் அவர்களின் குமாரர்கட்கும், பேரன்மார்கட்கும் வழிவழியாகக் கந்தூரி கொடுத்துவர வேண்டும்.

கந்தூரிக்குத் தீங்கு செய்பவர்கள் ரௌரவாதி நரகத்தை அடைவார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. 'ஸ்ரீராய" என்று அரசர் கையெழுத்திட்டுள்ளார். தொடக்கத்தில் இந்தச் செப்பேட்டில் "இராமானுஜய நம" என்று எழுதப்பட்டுள்ளது. இது தஞ்சை நாயக்கரின் முதல் செப்பேடாகும். தஞ்சையில் அரசர் ஆகும் முன்பு விசய நகர ஆட்சியின்போது இக்கொடை அளிக்கப்பட்டிருக் கலாம். அதனால்தான் விசயநகர மன்னன் அச்சுதராயர் (1529-15423 பெயரோடு சேர்த்து அச்சுத செவ்வப்ப நாயக்கர் என்று செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டு செப்பேடுகள்" பகுதி -2: பக் 57; ச.கிருஷ்ணமூர்த்தி

# 49. ஈசா பள்ளிவாசலுக்கு சேதுபதி மன்னர் கொடை

இராமநாதபுரம் சேதுபதி அரசர்களில் குமாரமுத்து விசயரகுநாத சேதுபதிகாத்த தேவர் 14.1.1734 அன்று இராமநாதபுரம் நகரம் கோட்டை கடைவீதிப் பகுதியில் உள்ள ஈசா பள்ளிவாசலுக்கு வரும் ஆன்மிகப் பெருமக்களுக்கு அன்னம் வழங்குவதற்காகக் 'கிழவனேரி' என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு தெரிவிக்கிறது. 'கிழவனேரி' முதுகுளத்தூர் வட்டத்தில் உள்ளது.

ஊரில் உள்ள நன்செய், புன்செய், மாவிடை, மரவிடை. திட்டு, திடல், எந்தல், பிறவிடை, குடி, படை, பள்ளு, பறை, கிணறு. மரம் முதலிய பலவும் பள்ளிவாசல் உடைமையாகும்.

இச்செப்பேட்டில் காப்புச் சொல் புதுமையாக எழுதப்பட்டுள்ளது. "தமிழனாலும் நாலு வருணத்திலே உள்ள பேரும். இசுலாமானவர்களும் பரிபாலணம் பண்ணின பேர்கள் கெங்கைக் கரையிலேயும். சேதுவிலேயும் மக்கமதினத்திலேயும் புண்ணிய தலங்களிலேயும் அன்னதானம் சொன்னதானமும் வெகு குடும்ப பிரதிட்டையள் பண்ணின பலத்தை அடைவாராகவும்" என்பது காப்புப் பகுதியாகும்.இக்கொடையைப் பெற்றுக் கொண்டவர் சர்தர்வேசலி மகன் சார்மூசா பாப்சா என்பவராவார்.

**செப்பேடு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 16056 இதன் மேல் செல்லா நின்ற

   ஆன
2. ந்த வருஷம் தை மாதம் 1ந்தேதி பௌர்ணமையும் சோம வாரமும் பூச நட்சத்திரமும் சௌமியாநா
3. மயோகமும் பாலவாகரணமும் கூடின புண்ணிய காலத்தில் தேவை

   நகரா
4. திபன் சேதுமூரைட்சா துரந்தரன் இராமநாதசவாமி காரியதுரந்தரன் சிவபூஜா து
5. ரந்தரன் பரராஜ சேகரன் பரராஜ கெஜசிங்கம் இரவி குலசேகரன் இரவிமார்த்
6. தாண்டன் சொரிமுத்து வள்ளியன் ஸ்வஸ்தி ஸ்ரீ மகாமண்டலேசுர
7. ன் அரியராய தளவிபாடணன் பாசைக்குத் தப்புவராயிர கண்டன்

   முவராய க
8. ண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டிமண்டல
9. தாபனாச்சாரியான் சோழ மண்டல பிரதிஷ்டாபனாச் சாரியன் நொண்டம
10. ண்டல சண்டப் பிரசண்டன் ஈழமும் கொங்கும் யாழ்ப்பாண பட்டணமும் கெ

11. சவேட்டை கண்டருளிய ராஜாதி ராஜன் ராஜபரமேசுரன் ராஜமார்த்
12. தாண்டன் ராஜ கம்பீரன் இனங்சிங்கம். தளஞ்சிங்கம் பகைமன்னர் சிங்
13. கம் துரைராயன் ஆற்றில் பாய்ச்சி கடலில் பாய்ச்சி மதப் புலி அடைக்கலங்காத்
14. தான் தாலிக்கு வேலி சத்துருவாதியன் மிண்டன் வேதியர் காவலன் அரசராவ
15. ணராமன் அடியார் வேளைக்காரன் பரதள விபாடன் உரி கோல சுரதானன்
16. அந்தம்பர கண்டன் சாடிக்காரர் கண்டன் சுபாமி துரோகியன் மிண்டன்
17. பஞ்சவர்ணராய ராகுத்தன் பனுக்குவார் கண்டன் கொட்ட மடக்கி வை
18. யாளி நாராயணன் இவுளிபாவடி மிதித்தேறுவார் கண்டன் ஆரிய மானங் க
19. ரத்தான் தொண்டியந்துறைக் காவலன துரகரேபந்தன் அனுமகேதளன் கொ
20. டைக்கு காணன் பரிக்கு நகுவன் வில்லுக்கு விஜயன் பரதநாடகப்
21. பிரவீணன் கருணா கடாட்சள் குன்றினுயர் மேருவில் குணில் பெ
22. ரித்தவன் திலதநுதல் மடமாதர் மடலெழுதவரு சுமுகள் கருட கேதனன்
23. காவிக் கொடையாள் விசையலட்சுமி காந்தன் கலை தெரியும் விற்பனன்
24. காமினி சுந்தர்ப்பன் அட்டதிக்கு மனோபயங்கரன் துஷ்ட நிக்கிரசு சிட்டபரி
25. பாலன் சங்கீத சாகித்ய வித்யா வினோதன் வீரதண்டை சேமத்தலை விள
26. ங்கிய தாளிளான் சகல சாம்பிராச்சிய லெட்சுமி நிவாசன் சேது காவல
27. ன் வங்கிஷாதிபனான துகவூர் கூத்தத்தில் காத்தூரான குலோத்துங்க சோழ
28. நல்லூர் கீழ்பால் விரையாத கண்டனிலிருக்கும் ஸ்ரீ இரண்ய கொப்ப யா
29. ஜி ரெகுநாதசேதுபதி காத்த நேவர் அவர்கள் மருமகன் கெங்கை கொண்டானி
30. லிவிருக்கும் கட்டையத்தேவர் புத்திரன் ஸ்ரீகுமாரமுத்து விசையரெகுநாத சேது
31. பதிகாத்ததேவர் அவர்கள் இராமநாதபுரத்திலிருக்கும் ஈசா பள்ளி வாசல்
32. அன்னதான தன்மத்துக்கு சர்தர்வேசலி குமாரன் சார்மூஸா பாப்ஷா
33. பாரிசமாக கட்டளையிட்ட கிழவனேரிக்கு எல்கையாவது கருக்கத்திக் கண்
34. மாய்க் கடைக்கொம்புக்கு வடக்கு மாணிக்கனேரி பொருந்துக்கு கிழ

35. க்கு மேற்படி பேந்தல் தென்கரைக்குத் தெற்கு ஆதி நாராயணன் மடைசிலந்தி
36. யப்பன் பொட்டல் செய்க்கு மேற்கு இன்னான்கு எல்கைக்குட்பட்ட கிழ
37. வனேரி நஞ்சை புஞ்சை மாவிடை மரவிடை. திட்டு திடல் ஏந்தல் பிறவிடை
38. குடி. படை. பள்ளு, பறை, கீழ் நோக்கிய கிணறு. மேல் நோக்கிய மரம்.
39. அஷ்டபோக தேஜ சவாமியங்களும் இவை பரியது சர்வமானிபம் தாம்
40. பிரசாசனம் கட்டளையிட்ட படியினாவே ஆதி சந்திராதித்த வரை புத்திர
41. பௌத்திர பரம்பரைக்கும் அன்னதானத்துக்கும் ஆண்டனுபவித்துக் கொள்
42. ளுவாராகவும் இந்த தன்மத்திற்கு தமிழனாலும் நாலு வருணத்திலே உள்
43. ள பேரும் இசுலாமானவர்களும் பரிபாலனம் பண்ணினபேர்களும் கெ.
44. ங்கைக்கரையிலேயும் சேதுவிலேயும் மக்க மதினத்திலேயும் புண்
45. ணிய தலங்களிலேயும் அன்னதானம் சொன்னதானம் வெகுகுடும்ப பிர
46. திட்டையன் பண்ணின பலத்தை அடைவாராகவும் இந்த தன்மத்துக்கு
47. அகிதம் பண்ணினபேர்கள் புண்ணியத் தலங்களிலே மாதா பிதாவை
48. வதைந்த தோஷத்திலே போகக் கடவாராகவும்

*சேதுபதி மன்னர் செப்பேடுகள், டாக்டர் எஸ்.எம். கமால்: பக்கம் 445-451

# 50. ஏர்வாடி பள்ளிவாசலுக்குச் சேதுபதி மன்னர் கொடை

சேதுபதி அரசர்களில் குமாரமுத்து விசயரகுளாத சேதுபதி காத்த தேவர் ஏர்வாடி பள்ளிவாசலுக்கு மாயாகுளம் என்ற ஊரைச் கொடையாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது. செப்பேடு அளித்த நாள் 1.11.1742 ஆகும்.

செப்பேட்டில் ஏர்வாடி-“ஏறுபாடு” என்று கூறப்பட்டுள்ளது. இக்கொடையைப் பள்ளிவாசல் சார்பாகப் பெற்றுக் கொண்டவர் முசாபர் நல்ல இபுறாகீம் என்பவராவார். இவ்வூவூரில் 50 கலம் நெல் விதைக் கூடிய நன்செய்யும், 4 கலத்து 3 கலம் விதைக்கக்கூடிய புன்செயும் அடங்கியது. இத்துடன் உத்தரகோச மங்கைக்கு அளிக்கப்பட்டிருந்த தட்டு 32 அரைக்காணி சதுர செவ்வல் மணக்காடும் பள்ளிவாசனுக்கு அளிக்கப்பட்டது. ஊரின் எல்லா வரிகளும் பள்ளிவாசலுக்கு அளிக்கப்பட்டன. உப்பளம், சந்தை வரிகளும் அளிக்கப்பட்டன.

”இந்தத் தர்மத்தைப் பரிபாலனம் செய்த பேர்கள் கோடிப் பிரதிஷ்டையும் கோடி சிவலிங்கப் பிரதிஷ்டையும் கோடி கோடி கன்னிகா தான சொர்ணதான கோதானம் பண்ணின சுகிர்தத்தை அடைவாராகவும்’ என காப்புரை எழுதப்பட்டுள்ளது.

’இந்த தர்மத்துக்கு யாதாமொரு இசுலாமானவர்கள் பரிபாலனம் பண்ணியவர்கள் “கோடி அடிமைகொண்டு உரிமைக்கு விட்ட பயனும், கோடி கச்சுச் செய்த பலனும் அடைவராகவும்” எனக் காப்புரை புதுமையாக எழுதப்பட்டுள்ளது.

**அடிமை கொண்டு உரிமை விடல்**

முகமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஸ்லாம் மார்க்கத்தை அரபு பகுதியில் பிரச்சாரம் செய்யத் தொடங்கியபோது செய்த நற்பணிகளில் அடிமைகட் விடுதலை அளித்தது ஒன்றாகும். அடிமைகளை விலை கொடுத்து வாங்கியவர்களிடம் அவர்கள் கொடுத்த விலையைக் கொடுத்து அடிமைகளை விடுதலை செய்வித்து ரிமை அளித்த செயலை இச்செயல் குறிக்கிறது.

தமது பிரதம சீடர்களான அபுபக்கர் போன்றவர்களையும் பிறரையும் அவ்வாறே அடிமைகளை விடுவிக்கும் நற்பணிகளை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்.

ஹஜ்-ஹஜ்ஜா என்ற சொல் ‘கச்சு’ எனத் தமிழ் வழக்குப்படி எழுதப்பட்டுள்ளது. இஸ்லாத்தின் 5 கடமைகளில் மக்கா புனித யாத்திரை ஒன்றாகும்.

இந்தத் தர்மத்திற்குத் தீங்கு செய்தவர்கள் மாதா பிதா ஒஸ்தாதை (குரு) வதை பண்ணுவிச்சு மக்கத்துப் பள்ளியை இடித்த பாவத்திலே போவாராக என எழுதப்பட்டுள்ளது. உஸ்தாது என்ற சொல் ஒஸ்தாது என எழுதப்பட்டுள்ளது. உஸ்தாது என்ற சொல் ஒஸ்தாது என எழுதப்பட்டுள்ளது. உஸ்தாது என்ற சொல் பரமாச்சாரியர்களைக் குறிக்கும்.

சேதுபதி மன்னர் ஏர்வாடி பள்ளிவாசலுக்கு மாயாகுளம் என்ற ஊர் கொடையாக அளித்த

செயல் இலக்கியத்திலும் பெற்றுள்ளது.

மீமிசல் வண்ணக் களஞ்சியம் புலவர் தாமம் பாடிய ”தீன்நெறி விளக்கம்’ என்னும் நூலில் (சேதுபதி சந்ததி பெற்ற படலம், பாடல் எண் 23)

”தேறல்கொள் சரோருகப்பூந் திருஷத் தொழும்பாய் முன்னங்

கூறல்மாள் மேலைய குளம்னும் கிராமம் தன்னை

மாறலில் வாத பாணு மதியுள நாள்மட்டாகச்

சாதுவ பூமன் விட்டான் உருவமா வ மதாக”

என்று பாடியுள்ளார்.

**செப்பேடு**

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் 1564 இதன் மேல்ச் செல்லாநின்ற துந்துபி வருஷ
2. நாம ஸம்வத்சரத்தில் தெட்சணாயத்தில் சரத்ரிதுவில் அற்பிசி மாஸத்தில் பவற்ணமையும் சோ
3. ம வாரமும் அசுபதி நட்செத்திரமும் வச்சிரநாம யோகமும்

சுபகரணமும் பெத்த சுபதினத்தில் சுபஸ்ரீ

4. மன் மகாமண்டலேசபரன் அரியராயிர தளவிபாடன் பாசைக்குத் தப்புவராயிர கண்டன் மூவரா
5. யிர கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாதான்

பாண்டி மண்டலத் தபனாசாரி

6. யன் சோளமண்டலப் பிரதிஷ்டாபனாசாரியன் தொண்ட மண்டலப் பிறசண்டன் வீழமுங்
7. கொங்கு யாழ்ப்பான பட்டனமும் கெசவேட்டை கொண்டருளிய

ராசாதிராசன் ராசபரமேசுப

8. ரன் ராசமாத்தாண்டன் ராசுகெம்பீரன் ராசகுலதீபன் வீரரில் வீரன் வீரகஞ்சுகள் வீரவெண்பா
9. மாலை வீராணகேசரி வீரவிற்கிரமாற்கள் பரிக்கு நகுலன் குடைக்குக்

கற்னன் வில்லுக்கு விசையன் மல்லு

10. க்கு வீச்சேனன் பொறுமைக்கு தற்மபுத்திரன் ஆக்கினைக்கு சுக்ரீபன்

அழகுக்கு வாலசீவகள் பிறச

11. ங்கத்துக்கு ஆதிசேஷன் கருணைக்கு ரெகுராமன் சத்திய பாஷா

அரிச்சந்திரன் சத்துருவாதியள் மி

12. ண்டன் சகலகுண சம்பன்ன சங்கீத சாயுத்திய வித்தியா வினோதன்

சிறுவசிவ தயாபரன் சாமித்

13. துரோகியள் மிண்டன் தண்டுவார் மிண்டன் தளங்கண்டு

தத்தளிப்பார்கள் கண்டன் தந- தார .

14. தார பிறதார புத்திரன் சகல சாம்பிறாச்சிய லட்சுமிநிவாசன் கருதலர்கள் முடியிடறு கள துரந்த

15. ர னகுலன் கட்டாரிராயன் கருணா கடாட்சன் காமிதி சுந்தப்பன்

கலைதெரியும் விற்பனை கலியாண

16. குணசீலன் இரவிகுல சேகரன் இறலிவற்மன் இவுளி பாவடி

மிதித்தேறுவார் கண்டன் இடறு

17. வார் கண்டன் இடறுவார் கோடாலி யிரவலர் கலி கோபன் அரசராவண

ராமன் அடியார் வேளை

18. க் காறன் அந்தம்பிற கண்டன் அனுமத்துவசம் கருடத்துவசம் மீன்துவசம் சிங்கத்துவசம் வியாக்கிற

19. துவசம் நீமிதுவசம் காவித்துவசமுஞ் செங்காவிக் குடையும் அதின்

மேல் விருது சல்லியும் உண்டான தே

20. வாதி தேவன் அடைக்கலங் காத்தான் உரிகோல் சுரதானன் வீரதண்டை

சேமத்தவை விளங்கிய தாளினான்

21. மனுநீதி மன்னன் மலைகலங்கினும் மனங்கலங்காதவன்

வன்னியராட்டந் தவிளத்தான் அசுபதி கெ

22. சபதி நரபதி சேது செம்பி வளநாடன் வேதியர் காவலன் கொளு மீதி

கொண்டு குவலையங் காத்த

23. தவன் சேதுமூல ரெட்சா துரந்தரன் தேவை நகராதிபன் தூசுரேவந்தன் துலுக்கர் தளவிபாட

24. ன் சோடச மகாதான சீலன் பஞ்சகால பயங்கரன் பஞ்ச பாண அவதாரன் பஞ்சவற்ன்ன ராவுத்தர்

25. முண்டன் படைக்குங் குடைக்கும் ஓடாத கண்டன் ராமனாத சுவாமி

பறுவதவற்தனி பாதாரவிந்தே தேcorrect

26. சவிதன் தனுக்கோடி காவலன் திலத நுதல் மடமாதர் மடலெருது புயகமுகன் இயலிசை நாடக முத்

27. தமிளறிவாளன் அனகன் அதிவீரன் அகளங்கள் அதிசெயன் புவனேசுகவீரன் மருவலர் கெச சிங்

28. கம் விருதான் வலியச் சருவி வளியில் கால்நீட்டி நுட்டர் கொட்ட

மடக்கி பட்டமானங் காத்தான்

29. பகைமன்னர் சற்ப கெருடன் பரதள விபாடன் பனுக்கு பார் கண்டன் பரராச சிங்கம் தாலிக்கு வேலி

30. தெக்ஷன சிங்காசனாபதி மனு நீதி மன்னன் செகராசர் பணி பாதன் அன்னதான சோமன் அம

31. லன் அம்போது கடாட்சன் நற்மபரி பாலனன் சற்பன்ன பாஷா துரந்தரன் சங்கீத சுவாமி பறு

32. வதற்த்தளி நாயகி ராமநாதசுவாமி கருணா கடாட்சன் பரிபூறண கீற்த்திப்

பிறதாபன் ஸ்ரீமது இ

33. றணிகெற்ப்பயாசி ரெகுநாதச் சேதுபதி காத்த தேவரவர் கள் குமாரர்

ஸ்ரீமது முத்துக்குமார வி

34. சைய ரெகுநாதச் சேதுபதி காத்த தேவரவர்கள் ஏறுபாடிப்

பள்ளிவாசலுக்குக் கட்டளையிட்ட கிறாம

35. த்துக்கு முசாபர் நல்ல இபுராகிமிடத்தில் தாம்பிற சாதனம் கொடுத்தபரி

சாவது இப்போது

36. செம்பி நாட்டில் பெரியமாயா குளமான ஏந்தவதற்க் கெல்கையாவது

கிள்யெல்

37. கை நிலமுடையான் கண்மாயி கீள்கரைக்கும் சின்னு பன்னு பண்டாரம் தோட்டத்துக்கு

38. மேற்கு வடயெல்கையாவதும் பண்ணைக் காட்டில்த் தொலிச்சான் வீரன்

தட்டுக்கும்

39. புனையேந்தல் புஞ்சைக் காட்டுக்கும் யெதம் பாடல் புஞ்சைக்

காட்டுக்கும் தெற்கு தே N

40. மலெல்கையமவது ஷ யெதம்பாடல் காட்டுக்கும் ஆண்டி சுத்தான்

வகையடி ஊ

41. றணிக்கும் கிளக்கு நெற்கெல்லையாவது ஓரக்கரைக்கு வடக்கு
மின்னாங் கெல்கை

42. குள்பட்டது ஆயக்கட்டுப்படிக்கு நஞ்சை விரையடி 50 கலம் புஞ்சைத்
தட்டு கொச்சமுள்பட செய்

இரண்டாம் பக்கம்

43. க்கு விரையடி 4 கலத்து 3 கலம் ஆக விரையடி 54 கலத்து 3 கலமும்
ஊர் புஞ்சையில் திருவுத்திரகோசமங்

44. கைப் பிறவேசமாயிருந்த தட்டு 32 அரைக்காணி சதிர செவ்வல்
மணக்காடும் கட்டளையிட்டுக் கொ

45. டுத்தக் காட்டுக்கு யெல்கையாவது மாவிலங் ஊரணிக்கும் அரியவன்
கட்டையன் தட்டு

46. க்கும் கரிமுந்தலுக்கும் கிளக்கு தெற்கெல்கையாவது சமுத்திரக் கரைக்கு
வடக்கு கிளக்கெ

47. வகையாவது பள்ளிமுனைக் குடாவுக்கும் வானி நாடான் தட்டுக்கும்
பூசாறி நா

48. டான் தட்டுக்கும் தச்சனூறணிக்கும் மேற்கு ஓரக்கரைக்கு தெற்கு
இன்னாங்கெல்கை

49. க்குள்பட்ட செல்லல் மணல் நஞ்சை புஞ்சையும் ஊரணி குட்டம் திட்டு
டல் மாவடைம்

50. ரவடை மேல்நோக்கிய மரம் கீன்நோக்கிய கிணறும் நீரும் பாசியும்
பள்ளு பறை

51. ஊளியம் உலுப்பை வைக்கல் கட்டு வண்டில் மாடு ஆயக்கட்டுவரி
உப்பளவரி நில

52. வரி பள்வரிப் பறைவரி கம்பனவரி முள்ளுவரி காணிக்கை வரி
இவ்வரி முதல் யெவ்

53. வரிப்பிறக்கிலும் அவ்வரிமுதல் அஷ்டபோக தேச சாமியங்களும்

ஓடையளத்தில்

54. மாதாந்தமுண்டு பறை உப்பு மூன்றெருவையில் நெல்லுப் புல்லு

யேதொன்றாகிலும்

55. பொதிபிடிச்சு கொள்வினை விற்பினை யாபிளை யாபாரம் பண்ணிக் கொள்கிறதுக்

56. கு ஆயந் தீருவை சம்மாடஞ் சத்தவரி யிதுமுதலான அஷ்ட்டபோக

தேசசாமியங்களும்

57. பள்ளிவாசலுக்கு சறுவமானியமாகக் கட்டளையிட்ட படிக்கி ஆதித்த மந்திராதித்த சந்ததிப் பிற

58. வேசமாக புத்திர கோத்திரமாக ஆண்டனுபவித்து கொள் பவராகவும் இந்த தற்மத்தை யாதாமெ

59. கருதர் பரிபாலனம் பண்ணின பேர்கள் கோடிப் பிரதிஷ்டையும் கொடி

சிவலிங்கம் பிரதிஷ்டை

60. யும் கோடி கன்னிகாதான பிற்ப பிரதிஷ்டையும் கோடி அன்னதான

சொற்னதான கோதானமும் ப

61. பண்ணிவிக்கிற சுகுர்தத்தை அடைவாராகவும் இந்த தற்மத்துக்கு

யாதாமொருத்தர் அகிதம் பண்ணி

62. ன பேர்கள் கெங்கைக் கரையிலேயும் சேதுவிலேயும் மாதா பிதாக் குருக்களையும் காராம்பசு

63. வையும் பிறாமணாளையும் வதை பண்ணின தோஷத்திலே

போவாராகவும் இந்த தற்மத்துக்கு

64. யாதாமொரு யிசிலாமனபர்களில் பரியாவனம் பண்ணினவர்கள் கோடி

அடுமை கொண்

65. டு உருமைக்கு விட்ட பலனும் கோடி கச்சு செய்த

பலனுமடைவாராகவும் இந்தத் தற்மத்க்குக்

66. கு விகாதம் பண்ணினவர்கள் மாதா பிதா ஒஸ்தாத்தை வதை

பண்ணிலிச்சு மக்கத்துப் பள்

67. ளியை இடித்த பாவத்திலே போவராகவும் யிப்படி சம்மதித்து தாம்பிற சாதனங் கொடுத்

68. தோம் ஸ்ரீயிறணியகெற்பயாசி இரகுனாதச் சேதுபதிகாத்த தேவரவர்கள்

குமாரர் ஸ்ரீமது முத்துக் கு

69. மார விசைய ரெகுனாதச் சேதுபதி காத்த தேவரவர்கள்

விசுவகோத்திரத்தில் மதுரையிலிருக்கும்

70. மூர்த்தி காவிங்கராயன் ஆசாரி குமாரன் சட்டையப்பன் விகிதம் உ

சேதுபதி மன்னர் செப்பேடுகள். டாக்டர் எஸ்.எம். கமால்: பக்கம் 472-479

## 51. ஆபில் காபில் பள்ளி வாசலுக்குச் சேதுபதி மன்னர் கொடை

சேதுபதி மன்னர்களில் முத்துக்குமார விசயரகுநாத சேதுபதி காத்த தேவரவர்கள் இராமேசுவரம் ஆபில் காபில் பள்ளிவாசலுக்குப் புதுக்குளம் என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது. பள்ளிவாசல் சார்பாக கொடையைப் பெற்றவர்கள் நூறாவம்சா மகன் சுல்தான் சகாய்சரி பக்கீர் அவர்களாவர்.

சென்ற செப்பேடு போலவே இச்செப்பேட்டுக்கும் காப்புரை கூறப்பட்டுள்ளது. ஊர் வரிகளிலிருந்து வரும் அனைத்து வருவாயும் பள்ளிவாசலுக்கு வழங்கப்பட்டது. இன்றும் இவ்வூர் 'பக்கிரிகுளம்" என்றே வழக்கிலும் அரசு ஆவணங்களிலும் எழுதப்பட்டுள்ளரு. இதன் காலம் கி.பி.1745.

ஆபில், காபில் என்பவர்கள் மனித இனத்தின் முதல் மனிதனாக திருக்குர்ஆனும், கிறித்தவர்களின் பைபிளும் போற்றுகின்ற ஆதம் அவர்களது மக்கள் ஆவர். இவர்களின் புனித அடக்கத்தலமாக இப்பள்ளிவாசல் கருதப்படுகிறது. இறைவனது கட்டளையை மீறிய ஆதம் அவர்களும் அவர்களது துணைவியார் ஏவாள் அவர்களும் சுவர்க்கத்திலிருந்து பூவுலகிற்கு அனுப்பப்பட்டனர்.

ஆதம் துணைவியார் ஏவாள் அரபு நாட்டிலும், ஆதம் இலங்கையின் மிக உயரமான மலையாகிய சுமனக்கூட மலை யிலும் இறங்கியதாக நம்பப்படுகிது. இம்மலையை போதிசத் வரின் திருவடிகளைத் தாங்கிய இடமாக பௌத்தர்களும், சிவபெருமான் பாதம் பட்டதால் சிவனடிபாதமலை என்று இந்துக்களும் நம்புகின்றனர்.

இராமேசுவரத்தையும் இலங்கையின் தலைமன்னாரையும் இணைக்கும் கடலில் 23 மைல் தொலைவில் மணல் திட்டுக்கள் உள்ளன. இவைகள் பெட்டி என்று அழைக்கப்படுகின்றன. ஒரு காலத்தில் இதன் வழியாக நடந்தே இலங்கை செல்ல முடிந்தது என்பர். "கடல் அடையாது இலங்கை கொண்டதாகக்" கூறுவது இவ்வழி சென்றதைத்தான். இதனை "ஆதம் பாலம்" என்று அழைக்கும் வழக்கம் உண்டு. எனவே இப்பள்ளிவாசல் ஆதம் மக்கள் அடக்கத்தலமாகக் கருதப்படுகிறது.

**செப்பேடு**

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் 1656 இதன்மேல் செல்லாநின்ற ஆன

   குறோத

2. ன ஸ்ரீ உத்தராயணத்தில் வசந்த ரிதுவில் வைய்யாசி மீ 11உ வியாளக் கிழ
3. மை பஞ்சமியும் உத்திராட நக்ஷத்திரமும் சுப்பிறநாம யோகமும்

சௌஎல்வாக

4. றணமுங் கூடின சுபதினத்தில் தேவை நகராதிபன் சேது மூல ரக்ஷா துரந்தரன்
5. ராமனாத சுவாமி காரிய துரந்தரன் சிவபூசா துரந்தரன் பரராசசேகரன்

   பரராச கெ
6. ச சிங்கம் இரவிகுல சேகரன் இரவிமார்த்தாண்டன் சொரி முந்து வன்னியன் ஸ்வஸ்தி
7. ஸ்ரீமன் மஹாமண்ட லேசுவரன் அளியராயிர தளவிபாடன் பானைக்

   தப்பு
8. வராயிர கண்டன் மூவராயிர கண்டன் கண்டநாடு கொண்டு கொண்ட நாடு
9. கொடாதான் பாண்டிமண்டலத் தாபனாசாரியன் சோள மண்டலப் பிரதிஷ்டா
10. பனாசாரியன் தொண்டமண்டல சண்டப்பிரசண்டன் ஈழமும் கொங்கு மியா
11. ட்பாண பட்டணமும் யெம்மண்டலமுமளித்து
12. கெசலேட்டை கண்டருளிய ரசாதிராசன் ராசப
13. ரமீசுவரன் ராசமாத்தாண்டன் ராசகுவ திலகன்
14. இளஞ்சிங்கத் தளஞ்சிங்கம் பகைமன்னர் சிங்கம்
15. ஆற்றில்ப் பாய்ச்சி கடலில் பாய்ச்சி மதப்புலி அடை
16. க்கலங் காத்தான் தாலிக்கு வேலி சத்துருவாதிய
17. ள் மிண்டன் வேதியர் காவலன் அரசராவண ரா
18. மன் அடியார் வேளைக்காறன் பரதள விபாடன் உரி
19. கோல் சுரதானன் அந்தம்பிற கண்டன் சாடிக்கறார் கண்டன்

   சாமித்துரோகி
20. யள் மிண்டன் பஞ்சவற்ன ராய ராவுத்தன் பனுக்குவார் கண்டன்

   கொட்டமடக்கி
21. வைய்யாளி நாராயணான் இவுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் ஆரியர் மா
22. னங்காத்தாள் தொண்டியந்துறை காவலன் துரகரேவந்தன் அனும்

   கேதனன்
23. கெருட சேதனன் கொடைக்கு கற்னன் பரிக்கு நகுலன் வில்லுக்கு

   விசையன்

24. பரத நாடகப் பிறவீணன் கருணா கடாக்ஷக்ஷண் குன்றினுயர் மேருவைக் குன்றா வ
25. ளைக்குணில் பொறிந்தவன் திலத நுதல் மடமாதர் மடலெழுத வருகமுகன் செங்கா
26. விக் குடையான் சேமத்தலை விளங்குமிரு தாளினான் விசையலட்சுமி காந்
27. மதன் கலைதெரியும் விற்பளன் காமினி காந்தப்பன் அஷ்டதிக்கு மனோபயங்கர
28. ன் துஷ்ட நிக்கிறக சிஷ்ட பரிபாலன் சங்கீத சாயித்தியன் வித்தியா வினோதன்
29. சகல சாம்பிறாச்சிய லக்ஷ்மிவாசன் சேதுகாவலன் துகளூர்க் கூத்தத்து
30. க் காத்தூரான குலோத்துங்கசோள நல்லூர் கிள்பால் விரையாத கண்டளிலிரு
31. க்கும் ராசமாஜ்ய ராசஸ்ரீ இரண்யகெற்பயாசியான குமார முத்து விரைய இரகுநாதர் சே
32. துபதி காத்த தேவரவர்கள் குமாரன் முத்துக்குமார விசைய இரகுநாதச் சே
33. நுபதி காத்த தேவரவர்கள் ராமீசுவரத்தலிருக்கும் ஆவல் காவல் பள்ளி வா
34. சல் தன்மத்துக்கு நூறாலம்சா குமாரன் சுலுத்தான் சஹாய் சரி பகீர் பாரிசிமா
35. க கட்டளையிட்ட புதுக்குளத்தை ஆண்டனுபவித்துக் கொள்வாராகவும்
36. விட்டுக்குடுத்த புதுக்குளத்துக்கு யெல்கையாவது யெல்கைகுடி ஓரச்சிறகு
37. மடையில் நீர்பாய்ந்து நெல்விளைகின்ற குன்றா வயக்கலுக்கும் வாளவந்
38. தாளம்மன் கோவிலுக்கும் பச்சரித் திடலுக்கும் சேதுமாற்கத்துக்கும் வடக்கு
39. கொத்துங் குளத்துக்கும் புரவுக்கும் தென்மேற்கு அச்சங்குடிக்கும் தோட்டக்கா
40. ட்டுக்கும் தெற்கு எக்கைகுடிக் கண்மாய் வடகடைக் கொம்புக்கும் கானத் திட

41. லுக்கும் கிளக்கு யின்னாங் கெல்கைக்குள்பட்ட நஞ்சை பிஞ்சை மாவடை மர
42. வடை திட்டு திடல் மேல் நோக்கிய மரம் கிள்நோக்கிய கிணறு நிதி நிக்ஷேப்
43. ஜல தரு பாஷாண ஆகாம்ய அஷ்டபோகமும் குடிபடை பள்பறைவரி யிறை சக
44. லமும் சதுவ மானிபமாக கட்டளையிட்ட படியினாலே
சந்திராதித்தவரை சந்ததிப் பிறவேசம் புத்திர பௌவுத்திர பாரம் பரையாய் ஆண்
45. டனுபவித்துக் கொள்ளக் கடவாராகவும் இந்தத் தற்மத்துக்கு தமினனாகிலும் நாலா
46. வர்னத்திலே உள்ளவனாகிலும் இசுலாமான வனாகிலும் வாக்குச்
சகாயம் அர்த்த ச
47. காயம் பண்ணினால் கெங்கையிலும் சேதுவிலும் மக்க மதினத்திலேயும்
48. அன்னதானமும் சொற்னதானமும் அனேகம் குடும்ப பிறதிஷ்டையும் பண்ணி
49. ன பலனை யடையக்கடவாராகவும் இந்த தற்மத்துக்கு விகாதம் நினைத்தால் புண்ணி
50. ய ஸ்தலங்களிலேயும் மக்க மதினத்திலேயும் மாதா பிதா வையுங் கொன்ற தோ
51. ஷத்திலும் மகாபாவத்திலேயும் போகக்கடவாராகவும் உ குருவே துணை உ
52. இந்தப் படிக்கு தாம்பிற சாதனம் யெளுதினேன் திருப் புல்லாணியூரிலிருக்கு
53. ம் முந்துப் பண்டாரம் புத்திரன் இருளப்பன் கையெளுத்து உ இந்த நற்மத்துக்கு
54. தமிளனாகிலும் எவர்களாகிலும் விகாதம் நினைத்தால் கெங்கையிலும் சேதுவி
55. லும் காராம் பசுவையும் மாதாபிதாவையுங் கொன்ற தோஷத்திலே போகக் க
56. டவாராகவும்

*சேதுபதி மன்னர் செப்பேடுகள், டாக்டர் எஸ். எம். கமால், பக்கம் 480-486

# 52. இராமேசுவரம் கோயில் விசாரணையில் அலிப்புலி ராவுத்தர்

இராமேசுவரம் கோயில் இந்துக்களின் புனித யாத்திரைத் தலம், அங்குள்ள அர்ச்சகர்களில் இருபெரும் பிரிவு உண்டு. குருக்கள்மார் என்றும், நயினாக்கள் ஆரிய மகாசபையார் என்றும் இரு பிரிவினர் அழைக்கப் பெறுவர்.

தமிழ்நாட்டுப் பக்தர்களுக்குக் குருக்கள்மாரும், வடநாட்டுப் பக்தர்களுக்கு ஆரிய மகாசபையாரும் வழிபாடு நடத்துவர். இராமேசுவரம் கோயிலில் உள்ள பல தீர்த்தங்களில் இலட்சுமண தீர்த்தம் என்பது மகாமுக்கியமானது. மக்கள் பெருந்திரளாக அங்கு கூடுவதால் வருவாய் மிகுதி.

இலட்சுமண தீர்த்தத்தின் உரிமை பற்றி இருபிரிவு அர்ச்சகர் கட்கும் தகராறு ஏற்பட்டது. சேதுபதி அரசரிடம் புகார் சென்றது. அப்போது சேதுநாட்டை ஆட்சிபுரிந்த மன்னர் முத்துக்குமார விசயரகுநாத சேதுபதி தன் அதிகாரிகள் நால்வரை விசாரிச்சு ஆணையிட்டார்.

1. தளகர்த்தர் ரா. வெள்ளையன் சேர்வைக்காரர்
2. ரா. பிரதானி ஆண்டியப்பப் பிள்ளை
3. பெரிய கட்டளை இராமநாத பண்டாரம்
4. சத்திர மணியக்காரர்

ஆகியோர் 18.1.1746 அன்று அவ்வழக்கை விசாரிக்க வந்தனர். அந்த நீதிவிசாரணையில் நடுவராகப் பணியாற்றியவர்களில் ஒருவர் ராமேசுவரம் அலிப்புலி ராவுத்தர்” ஆவார்.

தமிழ்நாட்டு செப்பேடுகள், தொகுதி 2. பக்கம் 86.87. சு. கிருஷ்ணமூர்த்தி சேதுபதீ செப்பேடுகள். புலவர் செ.ராசு. தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு (1994)

# 53. இஸ்லாமியர் தறிக்கு வரி நீக்கிய சேதுபதி

சேது நாட்டில் தறி நெசவு மிகுதி. பல சமூக மக்களோடு இஸ்லாமியர்களும் தறிநெசவில் பெருவாரியாக ஈடுபட்டனர். இன்றும் இஸ்லாமியர்கள் மிகுதியாக வாழும் கமுதி, அபிராமம், எக்ககுடி, பரமக்குடி. இளையாங்குடி. சித்தார்கோட்டை, பனைக்குளம் ஆகிய பல ஊர்களில் 'பாவோடித் தெரு' என்ற பெயரில் தெருக்கள் உள்ளன. கீழக்கரையில் 'பருத்திக்காரத் தெரு' என்ற தெரு உள்ளது. திருமலை ரகுநாத சேதுபதி வழங்கிய செப்பேடு ஒன்றில் "நமது காவல் குடியினரான துலுக்கர் தறிக்கடமை இல்லை" என்று கூறப்பட்டுள்ளது. கல்வெட்டுக்களில் 'தறியிறை' என்றும் கூறப்படும். "நமது காவல் குடி' என்ற தொடரால் நேயம் மிகுந்த நெருக்கமான தொடர்பு புலப்படுகிறது.

சேதுபதி மன்னர் செப்பேடுகள், டாக்டர் எஸ்.எம். கமால், பக்கம் 59

# 54. சேதுபதியும் சீதக்காதியும்

கிழவன் சேதுபதி (1678-1710) காலத்தில் வள்ளல் சீதக்காதி சேதுபதியின் அமைச்சராக விளங்கினார். சேதுபதி சீதக்காதி அவர்களைத் தன் சொந்த தம்பியாக உயர் மதிப்புடன் நடத்தினார். சீதக்காதி அவர்கட்கு “விசயரகுநாதப் பெரியதம்பி” என்று பட்டமளித்துப் பாராட்டினார். பின்னர் சீதக்காதி வழி வந்தவர்களும் சிலர் ‘பெரியதம்பி’ என்ற சிறப்புப் பெயரைச் சேர்த்துக் கொண்டனர்.

கிழவன் சேதுபதி சேதுநாட்டின் தலைநகரைப் போகலூரி லிருந்து பெரியகோட்டையும் அரண்மனையும் கட்டி இராமநாத புரத்திற்கு மாற்றினார். செவ்வக வடிவில் 27 அடி உயரமும் 5 அடி அகலமும் 44 கொத்தளங்களுடன் அமைத்தார். இதன் நிர்மாணப் பணியில் பெரிதும் உதவியவர் சீதக்காதியாவார். (Manual of Ramnad Samasthanam By T. Rajaram Rao, 1891, Page 280) “கீழக்கரை சீதக்காதி மரைக்காயர்” என்று அந்நூல் குறிக்கிறது.

இலங்கையிலிருந்து ஏலம், கிராம்பு, சாதிபத்திரி, கொட்டைப் பாக்கு ஆகிய பொருட்கள் கிழக்குக் கடற்கரைக்கு வந்தன. அங்கிருந்து தானியம், பட்டுப்புடவை, பட்டுநூல், கருப்பட்டி, புளி, தேங்காய், சங்கு ஆகியவை ஏற்றுமதியாயின. இவ்வணிகத்தில் சீதக்காதிக்கு ஏகபோக உரிமை இருந்தது.

கடற்கரை வாழ் இஸ்லாமியர்களும் வள்ளல் சீதக்காதியும் சேதுநாட்டின் வணிக - செல்வ வளர்ச்சியில் பெரிதும் உதவினர். பௌத்திர மாணிக்க பட்டணம் என்று சிறப்பிக்கப்பட்ட காயல் பட்டினத்திற்கும் இதில் பெரும் பங்கு உண்டு. அவர்களது மரக்கலங்கள் வங்கக் கடலையும், அரபில் கடலையும் வலம் வந்து பலதரப்பட்ட பொருட்களைக் கீழக்கரை, பாம்பன். தேவிபட்டிணம். தொண்டி ஆகிய துறைமுகங்களுக்குக் கொண்டு வந்தன. ஏற்றுமதிப் பொருட்களை எடுத்துச் சென்றன. அவர்கள் மரக்கலங்களுக்கு அரசர்கள் எனப்பட்டனர் (மரக்கலராயர் மரக்காயர்) இவர்களைக் “கப்பலோட்டிய தமிழர்கள்” எனலாம்.

மழையின்றிப் பெரும்பஞ்சம் ஏற்பட்டபோது சேது நாட்டில் சீதக்காதி அளித்த அன்னம் பல்லாயிரக்கணக்கான மக்களைக் காப்பாற்றியது. இதைக்கண்ட ஒரு புலவர் பின்வரும்

பாடலைப் பாடினார்.

”ஓர்தட்டிவே பொன்னும் ஓர்தட்டிலே நெல்லும் ஒக்கவிற்கும்

கார்கட்டிய பஞ்ச காலத்திலேயோர் தட்டு வாராமலே

மார்தட்டிலும் தட்டு ஊாராமலே அன்ன தானத்திற்கு

மார்தட்டியதுரை வள்ளல் சீதக்காதி வரோதயனே

## 55. சேதுபதியாரின் அவையில் சவ்வாதுப் புலவர் (1745-1808)

சேதுபதி மன்னர் முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதி (1762-1795) எமனேசுவரம் என்ற ஊரைச்சேர்ந்த முஹம்மது மீர் ஜவ்வாதுப் புலவர் என்பவரைத் தம் அவைக்களப் புலவராக அமரச் செய்து பெருமைப் படுத்தினார். அத்துடன் சுவாத்தான், வண்ணவயல் ஆகிய இரண்டு ஊர்களின் வருவாய் முழுவதும் அவர் குடும்பத்துக்குக் கிடைக்கும் வண்ணம் சர்வ மானியமாக வழங்கினார்.

சேதுபதி மன்னரின் 7 வயது மகளுக்கு கடும் சுரம் கண்டு நோய் அதிகரித்தது. அரண்மனை வைத்தியர்கள் கைவிட்ட நிலையில் ஜவ்வாது புலவர் அவர்கள் இறையருட் துணையுடன் மன்னர் மகளைப் பெரிய வாழையிலையில் படுக்கச் செய்து சேதுபதி மன்னர்களின் குலதெய்வமான இராஜராஜேஸ்வரி அம்மன் மீது ஐந்து பதிகங்கள் பாடி முடித்ததும் நோய் நீங்கிப் பூரண கம்பெற்றுக் குழந்தை எழ, மன்னர் மகிழ்ந்து சுவாத்தன், வண்ணவயல் ஆகிய இரு கிராமங்களைப் புலவருக்கு வழங்கினார். அந்தப் பாடல்கள்தாம் 'இராஜராஜேஸ்வரி அம்மன் பஞ்சரத்ன மாலை'யாகும்.

மற்றும் ஜவாதுப் புலவர் முஹ்யத்தீன் ஆண்டகை பிள்ளைத் தமிழ், நாகைக் கலம்பகம், மதீனத் தந்தாதி, வண்ணக் கவிகள், சீட்டுக் கவிகள் மற்றும் ஏராளமான அறன்களும் தனிப்பாடல்களும் பாடியுள்ளார்.

சவ்வாதுப் புலவர் சேதுபதி மன்னர், அவர் தம் உயர் அதிகாரி கள். சேதுபதியின் யானை பற்றியும் பல தனிப்பாடல்களைப் பாடியுள்ளார்.

வணங்காமுடி மண்ணர் என்று புகழ்பெற்ற சேதுபதி மன்னரை "நீர் ஒரு வணங்குமுடி மன்னரே" என ஜவ்வாதுப் புலவர் சிலேடையாக அரசவையில் பாடிய பாடல் இதோ:

"கிளையாளன் சேதுபதி ரகுநாயகன் கிஞ்சுகவாய்

இளையார் கலவியிடத்தும் தம்மீசாரிடத்து மன்றி

வளையாத பொன்முடி சற்றே வளையு மகுடமன்னர்

தளையாடிய கையில் காளாஞ்சி ரத்தும் சமயத்துமே!"

## 56. மொட்டைப் பக்கிரி தர்காவிற்கு சிவகங்கை மன்னர் கொடை

சிவகங்கையில் 'மொட்டைப் பக்கிரி" என்று மக்களால் அன்புடன் அழைக்கப்பட்ட இஸ்லாமிய ஞானி ஒருவர் இருந்தார். அவர் செய்த பலவிதமான அற்புதங்களை இன்றும் சிவகங்கை மக்கள் நினைவுகூர்கிறார்கள். இரவு தூங்கும்போது அவர் உடல் உறுப்புகள் வேறு வேறாகச் சிதறிக் கிடக்குமாம். காலையில் எழுந்து வருவாராம். அவருக்கு ஒரு தர்கா கட்டப்பட்டது. அதற்கு 'மொட்டைப் பக்கிரி தர்கா' என்றே பெயர். அதற்குச் சிவகங்கை மன்னர் அரசு நிலையிட்ட முத்து வடுகநாதர் பெரிய உடையத்தேவர் பல கொடைகளை வழங்கி செப்பேடும் வெட்டித் தந்துள்ளார்.

சிவகங்கை வரலாற்றுக் கருத்தரங்குக் கட்டுரைகள்

## 57. ஜாமி மசூதிக்கு கைக்கோளர் கொடை

வேலூர் மாவட்டம் வாலாஜா பேட்டையில் உள்ள ஜாமி மசூதியில் தரையில் பாவப்பட்ட பலகைக்கல் ஒன்றில் திருப்பணி செய்த கைக்கோளர்கள் குறிப்பிடப்படுகின்றனர். கல் முழுதும் தேய்ந்துவிட்டதால் விபரம் தெரியவில்லை. காலக் குறிப்பு அழிந்து விட்டது.

Annual Report on Epigraphy 219 of 1977

# 58. மதுரை அரசியார் மதித்த இஸ்லாம்

மதுரை நாயக்கர் மரபில் இராணி மங்கம்மாள் (1689 - 1706). இராணி மீனாட்சி (1732-1736) ஆட்சி புரிந்த அரசியர் ஆவர். அவர்கள் இருவரும் திருச்சி நத்ஹர்வலி தர்கா முதலிய பல பள்ளிவாசல்கட்கும். தர்காக்களுக்கும் கொடை கொடுத்ததோடு, பல இஸ்லாமிய ஞானியர்கட்கும் தாராளமாகக் கொடைகள் வழங்கினர். மதுரை நாயக்கர் காலத்தில் இஸ்லாமியர் பலர் உயர் அலுவலராகவும், படைப் பொறுப்பிலும் இருந்துள்ளனர்.



...

1. List of Anticuities, R. Sewell's Vol I, 40, 268
2. மதுரை நாயக்கர் வரலாறு" அ.கி. பரந்தாமனார். பக்கம் 342

## 59. அகமதுகான் நலத்திற்காக ஊரவர் வெட்டிய வாய்க்கால்

**இடம்** -திருநெல்வேலி மாவட்டம், நாங்குநேரி வட்டம், சிங்கிகுளம் என்னும் ஊரில் உள்ள கைலாசநாதர் கோயில் அருகே ஆற்றங்கரையில் உள்ள பாறையில் உள்ள கல்வெட்டு.

**காலம்** கி.பி.1722- சுபகிறுது வருடம், சித்திரை மாதம் 24-ஆம் தேதி.

**செய்தி**- பூலம் ஆகிய இராசராசபுரத்துக்குத் தென்கீழ்க்கரை ஆற்றில் கான் அசம்சா மகமதுகான் பட்டாவித்து சாயபு அவர்கள் அண்ணன் மீரேகான் பட்டாயித்து சாயிபவர்கள் மகன் அகமது கான் திமானுகான் பட்டாவித்து சாயபு அவர்கள் புண்ணியமாக ஆற்றில் வாய்க்கால் வெட்டினர். வெட்டியவர்கள் ஊரவர் என்று தெரிகிறது.

**கல்வெட்டு**

1. சகாற்த்தம் 1643ன் மேல் செல்லா
2. நின்ற கொல்லம் 897 வருஷம் சுபகிறுது வருஷம் சித்தி
3. ரை மாதம் 24 தேதி பூருவபட்சத்து பஞ்சமியும் சோ
4. ம வாரமும் சொபயோக சுபகரணமும் பெ
5. ற்ற அனுஷ நட்செத்திரத்து நாளையில்
6. தென்கரை நாட்டு பூலமான ராசரா
7. சபுரத்திலே தென்கீழ்க்கரை ஆத்துக்காலு
8. ண் படுத்தினது கான் அசம்சா மகம்ம
9. துகான் பட்டாயிந்து சாயிபவர்கள் தமையனா
10. ர் மீரேகான் பட்டாயித்து சாயிபவர்கள் குமா
11. ரன் அம்முதுகாள் இமானுகாள் பட்டாயித்து
12. சாயிபவர்களுக்குப் புண்ணியமாக ஊறவர்...... அயித்துலுதர் திருகு மெச்
13. சாயிபவர்கள்....

Annual Report on Epigraphy 268 of 1941

# 60. காசிம் மைதினுக்கு கோவை மக்கள் கொடை

மைசூர் மன்னர் இரண்டாம் கிருஷ்ணராச உடையார் (1734- 1766) காலத்தில் மைசூர் தளவாய்களின் அதிகாரத்திலிருந்து மைசூரை விடுவித்து ஐதர்அவி நாட்டு நிர்வாகத்தை மேற் கொண்டார்.

1765ஆம் ஆண்டு ஐதர்அலி நவாபு பாதர் சாயபு அவர்களின் காரியத்துக்குக் கர்த்தராகக் கோயமுத்தூரில் அட்டவணை. கந்தாசாரம், சுங்கம், பேரம் முதலிய சகல அதிகாரங்களையும் வகித்தவர் குறிக்கார மாதய்யன்.

அவர் காலத்தில் கோயமுத்தூர் அதிகாரிகளும், கணக்கர் முதலிய ஊழியர்களும், குடியானவர்களும் ஆகிய பலரும் ஒன்றாகக் கூடி கோயமுத்தூர்த் தயத்து காசிம் மைதீன் அவர்களுக்கு இரண்டு வள்ளம் தோட்ட நிலமும் (8 ஏக்கர்). ஒரு மா நன்செய் நிலமும் இரண்டு கிணறுகளும் கொடையாகக் கொடுக்கப்பட்டது.

கோயமுத்தூர்ப் பேட்டை சாவடி பாரபத்தியம், வெங்கட்ட ரமணய்யர். சேன்போகம் நாகய்யர், கணக்கு அலுவலர் ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர். கோயமுத்தூர் அதிகாரிகளில் எவரும் இஸ்லாமியராக இல்லை என்று இச்செப்பேடு மூலம் தெரிகிறது. கொடை கொடுத்தவர்கள் பட்டியலில் பலர் உள்ளனர்.

இந்தத் தருமத்திற்கு எவரேனும் தீங்கு செய்தால் அசுவகத்தி, குருகத்தி, சிசுகத்தி செய்த தோசமும், சுங்கைக் கரையில் ஏழு காராம் பசுவைக் கொன்ற தோசமும் வரும் என்றும்,

இசுலாமியர்கள் எவரேனும் தீங்கு செய்தால் மக்கா மதினத்திலே கருஞ்சாதி (பன்றி) கழுத்தை அறுத்துக் கொன்று தின்ற பாவம் கிடைக்கும் என்றும் எழுதப்பட்டுள்ளது.

இந்தத் தருமத்தைப் பரிபாலனம் பண்ணின பேர் கோதானம், பூதானம், கன்னியாதானம் செய்த பயனும் பெற்று, புத்திர சந்தானத்துடன் நெடுங்காலம் வாழ்வார்கள் என்றும் எழுதப் பட்டுள்ளது. இதை எழுதியவர் சித்திரச்சாவடி கணக்குப் பொண்ணைய பிள்ளை மகன் செல்லி அண்ணன் என்பவன்.

இச்செப்பேடு கோவைக் கிழார் சி.எம். இராமச்சந்திரச் செட்டியார் அவர்கள் தொகுப்பில் கோவை பேரூராதீனம் சாந்தலிங்கர் திருமடத்தில் உள்ளது.

**செப்பேடு**

1. சுபமஸ்து சொஸ்த்தஸ்ரீமன் மகாமண்ட
2. வேசுரன் அரியராயவிபாடன் பாஷைக்குத் தப்புவராத கண்டன்
3. கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான் எம்மண்டலமுந் தி
4. றைகொண்டருளிய பாண்டிமண்டவத் தாபனாசாரியன் ஒட்டிய மோகந்

5. தவிளத்தான் அரியதளவிபாடன் வில்லுக்கு விசையன் சொல்லுக்கு அ
6. ரிச்சந்திரன் சம்பத்துக்குக் குபேரன் அசுவபதி கெஜபதி நர
7. பதி படைக்கு ராசாதிராசன் ராசபரமேசுபரன் ராச
8. மார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசபயங்கரன் அஷ்ட்ட போ
9. க துரந்தரராகிய கிருஷ்ணராசடையார் அசுபதிராயர் புச்பெல
10. ராயர் சீரங்கராயர் அச்சுநமகாராயர் திப்பயமகாராயரா
11. கிய மைசூர் சமஸ்தானம் சிரீரங்கப்பட்டணம் கிருஷ்ணராசுடைய
12. ராசா ராச்சிய பரிபாலனம் பண்ணி ஆண்டருளிய கவியுக சகா
13. ற்த்தம் 4864 க்கு மேல் செல்லாநின்ற விய வருஷம் அற்பி
14. சை மாதம் 2 பஞ்சமி சுக்கிரவாரம் அஸ்த நட்சத்திரமும் க
15. பநாமயோகமும் மகாகரணமும் கூடின சுபதினத்தில் சீர
16. ங்கப்பட்டணத்தில் ரற்றின சிம்மாசன ரூடராய் பிறிதி
17. வி ராச்சியஞ்செய்கின்ற னாளையில் அயிதரல்லி நவாபுபாதர்
18. சாயபு அவர்கள் காரியந்துக்குக் கருத்தராகிய கோ
19. யம்புத்தூர் குறிக்கார மாதய்யனவர்கள் அட்டவணைக க
20. ந்தாசாரம் சுங்கம் பேரம் தேவஸ்தானம் முதலாகிய
21. சகல அதிகாரமும் செய்கின்ற ராயஸ்திரி மாதய்யன் அ
22. வர்கள் னாளையில் கோயமுத்தூர் பேட்டை சாவடிப்
23. பாரபத்தியம் வெங்கிட்டரமணய்யரவர்கள் சேன்போக
24. னாகையனவர்கள் கணக்கு நீலகண்டம்பிள்ளை அத்த
25. ப்ப பிள்ளை குடியாளவர்களின் ராமனாதபள்ளை சாமராச
26. பிள்ளை குமாரவேல்பிள்ளை யெமூராபிள்ளை தாண்டவமூர்த்
27. திசாமி ஆளுவாக் கவுண்டன் ராசப்புடையாக்கவுண்
28. டன் பெத்தாக்கவுண்டன் நல்லதம்பி அங்கணாள் முகத்தப்புடையா
29. ன் நாகள் குட்டையன் அங்கணள் மன்னமுத்தன் ராசசேரு
30. வைகாரன் குப்பிசெட்டியார் சுப்பராய செட்டியார் முதலி
31. யார் அவர்கள் பண்ணையன் தெய்வசிகாமணிக்கவுண்டன்

32. மனவார் சுசி ராசையனமுது முதலான குடியானவர்கள்
33. யெல்லோருங் கோயமுத்தூர் தலத்தில் இருக்கும் காசிம்
34. மைய்யதின் அவர்களுக்குத் தற்மம் சாசனம் சறுவ மா
35. னியம் நடந்து வருகுற்படிக்குப் பேட்டைச் சாவடிக்குச் சே
36. ந்த நிலம் நரசிங்கனய்யனவர்கள் குளத்துப்பத்தில்
37. யேரிக்குங் கீளத் தெற்குப் புறத்தில் மாதன் தோட்டத்து
38. க்கு வடக்கு சாயபூகான் மகன் உசேனுகான் கும்மந்
39. தான் தோட்டத்துக்கு மேற்கு னாக சேருவைகாரன்

**இரண்டாம் பக்கம்**

40. குடி கிணத்துத் தோட்டத்துக்கும் கி
41. ளக்கு இது நடு மத்தியத்தில் பெருக்கு னாகசேருவைகாரன்
42. உளுத தோட்டம் ரண்டு வள்ளம் பூமி ரெண்டு கிணறும்
43. சருவமானியமாகக் கோயமுத்தூர்ப் பெரிய குளத்து
44. யேரிக்குங் கீழே னாட்சிமார் மதகுத் தண்ணீர்ப் பாச்சலி
45. லே காடுவெட்டியில் னாட்சிமார் மதகு பொய்க்காலுக்கும் தெ
46. ற்கு வெள்ளாம்பந்து வாய்க்காலுக்கும் வடக்கு பள்ள அரு
47. ளன் வயலுக்கு மேற்கு எமூராபிள்ளைவயலுக்கும் கிளக்கு
48. இது நடுமத்தியத்தில் பெறாக்குப் பெத்தாக்கவுண்டன் உளு
49. த நிலம் ஒரு மா நிலம் கோயமுத்தூர்க் காசிமையதி
50. ன் அவர்களுக்குச் சருவ மானியமாகக் குடுத்தது ரண்டு
51. வள்ளத் தோட்டமும் ரண்டு கிணறும் இந்த ஒரு மா நிலமு
52. ங் குடுத்தது இது சந்திரசூரியர் உள்ளவரைக்கும் பூமி ஆகா
53. சம் உள்ளவரைக்கும் இதில் எப்பேர்ப்பட்ட பயிரும் இட்டு
54. அனுபவித்துக் கொள்ளவும் புத்திர பவுத்திர ருள்ளவரைக்
55. கும் அனுபவித்துக் கொள்ளவும் இதுக்குச் சாட்சி
56. காகச் அல்லிச மாக்கானரு நவாபு சந்தா சா
57. யபூ மகராசா அல்லி கானா இதுக்கு ஒப்பம்

58. ______________________________

59. சுபையதார் ரகுனானதயன் கரணிக்க நரசிங்கைய
60. ன் கரணிக்கத் திம்மப்பையன் கரணிக்க அரி கிஷ்
61. ண முதலியார் கந்தாசாரத்துச் சேளபோக
62. ர் சவுடய்யன் விங்கையன் குடியான பேருகள்
63. பேட்டைச் சாவுடிப் பாரபத்தியக்காரர் வெங்கிட்டர
64. மணய்யன் கணக்கு அந்தப்பபிள்ளை யெமூராபிள்ளை சாமி
65. னாதபின்னை ராமனாதபிள்ளை ராசப்புடையாக் கவுண்டன்
66. நல்லதம்பி அங்கண்ணாகவுண்டன் குட்டையன் அங்கண்
67. ணகவுண்டன் மன்னமுத்தன் நாங்கள் அனைவரும் கூ
68. டி எழுதிக் குடுத்த தர்மசாதனப் பட்டையம் இந்த தர்
69. மத்துக்கு இடரு செய்த பேருக்கு அகவத்தி குருவந்தி சிசு
70. வத்தி செய்த தோஷம் கெங்கைக் கரையில் ஏழு காரா
71. ம்பசுவைக் கொன்ற பாவத்திலே போசுக் கடவா
72. ராகவும் இதுக்குத் துலுக்கரில் யாதாமொருவன்
73. இடரு செய்தால் மக்கா மதினத்தில் கருஞ்சாதி களு
74. த்தை அறுத்துத் தின்ன பாவத்தில் போவாராகவும்
75. இந்தத் தருமம் பரிபாலனம் செய்த பேருகளுக்கு கோதா
76. னம் பூதானம் கன்னியாதானம் செய்த பலனும் பெ
77. ற்று புத்திரசந்தானமும் பெற்று நீடூனி காலம் வா
78. ள்வாராகவும் இந்தத் நர்ம சாசனப்பட்
79. டையம் எழுதிவைன் சித்திரைச் சாவடிக்
80. கணக்குப் பொன்னயபிள்ளை மகன் செல்
81. விஅண்ணன் குருவே துணை

கோவை, பேரூர், சாந்தலிங்கர் திருமடத்தில் இச்செப்பேடு கோவை கிழார் சி.எம். இராமச்சந்திரச் செட்டியார் தொகுப்பில் உள்ளது. படித்தவர் புலவர் ஐ. இராமசாமி

# 61. காயல்பட்டினம் பள்ளிவாசல்களில் பாண்டியர் கல்வெட்டுக்கள்

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருச்செந்தூர் வட்டத்தைச் சேர்ந்த காயல்பட்டினம் தொன்மையான பேரூர். பவித்ரமாணிக்கப் பட்டினம் என்று வரலாற்றிலும் 'சிறிய மெக்கா' என்று இஸ்லாமியப் பெருமக்களாலும் அழைக்கப்படும் சிறப்பு மிக்க ஊர். பாண்டியர் வரலாற்றோடு தொடர்புடைய ஊர். அங்குள்ள பள்ளிவாசல்களில் உள்ள கல்வெட்டுக்களில் ஐந்து கல்வெட்டுக்கள் பாண்டியர் காலத்தைச் சேர்ந்தவை. 1, 4, 5 ஆம் எண் கல்வெட்டுக்கள் புதுக்கோட்டை முனை ராஜாமுகமது அவர்கள் அன்புடன் உதவியவை.

**1) கடற்கரைப் பள்ளிக் கல்வெட்டு**

கடற்கரைப் பள்ளியில் இருந்த இக்கல்வெட்டு கற்புடையார் பள்ளியில் இப்போது வைக்கப்பட்டுள்ளது. சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் (கி.பி. 1190-1218) கல்வெட்டு. 'பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப' என்ற அவன் மெய்க்கீர்த்தியோடு கல்வெட்டு தொடங்குகிறது.

ஐந்து பாண்டியர்களுள் ஒருவனாகிய இம்மன்னன் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்ற ஊரில் உள்ள கடற்கரைப் பள்ளிக்கு முத்துச் சலாபத்தைக் கொடையாகக் கொடுத்ததை இக்கல்வெட்டுக் கூறுகிறது. "கீழ்க் கடல் படர் காயலந்துறை கொற்கை முத்துடை வீரபாண்டியன் பட்டினத்துள் வெண்டிரன் மணல்மேட்டு மேலெல்லை பவித்திர மாணிக்க நகர்" என்று புகழப்படுகிறது. 'வணிக சோனகர்' என்ற தொடரும் காணப்படுகிறது.

**கல்வெட்டு**

பூவின் கிழத்தி மேவி விற்றிருப்ப

மேதினி மாது நீதியில் புணர

மடந்தை சயப்புயத் திருப்ப

மாக்கலை மடந்தை வாக்கினில் பொலிய

திசைஇரு நான்கும் இசைநிலா எரிப்ப

மறைநெறி வளர மனுநெறி திகழ்தர

அறநெறிச் சமயங்கள் ஆரும் தழைப்ப

.............................................எழுகடல் பொழில்

வெண்குடை நிழற்ற செங்கோல் நடப்ப

இருநேமி யளவும் ஒருநேமி ஓங்க

சேரலர் பணிய... மணியணி

மாட கூடப் பாண்டிமண் டலங்கொள்

தென்கீழ்க் கடல்படர் காய லந்துறை

கொற்கை முத்துடை வீரபாண்டியன் பட்டினத்துள்

வெண்டிரன் மணல்மேட்டு மேலெல்கை பணித்திர மாணிக்க

நகர்க்குக் காவலர் ஐவருக் கொருவர்

திரிபுவனச் சக்கரவர்த்தி ஆணையாகக் கடற்கரைப் பள்ளி இறையிலியாகக்

குடுக்கும்படிக்கு திருவுளத்தருளிய முத்துச் சலாபம் வாணிகச் சோனகர் குழுக்காய் நாட்டிப் படுத்து.... எல்கை காட்டியும்... வாறெல்லாம்... யாண்டு... விளங்குமுயர் வெள்ளிநாள்.... கல்லில் வெட்டுவித்தேன்.... த்துத்.... மாறென... ரா... கண்டனனே... தென்னர் பராக்கிரமனே.... யு.... ஒன்றே யாண்டு கொள்ளவுமாக.... துல்யம்... எழுத்து.. ஸ்ரீ...

**2) கற்புடையார் பள்ளிக் கல்வெட் டு**

மாறவர்மன் குலசேகரப் பாண்டியயன் (1314-1362) காலக்

கல்வெட்டு,அரசனின் 11ஆம் ஆட்சியாண்டில் பவித்திர மாணிக்கப் பட்டினத்து வியாபாரி வடவணிகன் என்பவன் சந்தியா தீப விளக்குவைக்க இரண்டு அச்சுக் கொடுத்தான்.”

**கல்வெட்டு**

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கர வத்திகள் குலசேகர பாண்டிய தேவர்க்கு யாண்டு ஒன்பதாவதின் எதிர் இரண்டாவது பவித்திர மாணிக்க பட்டினத்து வியாபாரி வடவணிகன்... செய்வதாக சந்தி தீப விளக்குக்குப் பண்டாரத்துக்கு அச்சு இரண்டு இத்தர்மம் சந்திராதித்தவரை செல்வதாக...

**3) இரட்டைக் குளம் பள்ளிவாசல் கல்வெட்டு**

மேல் கல்வெட்டில் கண்ட குலசேகர பாண்டியனின் 16வது ஆட்சியாண்டில் சுல்தான், உய்யவந்தான் திருவனந்தன் ஆகியோர் கொடுத்த கொடை குறிக்கப்படுகிறது.

**கல்வெட்டு**

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு பராண்டு பதினைந்தாவதுக்கு எதிராவது சுல்தான் உள்ளிட்டாரும் உய்யவந்தான் திருவனந்தன் இவ்வனைவோரும்...

**4) கற்புடையார்பள்ளிக் கல்வெட்டு**

மாறவர்மன் வீரபாண்டியன் காலக் கல்வெட்டு (1334-1367) பவித்திர மாணிக்கப் பட்டினமான காகிற்றூர் நாடாள்வான் கறுப்புடையார் சோகைப்பள்ளிக்குக் கொடையாக சோனக வியா பாரிகள் தலைவனுக்குக் கொடுத்த ஆணையை இக்கல்வெட்டு கூறுகிறது. இரு போகத்துக்கும் நன்செய், புன்செய் விளைவில் அவ்வூரார் கொடுக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இதுவரை வரியும் இனிப்பிறக்கும் வரிகளும் கறுப்புடையார் பள்ளிக்கு விட்ட நிலங்களுக்கு இல்லை என்று கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறப்பன்மரான திரிபுவனச்ச
2. க்கரவர்த்திகள் செம்பிநாடு கொண்டருளின சிறிவீர
3. பாண்டிய தேவற்கு யாண்டு.. யாவதின் எதிராமா

4. ண்டு இசப நாயிற்று யிருபத்தெட்டாந் தியதியும் திங்
5. கணாளும் புனர்பூயந்துநாள் கண்டனன்
6. பவித்திரமாணிக்கப்பட்டினமான காகிற்றூர் கண் நாடா
7. ள்வானேன் எட்டடி நெடுந்தெரு வீற்றுள்ள ஆரல் சுத்
8. தலை தர தரங்கத்து சோகை வியாபாரி நாயகற்
9. கு கறுப்புடையார் சோவைப்பள்ளி.. குடிக்குள் கோன்
10. செய்யுனென். மேல் குடிமை அந்த
11. ராயம்.. கீழ்மேல் எல்லை காயல் கரைக்
12. குப் புள்ளிபுக்க நிலம் புன்செய் நன்செய்... மாவுக்குப்
13. பாசனம் பொக்கத்து வாயிலைக் கொடிப்புறத்து
14. வாழையுள்பட்டு ஆடி குறுவை அல்பிசி குறுவைக்கு மரந்தால்
15. .....கல நெல்லு தூணிப்பதற்கு நெல்லும்.. அ...
16. .....திரமும் இறுப்பதாக.... வும்
17. ..................................................சோலைப்
18. பள்ளிக் கிதுவகை வரி இல்லாத இருந்திப் பிறக்கும்
19. சையிற் காட்டி................................
20. ............அஞ்சவண்ணத் தொழுகை செய்...
21. துவரற்கா... பவித்திர மாணிக்க நகரூர் காகிற்
22. றூர் நாடென்ற பட்டினத்து.. கறுப்
23. புடையான் தலைவன் கணக்கன் புரந்து எளுதிக்காத்து அறப்
24. பகஞ்செய்யக்..... கடவரால்
25. –கு இறுக்கும்படிக்கு கல்வெட்டிக்
26. குடுத்தேன்.. ஸ்ரீ...

### 5) கொடிமரத்து சிறுநயினார்பள்ளிக் கல்வெட்டு

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் காலக் கல்வெட்டு (கி.பி. 1422-1463) துருக்கநயினாப் பள்ளியில் சிறந்த முறையில் விழாக்கள் நடத்த தென்காயல் மக்கள் எல்வோரும் மகிழ தொழுகை நடத்த அர்த்த மண்டபம் இடைநாழி, பெருமண்டபம், தண்ணீர்க் குளம் அமைத்து

ஏற்ற திருப்பணிகளும் செய்யப்பட்டன. இவை அனைத்தும் அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் 25ஆம் ஆட்சியாண்டில் (கி.பி 1451) நடைபெற்றன.

தென்வாலி நாட்டுப் பொருநையாறு பாயும் பகுதியில் வடபுறம் உமரிக்காட்டு எல்லைக்கு உட்பட்ட மாத்தூர் கொடையாகக் கொடுக்கப்பட்டது. புன்னைக் காயலும் குறிக்கப் பெறுகிறது. அரசன் எல்லா வருவாயும் பள்ளிவாசலுக்கு அளிக்க ஓலை கொடுத்தான். இவ்வோலை கல்வெட்டாக வெட்டப்பட்டு செப்பேடும் கொடுக்கப்பட்டது. கொடை நிலங்களுக்கு வரிகளும் நீக்கப்பட்டன.

கொற்கை அதிகாரிகன் சிலர் கையொப்பமிட்டுள்ளனர். தென்காசிக் கோயில் திருப்பணிகள் செய்தவன் சிவபக்தனான இம்மன்னனே யாவான்.

**கல்வெட்டு**

சுபமஸ்து

1. பூமிசை வனிகை மார்பினில் பொலிய
2. நாமிசை கலைமகள் நலமுற விளங்க
3. புயவரை மீது சயமகள் புணர
4. கயலிணை உலகில் கண்ணெனத் திகழ்தரச்
5. சந்திர குவத்து வந்தவ தரித்து
6. முந்தையர் தவத்து முளையென வளர்ந்து
7. தென்கலை வடகளை தெளிவுறத் தெரிந்து
8. மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
9. சங்கர சரண பங்கயஞ்சூடி
10. வீர பாண்டிய பட்டினத் துள்திகழ்
11. ஆர்கவி யோதக்கரை...
12. .....கல்தரள வண்மணி தேக்கு
13. புரிசையங் கிருந்து தனிக்குடை திகழ்புரி
14. பவித்ர மாணிக்கப் பட்டினத் துறுபெரும்
15. செய்மா துறையும் காயல் பட்டினம்
16. திகழ்தரு ஒருக்க நயினாப் பள்ளி
17. விழாவணி நடாத்தி வழாவகை நடாத்தற்கு
18. தென்காயல் நாட்டு மண்மக்கள் உவப்ப

19. தொழுகை அர்த்தமண் டபமும் இடைநாழி
20. பெருமண்டபமும் அலம்புநீர் வாவியும் செய்து
21. திருப்பணி செய்து சோகைப் பள்ளி
22. சிரி அரிகேசரி பராக்ரம பாண்டிய தேவர்க்கு யாண்டு இருபத்
23. தெட்டாவதின் மேலாம் எதிரது டந்து இருபத்தொன்றாம்
24. தியதி பூரணையும் வெள்ளிக்கிழமை சோதிநாள்... யந்து
25. தென்பாரி நாட்டுப் பொருநை பாயும் உத்தரதீரத்து உமரி
26. காட்டெல்லை யுட்படு மாத்தூர் காணிக்கு பராக்கிரம
27. பாண்டிய தேவற்கு எல்கையான புன்னைக் காயற்கு உட்பட்ட
28. வடக்கீழ் எல்கை.. நன்செயும் புன்செயும் மேடும் குளனும்
29. மாலடை மரட பட்டைகொடித் தோட்டமும்...
30. செக்திறை மற்றுமுள்ள சமஸ்தப்பிராப்திகள் யாவும் முப்பதாவது
31. பாசன முப்பெரு முதலுக்கு தேவதானமாக விட்டது இம்
32. மரியாதையிலே இவ்வோலை பிடிபாடாகக் கொண்டு...
33. உள்ளளவும்.
34. கையாண்டு செம்பிலும் கல்லிலும் வெட்டியது இதனால்
35. பள்ளியிற் றொழுகைப் பணிகள் எவையும் முறையோ
36. டாழ்வாற நடாத்திப் போதாவும் பாற்க.. இவை
37. கொற்கை பராக்கிரம மாறன் சிதியரிபாண்டியன் தென்னவன்
38. எழுத்து.. நுல்யம்.. பவித்திரமாணிக்கப் பட்டினப்
39. .......................சந்திராதித்தவம்
40. ........வரியிலார் கணக்கிலும் தவிர்த்து
41. கையாண்டு கொள்ளவும் துல்யம்.. ஸ்வஸ்திஸ்ரீ...

## 62. உதய மார்த்தாண்டன் புதுப்பித்த பள்ளிவாசல்

**இடம்**-திருநெல்வேலி மாவட்டம், திருச்செந்தூர் வட்டம், வீரபாண்டியன் பட்டினம் காட்டு மகதூம் பள்ளிவாசல் கொல்லம்

**காலம் -**568; உதய மார்த்தாண்ட வர்மன். கி.பி. 31.7.1387

**செய்தி** -நாஞ்சில் நாட்டு மன்னன் உதயமார்த்தாண்ட வர்மன் கோணாடு கொண்டான் பட்டினத்தில் உள்ள ஜூம்மாத்துப் பள்ளிவாசலைப் புதுப்பித்துத் தன் பெயரால் 'உதைய மார்த்தாண்டப் பெரும்பள்ளி" என்று பெயர் வைத்து அவ்வூர்க் காதியாருக்கும் "உதைய மார்த் தாண்டக் காதியார்" என்றும் பெயர் கொடுத்தார். துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட் கெல்லாம் நாலு பணத்துக்குத் கால் பணம் மசுமைக் கொடையளிக்கவும் ஏற்பாடு செய்தார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ அருளிச்
2. செயல் கொல்ல
3. மம் 563 வருஷம் சிங்
4. மம் இரண்
5. டாந் தியதியும் ப
6. வுர்ணமியும் புதன்
7. கிழமையும் பெற்ற
8. அவிட்டத்து நாள்
9. சோனாடு கொண்
10. டான் பட்டினத்து ஜூ
11. மாத்துப் பள்ளிக்கு
12. உதையமார்த்தாண்
13. டப் பெரும்பள்ளி எ
14. ன்று பேருங்குடுத்
15. து இவ்வூரிற் காதி
16. யார் அபூவக்கற்கு
17. உநையமாத்தாண்

18. டக் காதியார் என்று
19. பேருங் குடுத்து இந்
20. தப் பள்ளிக்கு சுவந்
21. தரமாக இந்தச் சோ
22. னாடு கொண்டான் ப
23. ட்டினத்துத் துறை
24. யில் ஏற்றுமதி இறக்
25. குமதி கொள்ளும்
26. வகைகளுக்கு எ
27. ல்லாம் விலைப்
28. படி உள்ள முதலு
29. க்கு நாலு பணத்து
30. க்கு காற்பணமாக
31. உள்ள விழுக்காடு
32. பெறும்படியும் இ
33. ன்னாள்வரை இப்படியி
34. லே பேரும் வழங்கி
35. இந்தச் சுதந்தரமும் பெற்
36. றுப் போதும்படியும்

ARE 311 of 1964

## 63. மண்ணையார்கள் தந்த பள்ளிவாசல் கொடை

இடம்- தஞ்சாவூர் நகரம் சமசுப்ரு பள்ளிவாசலில் நடப் பட்டுள்ள குத்துக்கல்

காலம்-தஞ்சை நாயக்க மரபில் முதல் மன்னன் செவ்வப்ப நாயக்கர் காலம் (1549-1572): சாதாரண வருடம் மார்கழி 14

நாஞ்சிக் கோட்டையில் உள்ள கள்ளர் மரபினரில் ஐந்து மண்ணையார்களை அழைத்து இப்பள்ளி வாசலுக்கு ஏழு வேலி நிலம் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதன்படி அவர்கள் நிலம் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. (கள்ளர் சமூகத்தில் ஒரு பிரிவினர் மண்ணையார்).

நிலத்தின் எல்லைகள் கூறப்படுகின்றன. சூத்திரரும், பிராமணரும் இத்தர்மத்துக்குத் தீங்கு செய்தால் காசி, ராமேசுவரத்தில் காராம் பசுவைக் கொன்ற பாவமும், சுவாமியர்கள் தீங்கு செய்தால் மக்கத்துப் பள்ளியிலே தாயைச் சேர்த்த பாவமும் வரும் என்று கூறப் பட்டுள்ளது. இதன் காலம் கி. பி. 1550.

கல்வெட்டு

1. சாதா
2. ருண
3. வருஷம் மா
4. ர்கழி
5. மாதம் 14 தேதி
6. தஞ்சா
7. வூரில் இ
8. ருக்கும்
9. சுமுசுப்பி
10. ரு பள்ளி ப
11. க்கீருகளுக்
12. கு நிலம் விட
13. வேணுமெ
14. ன்று செ
15. ல்வப்ப

43. சிலம்பாம
44. ண்ணையார்
45. வேல்மண்ணை
46. யார் கோபால்
47. மண்ணையாத்
48. .....மண்ணை
49. யார் தம்பம
50. ணைணையார்
51. இந்த அஞ்சு மண்ணையாத்
52. ணையாரும் சம்ம
53. தித்து எங்கள் எல்
54. லையிலே ஏழு வேலி
55. நிலம் விட்டத்துக்
56. கு எல்லை கரும்
57. ங்குளம் உள்பட
58. கருங்குளத்து
59. க்கு வடக்கு ண்ட
60. கோட்டை
61. க்கு கிழுங்கும்
62. கரைக்கி தெற்கு
63. அழகிய குளத்து
64. வாரிக்கு மேற்
65. க்கு இந்த நாங்
66. கெல்லைக்குள்
67. பட்ட நிலத்தை
68. சந்திரத்தவ
69. ரைக்கும் ஆ

70. ண்டனுபவி
71. ச்சு கொள்ள
72. க் கடவோராக
73. வும் இந்தபடி
74. க்கு னாயக்கர்
75. அய்யன் அவ
76. ர்களும் மண்
77. ணையார்க
78. ளும் சம்ம
79. த்து விட்ட
80. டது இதுக்கு
81. யாதாமொ
82. ருவர் சூத்தி
83. ரரிலே
84. பிராம
85. ணரி
86. லேவிக்
87. கினம்
88. பண்ணி
89. னார்க
90. ஆனால்
91. காசி ரா
92. மேசு
93. ரத்தி
94. லே குரால்
95. பசுவை
96. கொன்ற

97. தோசத்
98. திலேபோ
99. வார்
100. துலுக்கரி
101. லே யாதா
102. மொருவ
103. ர் விக்கிந
104. ம் பண்ணி
105. னார்
106. ல் மக்கத்து
107. பள்ளி
108. லே பெத்த தா
109. யெ தனா செ
110. ய்த பாவத்
111. திலே போ
112. வார்
113. யிதுக்கு
114. வெட்டி
115. யான
116. கல்லு
117. படி

ARE 294 of 1964;425 of 1984

ஆவணம், 4 சனவரி 1994, பக்கம் 102, 103

# 64. வீரப்ப நாயக்கர் மீட்ட பள்ளிவாசல் நிலம்

மதுரை நகரில் உள்ள கோரிபாளையம் பள்ளிவாசலில் வீரப்ப நாயக்கர் (1572-1595) கல்வெட்டொன்று உள்ளது. ‘சிவமயம்’ என்று தொடங்கும் அக்கல்வெட்டு ஒரு அரிய தகவலைத் தருகிறது.

அப்பள்ளிவாசலில் நல்லடக்கமாயிருக்கும் புனிதர் டில்லிப் பேரரசர் வாரங்கல்லில் ஆட்சிபுரிந்த கல்தான் ஆவார். உலுக்கான் அல்லது துக்ளக் என்பது அவர் பெயர். அவர் காலம் 14ஆம் நூற்றாண்டாகும். மதுரைக்கு கி.பி. 13.2.3ல் வந்த அவர் இங்கேயே அடக்கமாகிவிட்டார். அவரை இக்கல்வெட்டு “டில்லி ஒரு கோல் சுல்தான்” என்று கூறுகிறது. ‘வாரங்கல்’ என்பதைக் கல்வெட்டு ‘ஒருகோல்’ என்று குறிக்கிறது.

மதுரைக் கூன்பாண்டியன் நாளில் 14 ஆயிரம் பொன் அளித்துச் சோளிகுடி. சொக்கிகுளம், வீவிகுளம், கண்ணானேம்பல் சிறுத்தூர், திருப்பாலை என்ற ஊர்களைப் பள்ளி வாசலுக்கு மானியமாக அளித்தான். அக்கிராமங்கட்கு எல்லைக் கல்லும் போடப்பட்டது.

மதுரை நாயக்கர் ஆட்சியில் பள்ளிவாசலுக்கும் அந்த ஊர்களின் நிர்வாகிகளுக்கும் அவ்வூர் உரிமை பற்றிய தகராறு எழுந்தது. மதுரை நாயக்கர் மரபில் அப்போது ஆட்சியிலிருந்த வீரப்பநாயக்கர் தேரில் பள்ளிவாசலுக்குச் சென்று விசாரணை செய்தார். அங்குப் பாண்டியன் அப்பள்ளிவாசலுக்கு மேற்கண்ட ஊர்களைக் கொடுத்த ஆவணம் முதலியவற்றைப் பார்வையிட்டார்.

பள்ளிவாசல் நிர்வாகிகள் கோரிக்கையில் நியாயம் இருப்பதை உணர்ந்து அந்த ஆறு ஊர்களையும் மீண்டும் பள்ளிவாசலுக்கே சந்திர சூரியர் உள்ளவரை அளித்து அதைக் கல்வெட்டாகவும் பொறித்து வைத்தார். (1573)

சுமார் இரண்டு மீட்டர் உயரமுள்ள அக்கல்லில் நான்கு பக்கங்களிலும் 182 வரிகளில் மேற்கண்ட செய்தி எழுதப் பட்டுள்ளது. இதன் காலம் 1574.

**கல்வெட்டு**

சிவமயம். சொஸ்திஸ்ரீரிமன் மகாமண்டலேசுரன் அரியற தளவிபாடன் மூவராயர் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான் பூறுவ தெட்சிண பச்சிம உத்தர சதுர் சமுத்திராபதி பாண்டி மண்டல ஸ்த ரப்னச்சாரியன் சோளம்ண்ட

பிறதிட்டாபனாசாரியன் தொண்ட மண்டல சண்டப் பிரசண்டன். ஈழமும் கொங்கு கம்பழமும் யாழ்ப்பாணப் பட்டணமும் கேசரி வேட்டை கொண்டருளிய ராச பரமேசுவரன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் வெகுநீதி ராசபரிபாலகன் ராசாக்கள் தம்பிரான் கிஷ்ட்டணராயர் அவர்கள் காரியத்துக் கர்த்தராகிய விசுவநாதநாயக்கன் கிருஷ்ண நாயக்கன் வீரப்ப நாயக்கன் அய்யன் அவர்கள் ராச்சிய பரிபாவனம் பண்ணிச்

செய்தருளாநின்ற சாலிவாகன சகாப்தம் 1495 மேல் செல்லாநின்ற பல வருஷம் தை மாசம் 10 தேதி சுபயோக சுபகரணமம் கூடிய சுபதினத்தில் மதுரை நாட்டில் வைகை நதிக்கு வடகரையாகிய கோரி பாளையத்தில் ல்லி ஒருகோல் கலுத்தான் பள்ளிவாசல் கோரிக்கு சோளிகுடி சாக்கிகுளம் வீவிகுளக் கண்ணானேம்பல் சிறுத்தூர் திருப்பாவை இந்த ஆறு கிராமமும் முன் கூன்பாண்டியராசா 14 ஆயிரம் தங்கத்துக்கு வாலை பிரமாணம் பண்ணிக் குடுத்து நடந்துவந்த படியினாலே யிதன் பிறகு றாசாக்களுக்கும் மஸ்கருக்கும் தகராறு வந்து நாம் நாயம் விசாரிக்கும்போது பாண்டியன் கோரிக்கு விலைப்பிரமாணம் பண்ணிக் குடுத்த அத்தாட்சி நியாயமானபடி யினாலே முன் நடந்தபடிக்கு நாமும் அபிமானிச்சுக் குடுத்தோம் எல்கை முன் பாண்டிய நாட்டின் கல்லு எல்கைப்படிக்கு இந்த ஆறு கிராமத்தில் சகல சமஸ்த ஆதாயமும் சுகமே என்னென்னைக்கும் சூரியப் பிரவேசம் உள்ளமட்டுக்கும் சுகமே அனுபவித்துக் கொள்வார்களாக,

இஸ்லாமியக் கல்வெட்டுக்கள் - ஒரு கண்னோட்டம்.செ. இராசு

இளையான்குடி ஜாகிர் உசேன் கல்லூரி கருத்தரங்கு மலர்.

## 65. ரணசிங்க தேவரின் காட்டுபாவா பள்ளிவாசல் கொடை

**இடம்**-புதுக்கோட்டை மாவட்டம், திருமெய்யம் வட்டம். காட்டுபாவா பள்ளிவாசல் முன்பு நடப்பட்டுள்ள கல்.

**காலம்**- தாது வருடம்- ஐப்பசி 13, கி.பி. 1690

**செய்தி**- சேதுபதி மன்னர் காத்த ரகுனாதத் தேவர் மகன் ரணசிங்கத் தேவர் காட்டுபாவா பள்ளிவாசலுக்கு அடுங்குளம், காஞ்சவான் குளம் ஆகியவற்றை நீர் பாயும் நிலத்துடன் கொடை கொடுத்தார். கல்வாசல். நாட்டாரும்.கானாட்டாரும். காலூர் பள்ளி வாசலுக்குக் கொடுத்த கொடையும் இறுதியில் கூறப்பட்டுள்ளது

**கல்வெட்டு**

1. தாது வருஷம்
2. அற்பசி மாதம் 13 தேதி
3. சேதுபதி காத்த
4. ரெகுனாதத் தேவ
5. ர் குமாரன் ரண
6. சிங்குத் தேவர் உ
7. த்தாரம் நாடுகா
8. த்த சேருவை
9. லக்கி சேருவைகா
10. ரன் சீவிதம் நல்
11. லூர் புரவில் அ
12. டுக்குளமும் வ
13. யலும் காஞ்ச
14. வன் குளமும்
15. வயலும் இது
16. சூழ்ந்த புரவும்கா
17. ட்டுவாவா பள்ளி
18. வாசல் தன்முத்

19. துக்கு விட்டது
20. சந்திராதித்தவ
21. ரைக்கும் நடக்கக்
22. கடவதாகவும்
23. கல்வாசல் நாட்டா
24. ரும் கானானாட்டா
25. ருங் காலூர் பள்ளி
26. வாசல் காணி
27. இக் காணி
28. புத்திரபவுத்திர
29. வரைக்கும் அ
30. னுபவிக்கவும்

புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள். எண் 901, பக் 594

## 66. தொண்டைமான்அகமது சாயபுக்கு அளித்த கொடை

**இடம்**-புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம். லெட்சுமணப் பட்டியில் நடப்பட்டிருக்கும் ஒரு கல்.

**காலம்**-இரகுநாதத் தொண்டைமான் காலம்

**செய்தி**-புதுகோட்டை மன்னர் ரகுநாத ராய தொண்டைமானார் (1686-1730)அவர்கள் அசரது அகம்மது சாயபு குருக்களவர்கட்கு லெட்சுமண பாண்டியப் பள்ளி கிராமத்தில் நான்கு எல்லைகட்கு உட்பட்ட பகுதிகளையும் நன்செய் நிலமும், குளம் வருவாயில் இருபதும் கொடையாக அளித்தார்.

**கல்வெட்டு**

1. ........
2. 1 தேதி அச
3. ரது நவாபு சாய
4. பு உளமந்தயத்
5. தல் உமுற வுபர் அதுர
6. யவர்கள் உத்தாரப் ப
7. டிக்கி அசரது அகம்ம
8. து சாயபு குருக்களவ
9. ர்களுக்கு ரா ரெகுனா
10. த ராய தொண்டை மா
11. னாரவர்கள் லெட்சு
12. மன்பாண்டிய பட்டி
13. கிராமம் குடியெ சேந்
14. த எல்லை நாங்கு
15. ம் நஞ்சை குள
16. ம் துகை இருபது
17. இதில் சேந்த புஞ்
18. சை நிலம் கி

19. ராமம் சந்தி
20. ரர் வரைக்கும்
21. காவேரியும் பில்
22. லும் உள்ளவரைக்கும்
23. ஆண்டு கொள்ளுவாராக
24. வும் இந்தநர்மத்து
25. க்கு தமிளரிலே ஆதா
26. மொருவர் பிசரு ப
27. ன்னினால் கெ
28. ங்கைக் கரையிலே காராம்
29. பசுவைக் கொன்ன
30. தோஷத்திலே போ
31. வாராகவும் துலுக்கரி
32. வே யாதாமொருவர் பி
33. பண்ணினால் மக்
34. காவிலே மிருகத்தினால் வ
35. யிறு சாப்பிட்ட நோஷ்
36. த்துலே போவாராக
37. வும் இப்படிக்கு சாதன
38. கல்லில் வெட்டிவிச்சோ
39. ம் யிந்த சாதனத்தை
40. யெளுதினது மரு
41. தமுத்து மதி. மன்
42. கையி எழுத்து

புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் எண் 978, பக்கம் 626

## 67. லாலுகான் நலத்தின் பொருட்டு சுப்பிரமணியருக்குப் பூசை

கர்நாடக நவாப் ஆலம்கான் சுலைமான் சாகிப் அவர்கள் ஆட்சியின்போது ஷேக் தாவூது சாகிப் என்பவர் கொத்தவால் என்னும் அதிகாரியாக இருந்தார். அப்போது திருநெல்வேலிப் பேராயத்தைச் சேர்ந்த 12 வணிகக் குழுவினர் மகமைப் பணம் வசூல் செய்து அதிகாரி லாலுகான் சாகிப் அவர்களின் நலத்தின் பொருட்டு திருநெல்வேலிக் குறவன் தெருவில் உள்ள சுப்பிரமணியர் கோயிலில் தொடர்ந்து பூசை செய்ய 28.8.1751 அன்று முடிவு செய்து செப்பேட்டில் எழுதித் தந்தனர்.

தமிழில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேடு திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில் அலுவலகத்தில் இன்றும் உள்ளது.

Annual Report on Epigraphy (A) 48 of 1946

## 68. ஈரோடு கோட்டை அதிகாரிகளின் பள்ளிவாசல் கொடை

**இடம்-** ஈரோடு மாவட்டம், ஈரோடு நகரம் காவிரிக் கரையில் உள்ள சேகு அலாவுதீன் சாயபு மஜீத் தர்கா நுழைவாயில் வலப்புறம் நடப்பட்டுள்ள குத்துக்கல்.

**காலம்**-கி.பி.12.6.1761

**செய்தி**-மைசூர் மன்னன் இரண்டாம் கிருஷ்ணராச உடையார் காலத்தில் ஈரோடு மாவட்டப் பகுதி அவர் ஆட்சியில் இருந்தது.ஈரோடு கோட்டை அதிகாரியாக (தளவாய்) இருந்த ரங்கய்யநாத திம்மரசய்யன் என்பவர். அவரும் கோட்டையில் கந்தாசாரம். அட்டவணை. சேனபோகம், சேருவைகாரர் ஆக இருந்த ஏனைய நான்கு அதிகாரிகளும் காவிரிக்கரை ஷேக் அலாவுதீன் தர்காவிற்கு வரும் அரதேசி பரதேசி பக்கிரிகளுக்கு நாள்தோறும் அன்னமிடவும், அவர்களுக்கு ஆடை கொடுக்கவும் காலிங்கராயன் பாச நன்செய் நிலத்தில் 4 மாநிலம் கொடையாகக் கொடுத்தனர்.

கல்லும், காவிரியும், சந்திரர், சூரியர், நட்சத்திரங்கள் உள்ளவரை இந்தத் தர்மம் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்ற விருப்பத்தையும் தெரிவித்தனர்.

இந்தத் தர்மத்திற்கு இந்துவாக இருந்து தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவமும், தாயைச் சேர்ந்த பாவமும் பெறுவான். இசுலாமியர்கள் தீங்கு செய்தால் மக்காவில் பன்றியைக் குத்திக் கொன்று தின்ற பாவம் கிடைக்கும். தாயாரையும், மகளையும் சேர்ந்த பாவமும் வரும். பூமி ஆகாயம் கேடுகள் உண்டாக்கும். மக்கட்பேறு இல்லாமல் போகும்.

1761ஆம் ஆண்டு ஐதர்அலி முழு அதிகாரத்தைப் பெற்ற ஆண்டு, அவருடைய ஆணையில் இக்கொடை வழங்கப்பட்டிருக்கலாம். ஆனால் கல்வெட்டில் அதுபற்றிய குறிப்பு இல்லை.

1890வாக்கில் தனியார் சிலர் அனுபவித்து வந்த நிலத்தை வழக்கு மன்றம் சென்று நிர்வாகிகள் மீட்டுள்ளனர். தனியார் ஒருவர் மங்கம்மாள் சத்திரத்தில் சேகு அலாவுதீன் சாய்பு அடக்கம் ஆனதாகக் கூறியுள்ளார். மங்கம்மாள் காலம் கி.பி. 1689-1706 ஆகும்.

1. சாலிவாகன சகார்த்தம் 16
2. 83 கலியுக சகார்த்தம் 48
3. 62 க்கு மேல் செல்லாநின்ற விசு
4. வருஷம் சேத்ய சுத்தவஸ் வெள்ளிக்கிழ
5. மை சுவாதி நட்சேத்திரம் பெத்த சு
6. ப தினத்தில் ஸ்ரீமது ராசாகிராச
7. டைப் பிரதாப கிருஷ்ணமாரா

8. சாஉடைய்யனவர்கள்
9. சீரங்கப் பட்டணத்தில்
10. ரத்ன சிம்மாசன ரூடராய் பிறித்
11. வி சாம்ராச்சியமாளு
12. ராசபரமேசுரன் பிறதிஷ்
13. கிற னாளயில் ஸ்ரீம
14. த் யீரோட்டுத் தள
15. வாய் ஸ்ரீரங்கய
16. நாத திம்மரைசயன்
17. வர்கள் கந்தாசா
18. ரம் அட்டவணை சேனை
19. பாகம் சேருவைகார்
20. ர் முதலான பேரும்
21. காவேரி ஓரத்திலி
22. ருக்கிற சேகுமசாய்கு
23. சேகு அலாவுதீன் ஸாய
24. பு மசீத் தர்மத்து சிலாசா
25. சனம் அப்பணைப் பிறகா
26. ரத்திற்கு எழுதிக் குடுத்த விபரம்
27. அணை ஓபளிக்குச் சேர்ந்த
28. வயிறாபாளைய வதிகரை
29. யில் மாறுகால்க்கரையில் மாத்த
30. பீளமேட்டில் தோப்படியில் மானிய
31. ம் நஞ்சை 4 மாநிலம் சுத்தக் கிறைய மா
32. னியமாய் அனுபவித்துக்கொ
33. ண்டு அன்னாடகம் அரதேசி பரதே
34. சி பக்கிரியலுக்க அன்னம் வஸ்த்தி

35. ரங் கொடுத்துக்கொண்டு க
36. ல்லும் காவேரியுள்ளவரை ஆசந்தி
37. ரார்க்கம் சுகமாயிருக்கவும் இந்தத்த
38. ர்மத்துக்கு ஆராமொருவர் விகா
39. தம் பண்ணினால் காசி
40. கங்கைக்கரையில் கா
41. ராம் பசுவைக் கொன்றவனும்
42. தாயைக் கோழ்த்தவன்
43. துலுக்கரானால் மக்காவில்
44. பன்றியைக் கொன்று தின்ற
45. வன் தாயாருமகள்க்கோழ்த்த
46. வன் பூமியாகாசங்
47. கெடுக்கும் புத்திரசம்பத்தும்
48. இல்லாமல் போமென்றவாறு உ



...

S.I.T Vol III Part 1 1218

# 69. இராமநாதபுரம் ஆவணங்களில் பள்ளிவாசல் கொடைகள்

இராமநாதபுரம் சேதுபதிகளின் செப்பேடுகள் கல்வெட்டுக்கள் இல்லாமல் அரண்மனையில் ஏராளமான ஓலை ஆவணங்கள் உள்ளன. அவை பெரும்பாலும் கோயில்கட்குக் கொடுத்த கொடைகளைக் குறிக்கின்றன. சிறுபான்மை தனிப்பட்டவர்கட்கு அளிக்கப்பட்ட கொடைகளைக் குறிக்கின்றன.

அவற்றில் பல்வேறு ஆவணங்கள் இசுலாம் தொடர்பானவை. பூலாங்கால் பள்ளிவாசலுக்கு முத்து விசைய ரகுநாத சேதுபடும் முத்துவிசைய ரகுநாத செல்லத் தேவரய்யா சேதுபதியும் நிலக் கொடை வழங்கியுள்ளனர்.

அபிராமம் பள்ளிவாசலுக்குத் திருவிளக்குக்காக முகவூரணி அய்யா நாளையில் அதிநாராயணபிள்ளை என்பவர் நிலம் வாங்கிக் கொடையாக அளித்தார்.

நாரணமங்கலம் சுல்தானுக்கு குமார முத்துவிசைய ரகுநாத சேதுபதி நிலக் கொடையளித்தார். இதுபற்றிய செப்பேடு என்று எழுதபட்டுள்ளது

மற்றும் பூலாங்கால், போந்தப்புளி, தொண்டி, காட்டுபாவா சத்திரம், புல்லுக்குடி, திருச்சுழியல், காரேந்தல், சொக்கிகுளம், கொக்காடி, நாடாகுளம், குச்சனேரி, லட்சுமிபுரம் போன்ற பல ஊர்களில் உள்ள பள்ளிவாசல்களுக்கும், தர்காக்களுக்கும் நிலம், பொன், பொருள் கொடையாகச் சேதுபதி மன்னர்களால் கொடுக்கப்பட்டுள்ளன.

திருவிளக்குகள் ஏற்றவும், கந்தூரி நடத்தவும் அன்னதானம் ஆடை அளிக்கவும் இக்கொடைகள் பயன்படுத்தப்பட்டன.

இராமநாதபஏம் அரண்மனை அலுவலகம்

**ஓலை ஆவணங்கள்**

1) பூலாங்கால் பள்ளிவாசல் கொடை

பூலாங்கால் கிராமத்து நிலத்தில் சில பகுதிகளையும் பூலாங்கால் பள்ளிவாசலுக்காகப் பிலவ வருடம் தை மாதம் 17ஆம் தேதி முத்து விசைய ரெகுநாத சேதுபதியும் வெகுதானிய வருடம் மாசி மாதம் 13ஆம் தேதி முத்து விசைய ரெகுநாத செல்லத் தேவரய்யா சேதுபதியும் அளித்துள்ளனர் - 2 ஓலை.

**2) அபிராமம் பள்ளி வாசல் கொடை**

அபிராமம் பள்ளிவாசலுக்கு அபிராமம் ஊர் நிலம் மானியம். பள்ளிவாசல் திருவிளக்குக்கு முகவூரணி அய்யா நாளையில் ஆதிநாராயண்பிள்ளை நிலம் வாங்கி விட்டது பிங்கள வருடம் ஆடி 8 தேதி.

**3) நாரணமங்கலம் சுல்தான் மானியம்**

இராசசிங்கமங்கலம் தாலுகா பொட்டக வயல் மாகாணத்தைச் சேர்ந்த நாரணமங்கலத்தில் சுல்தானுக்கு நில மானியம் குமார முத்து விசைய ரெகுநாத சேதுபதி விட்டது. சகம் 1702 சார்வரி வருடம் மாசி 24 தேதி - தாமிர சாசனம்.

**4) தேரூர் தாலுகா தொண்டி ஆலிம்ஷா பள்ளிவாசல் கொடை**

ஆலிம்ஷா பள்ளிவாசல் திருவிளக்கு பூசை நெய்வேத்தியம் சிலவுக்காக தேவதானம் புல்லுக்குடி கயிலாதநாதசுவாமி கிராமம் தண்டலக்குடியில் நிலம் சர்வ மானியம். ஊர்கள் ஆக்களூர் மாகாணத்தைச் சேர்ந்தது. இதற்கு நவாபு நாளையில் வாங்கிய பாலானாக் காகிதம் தஸ்தாவேசுகள் உண்டு. மதுரைக்கு ரிஜிஸ்டாரில் பதியும்படியாய் மேற்படி தாஸ்தாவேசுகளை அனுப்பி வைத்திருக்கிறதாக மேற்படி பள்ளிவாசல் லெப்பை ஆலிம்ஷா சொன்னதாய் தேரூர் சேவுகன் பெருமான் வந்து சொன்னது.

# 70. மராட்டிய மன்னர் ஆவணங்களில் இஸ்லாம்

தஞ்சையில் படையில் பணியாற்றவும், யூனானி மருத்துவத் தின் பொருட்டும், வியாபாரத்திற்காகவும் பல இஸ்லாமியர் நிலையாக வாழ்ந்து வந்தனர். தஞ்சை வட்டாரத்தில் மட்டும் இஸ்லாமியர் பள்ளிவாசல் தர்காக்கள் 42 இருந்தன என்பர். அவைகட்கு நாயக்க, மராட்டிய மன்னர்கள் பலர் கொடை கொடுத்தனர். இன்றும் தஞ்சாவூர் படே உசேன் போன்றவை பல மராட்டிய மன்னர் குடும்ப நிர்வாகத்தில் உள்ளன.

பிரதாப சிங் 1739-இல் அரசரானவர்; இவர் 1740இல் நாகூருக்குச் செல்கிறபொழுது வழியில் 'வடயாரங்குடி க்கு அருகில் "பாவாசாகேப்பின் தர்கா" மசூதி குளம் மண்டபம் இவைபற்றி விண்ணப்பம் அளிக்கப்பெற்றது. அதில் தீபாநகரப் பேட்டை சுங்கத்தினின்று ஒரு காசுவீதம் அளிக்கவேண்டும் என்று வேண்டுகோள் இருந்தது. அரசர்"அங்ஙனமே தருக" என ஆணை பிறப்பித்தார்.

துளஜா ராஜா 1765இல் அரசரானார். இவர் கி.பி.1776இல் மகம்மது ஸேக்குக்கு மன்னார்குடிக்குச் செல்லும் வழியில் "காகி தத்தின் மூட்டைகளின் குவியலுக்கு அருகில் 12 அடிக்கோலினால் 2 வேலி நிலம் இனாம் கொடுத்தார். (காகிதத் தொழிற்சாலையாக இருக்கலாம்)

கி.பி. 1776இல் துளஜாராஜா தங்கத்திலும் வெள்ளியிலும் ஆக 34 அல்லாக்களும், தங்கக் குடைகள் இரண்டும் செய்தார் என்றோர் ஆவணக் குறிப்பால் அறியப் பெறுகின்றோம்.

கி.பி. 1773இல் மல்லிம் சாஹேப் என்பார் கடைவீதியின் கோட்டையின் பக்கம் ஒரு மசூதி கட்டினார். அந்த மசூதியை நடத்துவதற்கும் ஃபக்கீர்களுக்கு உணவு அளிக்கவும், சாலியமங்கலம் வட்டத்தில் கடதம்பட்டு என்ற ஊரில் 10229 குழிகளும், வல்லார்பட்டு என்ற ஊரில் 2419 குழிகளும், ஆக 12648 குழிகள் இனாமாக அளிக்கப்பெற்றன. அங்கு ஓர் ஊர் அமைத்து "முகமதுபுரம்" என்று பெயரிடப்பட்டது.

கி.பி. 1785இல் திருப்பூந்துருத்தியில் 1963 குழி நிலமும், மரஞ்செடி கொடி வகைகளில் நிலம் 1/4 வேலி 3/4 மா ஹிஸ்லேக்மல் என்ற ஃபக்கீருக்கு இனாம் அளிக்கப்பட்டது.

சூல மங்கலத்தில் 2 3/4 வேலி நிலம் 700 சக்ரம் கொடுத்து விலைக்கு வாங்கி அங்குத் தர்கா அமைக்கப்பட்டது. அதனைச் சர்க்கார் ஜப்தி செய்தனர். அங்கு 'தர்கா'வை ஜப்தியிலிருந்து விடுவிக்க வேண்டும் என்று 1787இல் ஹஸன்னா ஃபக்கீர் வேண்டிக் கொண்டவண்ணம் ஆணை பிறப்பிக்கப்பட்டது.

அல்லாப் பண்டிக்கைக்காக மன்னர் எல்லா தர்காக்களுக்கும் போய் வருதலுண்டு; அங்ஙனம் போகுங்கால் இனாம் அளிப்பது ண்டு.அல்லாப் பண்டிகை நடத்தவும் நன்கொடை அளிப்பதுண்டு.

’அல்லாப் பண்டிகைக்கு பகீர்களுக்குக் கொடுப்பதற்காக மாதுஸ்ரீ ஆவுசாயேப் ரூ 30; சைதம்பாயி சாகேப் ரூ 30; காமாட்சியம்மா பாயி சாகேப் ரூ 25; சுலக்ஷணபாயி அமணி ராஜேசாகேப் ரூ 10; சக்வாரம்பா பாயி அம்மணி ராஜே ரூ 10; ஆக 105”

என்ற ஆவணக் குறிப்பால் அரசமாதேவியாரும் சமயப் பொறையுடையவர்களாய் அல்லாப் பண்டிகைக்கு நன்கொடை அளித்தனர் எனத் தெரிய வருகிறது.

அப்தர்கானாவில் ஒரு அல்லா வைப்பதற்கு ‘லாடு’ வாங்கிய வகையில் ரூ 150 என்ற குறிப்பாலும் அல்லாப் பண்டிகைக்காக அப்தர்கானாவில் அல்லா வைக்கிற இடத்தில் ’ஹிந்துஸ்தானி சேவை செய்வதற்கு டக்காவின் ஜோடியொன்றைத் தயார் செய்ய’என்ற ஆவணக் குறிப்பாலும் அரண்மனையில் அப்தார்கானாவில் ஓரல்லா வைக்கப்பட்டிருந்தமை போதரும். இதில் முன்னது 1852க்கும் பின்னது 1825க்குமுரியது.

பின்னதில் “ஹிந்துஸ்தானி சேவை செய்தற்கு டக்காவின் ஜோடியொன்று” என்பது சிந்திக்கத்தகுவது. அல்லா வைக்கிற இடத்தில் இந்துஸ்தானி மொழியில் ஃபக்கீர் வழிபாடு செய்வர் என்றும், அப்பொழுது டக்கா எனும் இசைக்கருவி அடிக்கப்பெறும் என்றும் தெரியவருகிறது.

’’1827 நாகூர் காதிர்சாயபு தர்காவுக்கு… கந்தூரி உற்சவத்துக்காகச் சர்க்காரிலிருந்து மூடுகிற வஸ்திரத்தை

வழக்கப்படி அனுப்புவதற்கு சக்கரம் 20” என்ற குறிப்பால் நாகூர் தர்காவுக்குத் திருவிழாக் காலத்தில் ஆண்டுதோறும் ஆடை அனுப்பி வந்தனர் என்பது போதரும்.

மக்கான்தார்களுக்கும் துனியாதார்களுக்கும் வேறுபாட்டுணர்ச்சி யேற்படுவதுண்டு. அவர்கள் தம் வழக்கை அரசரிடம் முறையிடுவர். இத்தகைய வழக்கொன்று கூறும் ஆவணம் மோடிப்பலகணியில் உள்ளது. அல்லா ஊர்வலத்துக்கு அரண்மனையிலிருந்து எடுபிடிகளைக் கொடுக்கும் வழக்கம் இருந்தது.நாகூர் காதிர் சாயேப் தர்காவுக்கு நகரா வாத்தியம் செய்து அளிக்கப்பட்டது. அல்லாவைத் திருவிழா 9ஆம் நாளில் ஊர்வலம் செய்வதற்கு கி.பி. 1834ல் தங்கத்தேர், வெள்ளித்தேர். யானைத்தந்தத்தேர் பெரியது, சிறியது, சங்கீதத்தேர் ஆக ஐந்து தேர்கள் வழங்கப் பெற்றன. இங்ஙனம் அல்லாப் பண்டிகை காலத்தில் நன்கொடைகளும் தேர் முதலியனவும் அளித்து முகமதிய சமயத்தாரின் நன்மதிப்பையும் ஆதரவையும் மராட்டிய மன்னர் பெற்றிருந்தனர்.

இன்றும் இவ்வழக்கம் நடக்கிறது

நாகூர் சந்தனக் கூடு உரூஸ் திருவிழாவைக் குறிக்கிறது. விழாவின் பெருஞ்சிறப்பு இதன்மூலம் தெரிகிறது.

(”தஞ்சை மராட்டிய மன்னர்கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்’’ கே.எம்.வேங்கடராமையா. தமிழ்ப் பல்கலைக் கழகம். 1984, பக்கம் -208-210)

# 71. இஸ்லாமியரை வணங்கும் இந்துக்கள்

ஈரோடு மாவட்டத்தில் ஈரோடு வட்டத்தில் காகம் என்ற ஊரிலும், பெருந்துறை வட்டத்தில் உள்ள காஞ்சிக்கோயில் என்ற ஊரிலும் கொங்கு வேளாளர்களில் கண்ண குலத்தார் வாழ்ந்து வருகின்றனர். இரண்டு ஊரில் உள்ள கண்ணகுலப் பெருமக்களும் அவ்வூர்களிலிருந்து குடியேறி மற்ற ஊர்களில் வாழும் பலநூற்றுக் கணக்கான குடும்பங்களும் குலதெய்வமாக வணங்கும் சுவாமியின்பெயர் 'ராவுத்தனசாமி'. ஆண்குழந்தைகட்கு ராவுத்தனன் என்றும், பெண் குழந்தைகட்கு ராவுத்தமா என்றும் பெயர் வைக்கின்றனர். ராவுத்தனசாமியின் பெயரைக் கேட்டால் 'டில்லி பட்டாணி துலுக்கர்' என்று கூறுகிறார்கள். தங்கள் குல முதல்வருக்கு அவர் பேருதவி செய்து காப்பாற்றியதால் அவரைக் குல தெய்வமாக வணங்குகிறோம் என்று கூறுகிறார்கள்.

ஈரோடு வட்டம் கொளாநல்லியில் வாழும் கண்ண குலப் பெருமக்களின் குலதெய்வம் பொன்குழலியம்மன் ஆகும். அம்மன் கோயிலில் அவர்கள் வணங்கும் மற்றொரு தெய்வத்தின் பெயர் துலுக்கணசாமியாகும். பொன்குழலியம்மனை வணங்கும் கண்ண குலத்தார் 'துலுக்கண கவுண்டர்' என்று பெயர் வைத்துக் கொள்கின்றனர்.

நாமக்கல் வட்டம் திருச்செங்கோட்டில் இதே கண்ண குலத்தார் வழிபடும் பனிமலைக் காவலர் சுவாமி கோயிலில் 'பங்கடு சுல்தான்' அடக்கத் தலம் உள்ளது. பங்கடு சுல்தானை இஸ்லாமியர்களும் வந்து தங்கள் சமய ஞானி என்று வணங்குகின்றனர். பனிமலைக் காவலர் கோயிலில் பூசை செய்யும் பூசாரியின் பெயர் ஏறருள்முத்து துலுக்கப் பூசாரி என்பது.

கொங்கு வேளாளரில் கண்ண குலத்தாருக்கும் இஸ்லாமி யருக்கும் உள்ள மேற்கண்ட தொடர்புகள் மேலும் ஆய்வுக் குரியதாகும்.

ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்கள். முதல் தொகுதி பக்க எண் 43.

'கொங்குநாடு" (1934) தி.சு. முத்துசாமிக் கோனார், பக்கம் 90

## 72. மகமதுதம்பி சாகிபுக்கு சரவணப் பெருமாள் சீட்டுக்கவி

அவ்வொன்றும் அவதானி குமிழொன்று வெகுமானி
அறிவொன்று சேதுபதிபால்
அணியொன்று வெகுமானி சோமசுந் தாகுழுவின்
அருளொன்றும் அடிமைமைவெள்ளைக்
கவ்வொன்றும் அலைநாவல் நதியொன்று கோத்திரன்
கணியொன்று குவளைமாபன்
கதியொன்று சரவணப் பெருமாள் கவீசுரன்
கையொன்றும் எழுதும் ஒலை
தெவ்வென்று சமாவென்று திகழ்மகம் மதுதம்பி
தீரானிதி கொண்டு காண்க
செழுஞ்சென்ன பட்டினம் அதிற்கேழு வோம்வழிச்
செலவுக்கு வேண்மெமெதெனால்
உவ்வொன்று யவ்வொன்று லவ்வொன்று டவ்வொன்று
சவ்வென்று மவ்வொன்றுவவ்
வொன்றுரவ் வொன்றுசவ் வொன்றுகவ் வொன்றுனவ்
கொன்று விடல்கேண்டுமே!

"சீட்டுக்கவித் திரட்டு" - விசாகப் பெருமாள் அய்யர் பதிப்பிவொன்றுரவ் வொன்றுசவ் வொன்றுகவ் வொன்றுனவ் கொன்று விடல்கேண்டுமே!

# 73. -A. கிறித்தவ தேவாலயத்தில் அரபு மொழிக் கல்வெட்டு

ஆஸ்திரேலியாவிலிருந்து 1894ல்கிறித்தவ பணிக்காக இந்தியா வந்த மறைதிரு அந்தோணி வாட்சன் பிரப் 1894ல் கோவை வந்தார். 1897இல் ஈரோடு வந்தார். 1904ல் ஈரோடு நகர பரிபாலன சபைத் தலைவராக விளங்கினார்.

அவர் நினைவாக ஈரோடு மையப் பகுதியில் உள்ள கிறித்தவ தேவாலயம் ‘பிரப் நினைவுத் தேவாலயம்’ என்ற பெயருடன் விளங்குகிறது. 1930ல் திட்டமிடப்பட்டு 1933ல் “இந்தோசரோனிக்” கட்டிடக் கலையில் கட்டப்பட்ட அந்த தேவாலயத்தின் முகப்பில் “கடவுள் ஒருவரே” என்று பொருள்படும் “யா குதா” என்ற சொற்றொடர் பெரிய அரபு எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது.



...

# 74. -B. ஈரோட்டில் 'கோஷா' ஆஸ்பத்திரி

ஈரோட்டில் 1897 முதல் கிறித்தவப் பணியாற்றிய அந்தோணி வாட்சன் பிரப் 1909ல் தன் பங்களாவின் ஒரு பகுதியிலே சிறு மருத்துவமனை ஒன்றைத் தொடங்கினார். டாக்டர் மைகன் ரீஸ் என்பவர் நியமிக்கப்பட்டார். மருத்துவமனை தொடங்க 1912ல் ‘பனங்காடு’ என்ற பகுதியை வாங்கினார். மருத்துவமனை கட்டினார்.

1914-15 ஆம் ஆண்டுகளில் மலேரியா, இன்புளுயன்சா. காய்ச்சல் ஈரோட்டில் அதிகமாகப் பரவியது. மருத்துவமனைப் பணி நடக்கும்போதே பாயில் படுக்க வைத்து நோயாளிகளைக் கவனித்தார். பெரும்பாலும் ஆண் மருத்துவர்களே இருந்த காரணத்தால் நோயினால் பாதிக்கப்பட்ட இஸ்லாமிய பெண்கள் பலர் மருத்துவ வசதியின்றி இறந்தனர்.

பிரப் வேலூரிலிருந்து பெண் டாக்டர் ஹில்டா போலார்டு என்பவரை அழைத்துக் கொண்டு வந்து இஸ்லாமியப் பெண்களுக்கு மருத்துவம் செய்தார். இதனால் தான் கட்டிய மருத்துவமனைக்கு “கோஷா” ஆஸ்பத்திரி என்று பெயரிட்டார். பெண்களுக்கு மட்டுமே தொடங்கப்பட்ட அம்மருத்துவமனை ஆண்களுக்குச் சிகிச்சை அளித்தபோதும் 1961வரை “கோஷா ஆஸ்பத்திரி” என்ற பெயரிலேயே இருந்துவந்தது. பின்னர் சி.எஸ்.ஐ. மருத்துவமனை என்று பெயர் மாற்றப்பட்டாலும் இன்னும் அந்த ஆஸ்பத்திரியை கோஷா ஆஸ்பத்திரி என்றே மக்கள் அழைத்து வருகின்றனர்.

## 75. நரசிங்கபுரம் பள்ளிவாசலுக்கு சையத் அப்துல் ஹாதி கொடை

**இடம்**-கரூர் மாவட்டம், அரவக்குறிச்சி வட்டம், பாளையம் அரவக்குறிச்சி சாலையில் குடகனாற்றின் மேல்கரைப் பாலத்தின் தென்புறத்தின் பாறை

**காலம்** -கி.பி. 18ஆம் நூற்றாண்டு

செய்தி-ஹஜ்ரத் சையத் அப்துல் ஹாதி சாயபு என்பவர் நரசிங்கபுலம் அருகில் உள்ள பள்ளிவாசலுக்குக் கொடையாக நிலம் வழங்கிய செய்தி கூறப்பட்டுள்ளது. முதல் மூன்று வரிகள் உருதுவிலும், பிற்பகுதி 5 வரிகள் தமிழிலும் எழுதப்பட்டுள்ளன. நேர்வழி காட்டுபவரான அல்லாவின் அடிமை சையத் அப்துல் ஹாதி என்பது இதன் பொருள்.

**கல்வெட்டு**

1. அல்லாஹ்
2. அஸ் ஸையது அப்
3. துல் ஹாதி
4. ப்பு யவர்கள் பள்ளிவாசலுக்கு
5. அசரது சயிது அப்துல் (நித்) ஹாதி சாயி
6. விட்ட மாநியம் நகல் நரசிங்
7. கபுரம் எல்லை நடப்பள்ளி
8. வரைக்கும்

ஆவணம் 12, 2001, பக் 85: தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு.

## 76. அம்மாபாளையம் தர்காவுக்கு ஹைதர்அலி கொடை

சேலம் மாவட்டம், சேலம் வட்டம் அம்மாபாளையம் என்ற ஊரில் தெருவில் நடப்பட்டுள்ள ஒருகல் செப்பேட்டின் நகல் என்று எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்றுள்ளது. மைசூர் மன்னர் கிருஷ்ணராஜ உடையாரின் காரியத்துக்குக் கர்த்தரான ஹைதர்அலி அவர்கள் கி.பி. 1759ஆம் ஆண்டு அம்மாபாளையத்தில் உள்ள அகாவல்ல சாயபு தர்காவிற்கு அம்மாபாளையத்தையும், வேறு சில ஊர்களையும் தர்கா நிர்வாகச் செலவு, பராமரிப்புக்காகவும் தர்காவிற்கு வரும் ஃபக்கீர்களுக்கு அளிக்கவும் கொடையாகக் கொடுத்தார். இதற்குரிய பணம் மைசூர் அரண்மனைக் கருவூலத்திலிருந்து கொடுக்கப்பட்டதாக இதில் எழுதப்பட்டுள்ளன.

கொடை கொடுக்கப்பட்ட பிரமாதி வருஷம் கி.பி. 1759. 1761ல் தான் ஹைதர்அலி அதிகாரத்திற்கு வந்ததாகக் கூறப்படுகிறது. 1759ஆம் ஆண்டிலேயே தனியாகக் கொடை கொடுக்கும் உரிமையும் ஹைதர்அலி பெற்றிருந்தது ஹைதர் அலி வரலாற்றில் புதிய தகவலாகும். இதே ஆண்டு ஹைதர் அலி பெங்களூர் அருகில் உள்ள பிங்கிபுரம், சென்னபட்டணம் அருகில் உள்ள மோஹெஹள்ளி ஆகிய ஊர்களில் உள்ள தர்காக்களுக்கும் தேபோல் ஃபக்கீர் தர்மமாகக் கொடைகள் கொடுத்துள்ளார்.

Annual Report on Epigraphy 155 of 1934 Epigraphia Carnatica Vol 1X, 32,90

## 77. ஹைதர் அலி கொடை தந்த பீர் கயப் தர்கா

சேலம் மாவட்டத்தில் சங்ககிரி மலையில் ஒரு கோட்டை உள்ளது. புதுக்கோட்டை வாசல் அருகே ஒரு குகை இருக்கிறது. இது பீர்கயப் என்ற முகமதிய சித்தர் இருந்த இடம் என்று கூறுகிறார்கள். (ஃகைப் என்றால் மறைவானவர் என்று பொருள்!) இக்குகையின் உள்ளே கல்மதம் என்ற மருந்து செய்யப் பயன்படும் ஒருவகைப் பொருள் கிடைக்கிறது. பழக்கமுள்ளவர்கள் உட்புகுந்து எடுக்கிறார்கள்.

இதற்கு ஐதர் அலி ஒரு கொடையளித்துள்ளார். "விசு வருஷம் வைகாசி மாதம் சுத்த திதிய ஶ்ரீமது சகலகுல சம்பன்னரான ரங்கய்யரவர்களுக்க அயிதரல்லிக்கான் பகதூரவர்கள் சலாம்.

இப்பவும் சங்ககிரியிலிருக்கும் பீர்கைபு சாஹேபு அவர் தர்காவுக்கு சங்ககிரியில் காடு 20 வள்ளம் வேம்பனேரி சமுத்திரத்தில் விரை வரி கண்டகம் இரண்டு கண்டகம் சகிதமாய் விவரித்து நாலு மூலைக்கும் சிலை பிரதிஷ்டை செய்வித்து மாசூம் சாயபு அவாலத்து செய்வித்து என்னென்னைக்கும் சர்வ மானியமாக ஆசந்திரார்க்கமாய் நடபித்துக் கொண்டு வரவும்'

இப்படிக்கு

(காசு மொகர் செய்யப்பட்டிருக்கிறது)

வள்ளம் - 4 ஏக்கர்

கொங்கு நாடு, தி.அ. முத்துசாமிக் கோனார். 1934 பக் 69.

# 78. தேங்காய்ப்பட்டினம் பள்ளிவாசல் கொடைகள்

கன்னியாகுமரி மாவட்டம், விளவங்கோடு வட்டம். தேங்காய்ப் பட்டணம் மாலிக் தினார் பள்ளிவாசலில் மூன்று கல்வெட்டுக்கள் உள்ளன. அவை எழுத்தில் மலையாள உச்சரிப்பு வடிவில் காணப்படுகிறது.

1) கி.பி. 1631ல் பள்ளிவாசலுக்கு மணி வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.

**கல்வெட்டு**

1. 806 வருஷம் மாருகெழி
2. மாதம் 2 தேதி கமாசி மெதற்
3. கால்மணி

2)கி.பி.1642ஆம் வருடம் குறிக்கப் பெறுகிறது

**கல்வெட்டு**

1. (கொல்லம்) 817 வருஷம்
2. ஆடி மாதம் 22 தேதி
3. தமெத தென காலகுடி

3)கி.பி. 1632ல் மேற்கு வீதியில் சபை கூடியதைக் குறிக்கிறது கல்வெட்டு

1. 807 வருஷம் தை மாதம்
2. தமாச தமாசி மேக
3. தெரு தாலம் கூடி

ஆவணம் 12. சூலை, 2001, பக் 68-69; தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு.

## 79. செஞ்சி மசூதி திருப்பணியில் சையது

செஞ்சிக் கோட்டை மசூதிச் சுவரிலும் தண்ணீர்த் தொட்டி மத்தியிலும் இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன. அவை ஹிஜ்ரி 1130ல் (கி.பி. 1718) மசூதி கட்டப்பட்டதையும், ஹிஜ்ரி 1135ல் (கி.பி. 1723) தண்ணீர் விநியோகத்தை அதிகரிக்கத் தண்ணீர்த் தொட்டி கட்டியதையும் தெரிவிக்கின்றன. அவை பேரரசர் பரூக்கியர் ஆட்சியின்போது செஞ்சி ஆளுநராக இருந்த சையத் அவர்களால் கட்டப்பட்டன.

Annual Report on Epigraphy 307, 308 of 1939 Epigraphy Indo Moslemica 1938 P. 52

## 80. மாபூஸ்கான் கொடுத்த கொடை

ஆர்க்காடு நவாப் அசரத் கிபிலே நவாபு சாயபு மகம்மது அன்வர்த்திகான் மகன் மாபூஸ்கான். ஆர்க்காடு நவாபின் பிரதிநிதியாக மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் நிர்வாகம் செய்து வந்தார்.

மாபூஸ்கானின் குரு அசரத் மியா இமாமு சாயபு. அவர் மகன் மாய சேகு அகமது அவர்கட்கு ஆண்டுதோறும் 78 ரேகை பொன் கொடுக்க வேண்டும் என்றும், அதனை மாதாமாதம் 6 பொன் 5 பணம் வீதம் கொடுக்கலாம் என்றும் எழுதிச் செப்பேடு ஒன்று கொடுத்தார் மாபூஸ்கான். கொடை 29.3.1745 அன்று வழங்கப்பட்டது.

இந்த 72 ரேகைப் பொன்னும் திருநெல்வேலி அரிப்புத்துறைக் குத்தகையிலிருந்து வழங்கவும் ஏற்பாடு செய்தார். இந்தச் செப்பேட்டைத் திருநெல்வேலி நாட்டுக் கணக்கு கந்தசாமி எழுதியுள்ளார். தமிழிலும், இந்துஸ்தானியிலும் உள்ள இந்தச் செப்பேடு திருவனந்தபுரத்தில் ஒரு இஸ்லாமியர் வீட்டில் உள்ளது. இந்தச் செப்பேட்டை அறிஞர் டி.ஏ. கோபிநாதராவ் பதிப்பித் துள்ளார்.

தமிழ்நாட்டுச் செப்பேடுகள் - இரண்டாம் தொகுதி. பக் 358. ச. கிருஷ்ணமூர்த்தி

## 81. செஞ்சிக்கோட்டையை வென்ற அம்பர்கான்

செஞ்சிக்கோட்டையின் உட்புறச் சுவரில் சிறிய மசூதியின் மேற்கில் ஒரு கல்வெட்டு உள்ளது. ஹிஜ்ரி ஆண்டு 1058ல் (கி.பி. 1648) அம்பர்கானும், சையது யாகூபும் செஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றிய செய்தி அழகிய எழுத்துக்களில் வெட்டப்பட்டுள்ளது. அம்பர்கானின் அலுவல் அப்துல்லா என்பவர் இக்கல்வெட்டைப் பொறித்துள்ளார்.

Annual Report on Epigraphy (D) 160 of 1964

## 82. பூந்தமல்லி மசூதி கட்டிய ருஷ்தும்

கோல்கொண்டா அரசர் ஹசரத் ஆலம்பன்னா சுல்தான் அப்துல்லா சையத் ஆட்சிபுரியும்போது சென்னைப் பகுதிக்கு அரசப் பிரதிநிதியாக இருந்தவர் நவாப் ஜனாம்லத் உல் முல்கி மீர் முகம்மது என்பவர். அவரிடம் வேலை பார்த்த அலுவலர் அஸ்திராபாத் துல்ஃபிகார் மகன் ருஷ்தம் என்பவர் பூந்தமல்லி மசூதியை முழுவதுமாக 3.9.1653 (ஹிஜ்ரி 1063 ஷவ்வல் 20) அன்று கட்டி முடித்ததை இரண்டு கல்வெட்டுக்கள் கூறுகின்றன. அப்போது பூந்தமல்லிக் கோட்டை, ஹவில்தாராக இருந்தவர் சுஜாயித ஆசாரி என்பவர்.

Annual Report on Epigraphy (B) 303, 304 of 1939

Epigraphia Indo - Moslemica 1938, page 52.

# 83. ஆர்க்காடு நவாப் அரும்பணிகள்

திருச்சி ஹசரத் நத்தர்ஷா தர்கா, திருநெல்வேலி பேட்டை ஜாமி மசூதி என்று அழைக்கப்படும் வாலாஜா மசூதி, தாளையூத்து ஷாடிகான் சத்திரம், திருநெல்வேலி கதக் மசூதி ஆகியவற்றிற்குப் பல கட்டிடங்களை ஆர்க்காடு நவாபு முஹம்மது அலி (1750-1795) பல கட்டிடங்களைக் கட்டிக் கொடுத்தார். நத்தர்ஷா தர்காவில் புனிதர் நத்தர்ஷா அங்கு ஹிஜ்ரி 375ல் வந்தது குறிக்கப்பட்டுள்ளது.

Annual Report on Epigraphy (D) 166-172 of 1964

## 84. புனிதரை வணங்க புகழ்மிகு கட்டிடம்

நாகூர் ஹஜ்ரத் காதிர் வலி தர்கா நுழைவாயில் இடப்புறம் உள்ள கல்வெட்டில் ஹிஜ்ரி 1196 ஷாவல் மாதம் (கி.பி. 1782 செப்டம்பர் - அக்டோபர்) புனிதர் ஷாஹூல் ஹமீது சையது அப்நூல் காதிர் மானிக்பூரி அவர்களை வழிபடுவதன் பொருட்டு ஹாஜி அப்துல் காதிர் அவர்கள் மேற்பார்வையில் இரு அழகிய சுட்டிடம் கட்டப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

(காதிர் - இறைஆற்றல்)

Annual Report on Epigraphy (D) 161 of 1964

# 85. சம்மட்டிவரத்தில் சாகிப் கான் தர்கா

ஆர்க்காடு நவாப் முகம்மது அலி, கிழக்கிந்திய கும்பினியர் ஆகியோரால் வரிவசூல் செய்ய 1757ல் அனுப்பப்பட்ட கான்சாகிபு வசூலித்த வரியை மக்கள் நலப்பணிகட்கு செலவிட்டார். கான்சாகிபு பற்றி நன்கு ஆய்ந்த பேராசிரியர் நா.வானமாமலை "திருநெல்வேலி சீமையை வென்ற பெருமையை பறைசாற்றி இச்சீமையின் வரிக்குத்தகையை 7 லட்சத்திற்கு கான்சாகிபு கும்பினியாரிடமிருந்து பெற்றுக் கொண்டான். மாபூஸ்கான் தனது தம்பியான ஆர்க்காடு நவாபு முகமதலியோடு சமாதானம் செய்து கொண்டு திருநெல்வேலிச் சீமையை விட்டு போய் விட்டான். யூசுப்கானது நிலைமை வலுவாகி இருந்தது. கம்பெனியிடம் விசுவாசம் இல்லாமல் அவன் நடந்து கொண்டதாக பிரிட்டிஷார் ஐயுற்றனர். தஞ்சாவூரிலிருந்து அவன் படை திரட்டினான். பாளையக்காரர்களோடு சமாதானம் செய்து கொண்டு நவாபை எதிர்க்க அவர்களது உதவியை நாடினான். அவனது தலைமையில் உள்ள வீரர்களது தொகை 27,000 இருந்ததென்று பிரிட்டிஷ் அதிகாரிகள் நம்பினர். பிரெஞ்சுக்காரர்களிடமிருந்தும், ஹைதர் அலியிடமிருந்தும் அவன் இராணுவ உதவிகளைப் பெற்றதாக பிரிட்டிஷார் குற்றம் சாட்டினர். சுயாதிக்கமுள்ள அரசனைப் போலவே அவன் கோயில்கட்கும், மசூதிகளுக்கும் நிலங்கள் வழங்கி கல்வெட்டுக்களில் பொறித்துக் கொண்டான். திருநெல்வேலி, மதுரைச்



சீமைகள

குளங்கள் தோண்டி

வாய்க்கால்கள் வெட்டி நிலங்களுக்குப் பாசனவசதி செய்து கொடுத்தான். புலித்தேவனையும், அவனது நண்பர்களையும் தன்னோடு சேர்த்துக் கொள்ள முயன்றான்"

என்று “கான்சாகிபு சண்டை” என்ற தம் நூல் பதிப்பில் குறிப்பிடுகின்றார் (பக்கம் 11).

'கான்சாகிபு சண்டை' கதைப்பாட்டும்.

”வருகையிலே கும்தான் என்று வந்தான் - அந்த

மதுரைக்கு வந்தபின்பு ராசாவுமானான்”

என்று கூறுகிறது (பக்கம் 26).

எனவே நவாபு முகம்மது அலியே கான்சாகிபுவை பதவி யிலிருந்து அகற்றத் தானே படைக்குத் தலைமை தாங்கி வந்தார். கும்பினியார் பெரும் படையும் கர்னல் மன்சார் தலைமையில் வந்தது. போரில் வெல்ல முடியாமல் சிவகங்கைத் தளவாய் தாண்டவராயன் மூலம் சதியில் ஈடுபட்டனர். கான்சாகிபுவின் அலுவலர்கள் சீனிவாசராவ், மார்க்கசந்து (டச்சுக்காரர்). மெய்க்காவல் படைத்தலைவன் சேகுகான் மூவரும் பணத்திற்கும். பதவிக்கும் ஆசைப்பட்டு கான்சாகிபுவைக் காட்டிக் கொடுத்தனர். பிடித்த அன்றே 14.10.1764ல் தூக்கிலிட்டனர். மாவீரனின் உடலை நான்காக வெட்டி நான்கு இடங்களில் அடக்கம் செய்தனர்.

‘கான்சாகிபு சண்டை’ கதைப்பாடல் நான்கு இடங்கள் என்று கூறி நத்தம், திண்டுக்கல் ஆகிய இடங்களைச் சுட்டிக் கூறுகின்றன. மதுரைக்கு அண்மையில் சம்மட்டி வரத்தில் ‘கான்சாகிபு தர்கா. உள்ளது. அதனை ஹிஜ்ரி 1222ல் (கி.பி. 1807) ஷேகு அதால் மகன் ஷேக் இமாம் என்பவர் கட்டியுள்ளார். இதைக் குறிக்கும் கல்வெட்டு தர்கா முன்புறச் சுவரில் பதிக்கப்பட்ட பலகைக்கல்லில் வெட்டப்பட்டுள்ளது. பெர்ஷியன் மொழியில் பாடல் வடிவிலும். தமிழிலும் கல்வெட்டு உள்ளது. தமிழில் பிரபவ, தை 23ஆம் தேதி என்று குறிக்கப்பட்டுள்ளது. 'பள்ளிவாசல்' என்றும் தமிழிலில் எழுதப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. பிரபவ வருஷம் தை மாசம் 23 தேதி ரா.ரா. கானுச
2. ஈயபு பள்ளிவாசல் சேகு அதால் குமா
3. ரன் சேகு யிமாமு கட்டி வைய்த்தது

Annual Report on Epigraphy (B) 306 of 1960

Annual Report on Epigraphy (D) 171 of 1960

## 86. மசூதி கட்டி கொடை கொடுத்த சையது மொஹிய்யதின்

இடம்- வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், சென்னை பெங்களூர் நெடுஞ்சாலையில் உள்ள அவளூர் மசூதிக்கு எதிரில் நடப்பட்டுள்ள கல்

காலம்-1.9.1813

செய்தி-அவளூரைச் சேர்ந்த சையத் மொஹிதீன் என்பவர் ஒரு மசூதி கட்டி அதைப் பராமரிக்க 40 ஏக்கர் நன்செய் புன்செய் நிலங்களைக் கொடையாக அளித்து அதைப் பராமரிக்கும் பொருட்டு தர்மகர்த்தா ஒருவரையும் நியமித்து அவருக்கு மாதம் 4 ரூபாய் சம்பளம் கொடுக்கவும் ஏற்பாடு செய்தார்.

கல்வெட்டு

1.9.1813 ஸ்திரிமுக வருஷம்

2. அவளூர் சய்யத் மொஹி

3. ய்யதின் யிந்த மஜீத் முசா

4.வரிகான் கட்டி யிதின் சிப்

5.பந்தி செலவுக்காக தன் பட்

6.டா நஞ்புஞ் 40 ஏக்கர் நெல

7. ம் விட்டிற்றே படியால்

8.யிதன் வரும்படியை மேற்படி

9.மசீத்வுக்கே வைச்ச உபயோ

10.கப் படுத்த வேண்டியது பி

11. ன்வரும் உயிலில் கன்

12.ட தற்ம கற்த்தாவை நேமி

13. த்து மாதம் 1 க்கு சம்பளமாக ரூ

14.பா 4லு சிலவாய் அதிக

15.ப்படுத்தக்கூடாது மேற்படி நி

16. லங்கள் முதலிய தர்ம

17.வீடுகளேயும் விற்க

18.கூடாது மிஞ்சி வித்தால்

19.சர்காற் முதலிய சலாமி

20. னங்கள் றத்து செய்யவேண்

21.டியது யிந்தபடிக்கு சிலா

22. சாசனம் சய்யத் மொ

23.ஹிய்யத்தின்

ஆவணம் 17. ஜூலை 2006, பக். 21: தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு.

# 87. நாகூரில் கோபுரம் கட்டிய தாவூதுகான்

டெல்லிக்கு அருகில் உள்ள ஷாஜகான்பூரில் குடியிருந்த இஸ்மாயில்கான் மகன் தாவூதுகான் சையது அப்துல் காதிர் நாகூர் மானிக்பூரி அவர்களுக்காக உயர்ந்த இரு கோபுரங்கள் அமைத்த செய்தியை இக்கல்வெட்டு கூறுகிறது. தாவூதுகான் முகம்மது பந்தரில் குடியேறிய செய்தியும் கூறப்பட்டுள்ளது. அப்துல்லா என்பவரால் இக்கல்வெட்டு எழுதப்பட்டது. கோபுரத்தின் வடபுறப் பகுதியில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

(முஹம்மது பந்தர் என்பது பரங்கிப்பேட்டை)

Annual Report on Epigraphy (B) 292 of 1964

Annual Report on Epigraphy (D) 162 of 1964

## 88. -A. கீழக்கரை, டைக்கரை மசூதிக் கல்வெட்டு

ஹிஜ்ரி 1230ஆம் ஆண்டு கவீவு முகம்மது மரைக்காயர், அவுதுல்க் காதிறு மரைக்காயர் ஆகிய சகோதரர்கள் ஓடக்கரைப் பள்ளியில் கட்டி டம் கட்டியதை இக்கல்வெட்டுக் கூறுகிறது. கல்வெட்டு

1. இந்த பள்ளி வாசல் அவுதுல் காதிறு மரைக்காயரவர்கள் மருமகன் யிசுமாயிலெவை மரைக்காயர் குமாரர்கள்
2. கவீவு முகம்மது மரைக்காயர் அவுதில்க் காதிறு மரைக்காயர் கட்டினது கிசறத்து 1230

## 89. அத்தர் வியாபாரிகள் கட்டிய பள்ளிவாசல்

கோவை மாநகர் பெரியகடை வீதியில் "அத்தர் ஜமாத் பள்ளிவாசல்'' உள்ளது. அத்தர் போன்ற பல வாசனைப் பொருள்களை விற்கும் இஸ்லாமியர்கள் ஒன்று சேர்ந்து ஹிஜ்ரி 1322ஆம் ஆண்டு (1904-1905) அதைக் கட்டி முடித்ததாக அங்குள்ள கல்வெட்டு கூறுகிறது.

Annual Report on Epigraphy (C) 55 of 1993

## 90. கோட்டை முகப்புக் கட்டிய ஹுசைனி

பீஜப்பூர் சுல்தான் ஆட்சிக்காலத்தில் செஞ்சிக் கோட்டையைப் பலமும் வலிமையும் உள்ளதாக ஆக்கக் கோட்டையின் முகப்பைப் பலப்படுத்திக் கட்டியவர் அப்பகுதியின் வட்டார அலுவலராக இருந்த ஹுசைனி என்பவர்.

Annual Report on Epigraphy 309 of 1939

# 91. திருவரம்பூர் பள்ளிவாசல் ஒலைச்சுவடி

21.10.1880 அன்று எழுதப்பட்ட ஓலை ஆவணம். ஐந்து ரூபாய் மதிப்புடைய முத்திரை ஓலையில் எழுதியுள்ளது.

திருவறம்பூர் கிராமம் வருஷை ராவுத்தர் மகன் பாவா நத்தரு ராவுத்தர் தனக்குச் சொந்தமான 500 ரூபாய் பெறுமானமுள்ள இரண்டு இடங்களில் உள்ள மூன்று ஏக்கர் 76 சென்டு நிலத்தில் கலத்து ஊழியத்துக்கு சேகுமுத்த லெப்பைக்கு அளிக்கப்பட்ட 30 சென்டு போக மீதி 3 ஏக்கர் 46 சென்டு நன்செய் நிலத்தைத் திருவரம்பூர் மஜீத் பள்ளிவாசலுக்குக் கொடையாக அளித்தார்.

அதன் வருவாயைக் கொண்டு மஜீத் பள்ளி வாசலில் நாள்தோறும் விளக்கு வைக்க வேண்டும் என்றும், குதுபா ரம்ஜான் நோன்பு முப்பது நாட்கள் செலவிட வேண்டும் என்றும் எழுதியுள்ளார். மீதிப் பணம் இருந்தால் மஜீத் பள்ளிவாசலின் மராமத்துச் செலவுக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தன் விருப்பத்தைத் தெரிவித்துள்ளார்.

இந்தக் கொடைக்கு இசுலாமியர் பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். குருசாமி அய்யர், வெங்கடாசலமய்யர், அருணாசலம்பிள்ளை மகன் வைத்தியலிங்கம் பிள்ளை, ராம பிள்ளை மகன் அருணாசலம்பிள்ளை, முத்துக் கருப்பு கண்டியன் மகன் ஆறுமுக கண்டியன் ஆகியோரும் சாட்சிக் கையொப்ப மிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

மைதீன்சா என்பவர் 'நாட்டாமை'யாக இருந்துள்ளார். இந்த ஓலையில் எழுதியவர் சய்யது அசன் என்பவர்.

**ஓலைச் சுவடி**

1.1880 வருடம் அக்டோபர் மாதம் 21 தேதி திருச்சிறாப்பள்ளி தாலுக்கா திருவறம்பூர் கிறாமத்தி

2.லிருக்கும் வருஷை றாவுத்தன் குமாறன் துலுக்க ஜாதி அனுபி மதம் விவசாயம்

3.அந்தஸ்துள்ள பாவா நத்தரு றாவுத்தராகிய நான் சரீர சுகத்துடனும் ஒருவருடைய

4.கட்டாயமன்னிலும் அடியில்க் கண்ட மஜீது பள்ளிவாசலுக்கு யெழுதி

5.வைத்த தான சாசனம். யென்னவென்றால் யெனக்கு சொந்தமான திருச்சி

6.றாப்பள்ளி டிஸ்திரிக்கட்டு திருச்சிறாப்பள்ளி தாலுக்கா மேல்படி டிஸ்திரிக்கட்டுது

7.வாகுடி மாகாணத்தை சேர்ந்த மேல்படி திருவறம்பூர் கிராமத்தில் ரூ 500 பொருமான

8.சர்வை 131 நெம்பர் கரையவெட்டி நன்செய் யேக்கர் 3 டி 17, 127 நெம்பர் நன்செய் டி 59 ஆக யேக்கர்

9.3.டி 76 இந்த நிலத்தில் யென்னால் சேகு முத்த லெப்பைக்கு கலத்து வூளி

10.யித்துக்காக விடப்பட்டிருக்குற மேல்க்கண்ட 131 நெம்பர் கலயில் தஞ்சாவூர் றோ

11.ட்டுக்கு தெர்க்கு, றாமசுவாமியின் கணபதி செய்க்கு வடக்கு வைத்திலிங்கம் பி

12.ள்ளை நொச்சியலடிக்கு கிளக்கு. தண்ணிபந்தலுக்கு மேர்க்கு இதர்க்கு

13.ளிப்பட்ட நன்செய் டி 30 போக பாக்கி யேக்கர் 3 டி 46 இந்த நன்செய் நிலத்தை மேற்படி திரு

14.வறம்பூர் கிராமத்தில் யென்னால் சன்னதி குளத்துக்கு போகுறபாதைக்கி கி

15.ளக்கு முத்துவய்யர் கொல்லைக்கும் மேர்க்கு வுசேன் ராவுத்தன் கொ

16.ல்லைக்கு தெர்க்கு சின்ன அக்கறாறத்து வீதிக்கு வடக்கு இதர்க்குள்பட்ட

17.புன்செய் நிலத்தில் கட்டப்பட்டிருக்கிற மேல்படி மஜீதின் பள்ளிவாசலில் தர்ம சிலவுக்காக

18.மேல்படி பள்ளிவாசல் பேறால் நான் சர்வ வில்லங்க சுத்தியாய் தானம்

19.செய்து குடுத்துவிட்டபடியால் மேல்படி நன்செய் நிலத்தில் நாளது தேதி முதல் வருஷாவருஷம்

20.வறப்பட்ட வருமானத்தை கொண்டு மேற்படி பள்ளிவாசலில் நித்ய வெ

21.னக்கு கதிப்பும் வசிளசாடுக மேற்படி வகையரா சாதிலவாரிது சிலவும் பின்னும்

22.வருஷம1 க்கு வரப்பட்ட இத்தொண்டு குதுபா றம்ஜான் மாசம் யெங்கிற

23.30 நோம்பு இந்த வகையறாவின் சிலவும் நானுள்ளவரையில் நானே

24.மானேஜறாயிருந்து நடுத்திக் கொண்டு வருகிறதும் தவிற யெனக்குப்

25.பிற்க்காலம் யென்புத்திர பவுத்திற பாறம்பரையாயி யெண்ணெண்ணைக்கும்

26.டத்திவறவேண்டியது. ஒருவேளை அவர்களால் நடத்த அட்டி சம்ப

27.வித்தால் ஒடனே அவர்களை நீக்கி திருச்சிறாப்பள்ளி கோட்டையில்

28.ருக்கம் ஒரைவின் முரையார் யாருக்க மேற்படி தர்மம் நடத்த நேமு செய்

# 92. துயிலிடக் கல்வெட்டுக்கள்

வரலாற்று ஆவணங்களில் இஸ்லாமிய சமயப் பெரியோர் களின் அடக்கத்தலங்களில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டுக்களும் அடங்கும். கி.பி. 14ஆம் நூற்றாண்டு முதல் 17 ஆம் நூற்றாண்டு வரை எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் அடங்கிய அடக்கத் தலங்கள் முப்பதுக்கு மேல் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. அவற்றில் சில பாரசீகம், அரபு மொழியில் எழுதப்பட்டிருந்தாலும், பெரும்பாலும் தமிழிலேயே கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. சிலவற்றில் தமிழ், அரபு இருமொழிக் கல்வெட்டுக்களும் உள்ளன.

காயல்பட்டினத்தில் உள்ள பெரிய பள்ளிவாசல், கொடிமரப் பள்ளிவாசல், ரெட்டைக்குளம் பள்ளிவாசல், கீழக்கரையில் உள்ள குத்பு செய்யது ஷஹீது ஒலியுல்லாஹ் என்னும் பழைய குத்பு பள்ளிவாசல், முகம்மது காசிம் அப்பா தர்கா என்னும் கடற்கரை பள்ளிவாசல், காட்டுப்பள்ளிவாசல் வேதானை ஜும்மா பள்ளிவாசல் என்னும் கூரைப்பள்ளிவாசல் ஆகிய இடங்களில் உள்ள அடக்கத் தலங்களில் தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளன.

பராசீக, அரபு மொழிக் கல்வெட்டுக்களில் ஹிஜ்ரி ஆண்டு முறை குறிக்கப்பட்டிருந்தாலும் தமிழ்க் கல்வெட்டுக்களில் தமிழ் ஆண்டு முறையே எழுதப்பட்டுள்ளது. எங்கும் கலியுக ஆண்டோ சாலிவாகன சக ஆண்டோ குறிக்கப்படாமல் கேரள மாநிலத்தில் பெரும்பான்மையாகவும், தமிழ்நாட்டில் சிறுபான்மையாகவும் பயின்றுவரும் கொல்லம் ஆண்டு முறையே எழுதப்பட்டுள்ளது.

கொல்லம் 835

வருக்ஷம் விளம்பி வருக்ஷம் பங்

குனி மாசம் 22 தேதி

கொல்லம் 6

44 ஆவது

வைகாசி மாதம் 17 தேதி

வியாழக் கிழமை

என எழுதப்பட்டுள்ளன. கொல்லம் ஆண்டுடன் 824 கூட்ட நேரான கி.பி. ஆண்டு கிடைக்கும். கொல்லம் 835+824 = கி.பி. 1659 ஆகும்.

சில இடங்களில்,

இராச்சத வருக்ஷம்

அற்பிசி மாதம் 5 தேதி

வியாழக் கிழமை

எனக் கொல்லம் ஆண்டு குறிக்கப் பெறாமல் தமிழ் ஆண்டு மட்டும் குறிக்கப்பட்டுள்ளது. பல இடங்களில் வருசம், மாதம், தேதி குறியீடுகளால் ஹா, மீ, உ எனக் குறிக்கப்பட்டுள்ளது. தேதி தீ என்ற மாதிரியும் சில இடங்களில் எழுதப்பட்டுள்ளது.

பூத உடல் அடக்கம் செய்யப்பட்ட பெரியவர்கள் எந்த நாள், எப்பொழுது இறந்தார்கள் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

வெள்ளிக் கிழமை பகல் மரித்தார்

புதன் கிழமை இரவு மரித்தார்

வியாழக் கிழமை காலை மரித்தார்

என இறந்த நேரம் குறிக்கப்பட்டுள்ளது. பெரும்பான்மையான் கல்வெட்டுக்களில் மரித்தார் எனவே யுள்ளது. ஒரு அடக்கத் கல்வெட்டில் “மவுத்தானார்” என எழுதப்பட்டுள்ளது.

பெண்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடங்களில் அவர்கள் இன்னாருடைய ‘மகளார்’ என்று ‘ஆர்’ விகுதி கொடுத்துச் சிறப்புடன் குறிக்கப்பட்டுள்ளனர். பெண்களை ‘நாச்சியார்‘ எனக் குறிக்கும் வழக்கும் இருந்துள்ளது. ஒரு கல்வெட்டில் ஒரு பெண் ’பீபியார்’ எனக் குறிக்கப்பட்டுள்ளார். ஒரு கல்வெட்டில் ஒரு பெண் இன்னாருடைய மருமகள் (மருமத்தி) எனக் குறிக்கப்பட்டுள்ளளார். வேலூரில் 1834ல் காலமான திப்பு சுல்தானின் மனைவி பேகம்பாதுஷா, மகள் ஃபாதிமா பேகம் ஆகியோர் அடக்கத் தலங்கள் உள்ளன (1834}

நல்லடக்கம் செய்யப்பட்டவரது தந்தை, தாத்தா பெயர் குறிக்கப்படுவது பெரும்பாலும் வழக்கம். சில கல்வெட்டுக்களில் பல தலைமுறைகள் குறிக்கப்பட்டுள்ளன.

காயல்பட்டினம் பெரிய பள்ளியில் 21.5.1581 அன்று அவதுல் சுபாரு நயினா நல்லடக்கம் செய்யபட்டார். அவர் முன்னோர்களாக முன்னோர்களாக,

சையது அகமது நயினா

சேக் அவதுல்லா நயினா

சையது அகமது நயினா

சமால் நயினா

ஓசு நயினா

இஷுபு நயினா

அசன் நயினா

ஆகியோர் வரிசையாகக் குறிக்கப்பட்டுள்ளனர். இன்னாருடைய மகன் இன்னாரெனக் குறிக்கப்பட்டுள்ளது.

ஷேக் அலி நயினார் என்ற செண்பகராம முதலியார் என்பவரின் முன்னோராக

சமால் நயினார்

சையது அகமது நயினார்

சமால் நயினார்

சையது அகமது நயினார் என்ற வீரபாண்டிய முதலியார்

சாது நயினார்

என்பவர்கள் வரிசையாகக் குறிக்கப்பட்டுள்ளனர்.

இரண்டு நல்லடக்கக் கல்வெட்டுக்களையும் நோக்கும்போது தாத்தாவின் பெயரைப் பேரனுக்கு வைக்கும் வழக்கம் இருந்தமை நன்கு புலப்படுகிறது. ‘பெயரன்’ என்ற சொல்லே ‘பேரன்’ என ஆயிற்று என்பர்.

சையது அகமது நயினா அவர்கள் பேரன் பெயரும் சையது அகமது நயினா என்பதே. சமால் நயினா பேரன் பெயரும் சமால் நயினார் என்பதே. நயினார் என இரு மாதிரியாகவும் எழுதப்பட்டுள்ளது. சில இடங்களில் கிரந்த எழுதுக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இபுறாகீம், இவுறாகீம் என்றும் அப்துல் அவ்துல் என்றும் பேச்சு வழக்கில் எழுதப்பட்டுள்ளது.

பலருக்கு மரக்காயர் அல்லது மரைக்காயர் என்ற பெயர் ணைந்து வந்துள்ளது. சிலர் பெயர்களில் ‘கப்பல்’ என்ற சொல் பெயருடன் கொடுக்கப்பட்டுள்ளது.

இஸ்லாமிய மரபுப் பெயர்களின் இடையில் பலருக்கு,

இம்முடி செண்பகராமமுதலியார் செண்பகராமமுதலியார்

வீரபாண்டிய முதலியார் அய்யா முதலியார்

நொளம்பாதராய முதலியார் ஷோர முதலியார்

மார்த்தாண்ட மரக்காயர் அய்வ முதலியார்

சேனாதிபதி இராசகண்ட கோபாலர் வெட்டும் பெருமாள்

பெத்தனா மரைக்காயர் அப்பு மரக்காயர்

மழமரைக்காயர்

போன்ற சிறப்புப் பட்டப் பெயர்கள் 15, 16 ஆம் நூற்றாண்டு இஸ்லாமியப் பெரியவர்கட்கு வழங்கியிருப்பது மிகவும் சிறப்புக்குரியது. முதன்மையானவர் என்ற பொருளில் முதலியார் பட்டம் வழங்கப் பெற்றிருக்க வேண்டும். தமிழகச் சமுதாய

வாழ்வில் அவர்கள் பெற்றிருந்த மிகு சிறப்பு இதன் மூலம் தெரிகிறது.

சேனாதிபதி, மன்னர், கட்டியார், செல்லக்குட்டி, நத்துக் கணக்கப் பிள்ளை,குட்டியார், மாப்பிள்ளை, இம்முடி, பெத்தணா என்ற பெயர்களும் ஆய்வுக்குரியவை. இப்பெயர்கள் அன்றைய மன்னர்களிடமும் சிற்றரசர்களிடமும், செல்வாக்குப் பெற்ற பாளையக்காரரிடமும் இஸ்லாமியப் பெருமக்கள் பெற்றிருந்த மிகு செல்வாக்கைக் காட்டுகின்றன.

கீழக்கரை காட்டுப்பள்ளிவாசலில் கி.பி.1466ஆம் ஆண்டு கல்வெட்டும், கடற்கரைப் பள்ளியில் 1458, 1468,1477,1498,1505, ஆம் ஆண்டு கல்வெட்டுக்களும், பழைய குத்பு பள்ளிவாசலில் 1603,1614, 1659 ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்களும், வேதாளைப் பள்ளிவாசலில் 1687ஆம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. கடற்கரையில் முதலில் மக்கள் குடியேற்றம் தொடங்கி உள்பகுதி நோக்கிக் குடியேற்றம் படர்ந்ததை இக்கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

மரக்காயர் அல்லது மரைக்காயர் பெயர் உள்ளவர்களே அதிகமாகக் காணப்படுகின்றனர்.

இஸ்லாமியர்களுக்கு வெட்டும்பெருமாள், மார்த்தாண்டன், கட்டியார், குட்டியார், சேனாபதி, இராசகண்ட கோபாலர் என்ற பட்டப் பெயர்கள் இருந்ததும் கல்வெட்டுக்கள் மூலம் தெரிய வந்துள்ளது.

வடக்கு தெற்காக அமைக்கப்பட்ட அடக்கத்தலங்களின் முகப்பில் பலகைக் கற்களில் அழகிய சிற்ப வேலைப்பாடுகள் இருக்கும். வேதாளைக் கூரைப்பள்ளி அடக்கத் தலத்தில் மட்டும் அடக்கத் தலத்தின் 12 x 10 அடி அமைப்பில் செவ்வக வடிவில் ஒரு கல் மண்டபம் காணப்படுகிறது (கி.பி. 1687). மாதிரிக்கு ஒரு சில காட்டப்பட்டுள்ளன.

**அ) கீழக்கரை கடற்கரைப் பள்ளிவாசல் (கி.பி.1499)**

கொல்லம்

674 ஆண்டு

மார்களி மா

தம் 5 தேதி வெள்

**ஆ) கீழக்கரை கடற்கரைப் பள்ளிவாசல் (கி.பி. 1514)**

கொல்லம் 689

ஆவது சிறிமுக வருஷம்

ஆனி மாதம் 21 தேதி வாவு

மார்த்தாண்ட மரக்

காயர் மகளார் உ சு நாச்சியார் வெள்

ளிக் கிழமை பகல் மரித்தார்

(மண்ணின் வழங்கு சொற்களை அப்படியே முஸ்லிம்கள் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.)

**இ) வேதாளை கூரைப்பள்ளி (கி.பி.1687)**

1. கொல்லம் 863 ஆண்டு
2. பிரபவ வருஷம் வைய்காசி 2 தேதி
3. செல்லக்குட்டி மரைக்காயர்
4. தத்துக் கணக்கப் பிள்ளை
5. மழ மரைக்காயர்
6. மாமு நயினா மரைக்காயர்
7. பெரிய தம்பி மரைக்காயர்
8. சேகு இபுராகீம் மரைக்காயர்
9. வெள்ளிக்கிழமை இரவு
10. மரித்தார்
11. இந்த சன்னதியாவது திருவடி
12. சீமை தேசாதிபத்தியத்துக்கு மணிய
13. மாக நின்று நசுருக்குள் ஏழு
14. கரைதுறைக் கோவிலும்
15. சுட்டு இடிச்சுக் கீர்த்தியும்
16. மிக விருதும் பெத்த பெரியதம்பி
17. மரைக்காயர் குமாரரான சேகு
18. இபுராகீம் அவர்களுக்கு
19. அல்லாகுத் தாலாவுடைய
20. திதுமித்தும் திருக்காட்சியும்
21. பிளை பொறுக்குதலும்
22. இரகுமத்தும் இரசுல் சல்லல்லாகு
23. அலைகி வசல்லமுடைய தாவத்து
24. முண்டாவதாகவும் அமீன்

சேது நாட்டின் கீழக்கரை வள்ளல் பெரியதம்பி மரைக்காயர். மரித்தவர் அவர் மகன்.

இக்கல்வெட்டை, அனுப்பி உதவியவர் இராமநாதபுரம் எஸ்.எம். கமால் அவர்கள்.

ஆவணம் 4. சனவரி 1994, பக்கம் 49

**ஈ) காயல் பட்டினம் கற்புடையார் பள்ளிவாசல் (கி.பி.1512)**

**கல்வெட்டு**

1. கொல்லம்
2. 688 ஆவது
3. புரட்டாசி மாதம் 14
4. நொளம்பாதரா
5. ய முதலியார்
6. காத்தியார் மக
7. ளார் வீவியா
8. ர் நாயத்துக்
9. கிளமை இரவு
10. மரித்தார்

Annual Report on Epigraphy 388 of 1950

**உ) காயல் பட்டினம் சிறுபள்ளி (கி.பி.1499)**

1. கொல்லம் 67
2. 1 ஆவது பங்குனி மாதம்
3. 18 தேதி சாது நாயினா செ
4. யிதி அகமது நாயினார்
5. ஆன விரபாண்டிய
6. முதலியார் சமால் நா
7. யினா செயிது அகமது நா
8. யினா சமால் நாயினார்
9. சேகாலி நாயினார் ஆன
10. செண்பகராம முத

11. லியார் திங்கட்கிழ
12. மை பகல் மரித்தார்

Annual Report on Epigraphy 384 of 1950

மற்றொருவர் பெயர் இம்முடிச் செண்பகராம முதலியார் (இம்முடி இரண்டாவது)

## 93. கல்வெட்டில் ஏழு தலைமுறை

காயல்பட்டினம் பெரிய பள்ளியில் உள்ள இரு நல்லடக்கக் கல்வெட்டுக்களில் இறந்தவருடைய ஏழு தலைமுறை முன்னோர்களைக் குறித்திருப்பது மிக அரிய நிகழ்ச்சியாகும். வேறு எங்கும் இவ்வளவு தலைமுறைப் பெயர்கள் கூறப்படவில்லை. 21.5. 1581 அன்று காலமான இம்முடிச் செண்பகராம முதலியார் என்கிற அப்துல் ஜபார் நயினாவின் முன்னோர் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டள்ளனர்.

அசன் நயினா

இசுபு நயினா

ஓசு நயினா

சமால் நயினா

சையது அகமது நயினா

ஷேக் அப்துல்லா நயினா

சையது அகமது நயினா

இம்முடிச் செண்பகராம முதலியார் என்கிற

அப்துல் ஜபார் நயினா (மறைவு21.5.1581 )

அதே அன்று காலமான மௌலானா அப்து ஜபாரின் முன்னோர்கள் கீழ்க்கண்டவாறு குறிக்கப்பெறுகின்றனர்.

ஹஸானுதீன்

அசன் நயினா

யூசூப்

ஜமாலுதீன்

சையது அகமது

ஷா அப்துல்லா

சையது அகமது

மௌலானா அப்துல் ஜாபர் (மறைவு 21.5.1581)

ARE 102, 103 of 1948

# 94. இணையற்ற இரு பதக்கங்கள்

கோட்டைக்காட்டுப் பதக்கம்

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டம் கோட்டைக்காடு என்னும் ஊரில் வயலில் எஸ். நாகராசன் என்ற மாணவர் கண்டெடுத்த பஞ்சலோகத்தால் ஆன பதக்கம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. 4.6 செ.மீ விட்டமுடைய வட்ட வடிவில் அப்பதக்கம் அமைந்துள்ளது. அதன் எடை 30 கிராம் ஆகும். பதக்கத்தின் முன்பக்கத் தலைப்பில் நடுநாயகமாக அல்லா என்று எழுதப்பட்டுள்ளது. அதன் இருபுறமும் 'முகமது' என்று எழுதப்பட்டுள்ளது. நடுவில் அழகிய கைப்பிடியுடன் வாள் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. அதன் பெயர் வாளுக்கு மேல் 'ஸுல்ஃபிகார் என எழுதப்பட்டுள்ளது. அந்த வாள் நபிகள் நாயகம் தன் மருமகன் அலி அவர்கட்குக் கொடுத்த வாளாகும். வாளின் அடிப்பகுதியில் 'யாசின்' என எழுதப்பட்டுள்ளது:

கீழ்ப்பகுதி விளிம்பு ஓரம் முதல் கலிபாக்கள் நால்வர் பெயர் வரிசையாகப் பொறிக்கப்பட்டுள்ளது. அவர்கள் பெயர்கள் அபுபக்கர் (கி.பி 632-634), உமர் (634-644), உதுமான் (644-655), அலி (655-663) என்பனவாகும்.

பதக்கத்தின் பின் பக்கம் தலைப்பில் இருபுறமும் முகமது என்று எழுதப்பட்டுள்ளது. நடுவில் மொட்டைத் தலையுடனும், கோவணம் அணிந்தும் இரு கைகளிலும் கூர்மையான ஈட்டி ஏந்திய நிலையில் துறவி ஒருவருடைய உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. அவர் தண்ணீரின் மேல் நிற்பதுபோலக் காட்ப்பட்டுள்ளது. வேலனின் இருபுறமும் யாசின் என்று எழுதப்பட்டுள்ளது. துறவியின் கால்களுக்கும் கீழே 154 என்று அரபு எண் பொறிக்கப்பட்டுள்ளது.

'அல்லா' என்ற புனிதச்சொல் ஒரு முறையும் முகமது என்ற சொல் நான்கு முறையும், யாசின் என்ற சொல் மூன்று முறையும் எழுதப்பட்டுள்ளன. கி.பி. 771ஆம் ஆண்டைச் சேர்ந்ததாக இப்பதக்கம் கருதப்படுகிறது. இசுலாம் மார்க்கத்தின் புனிதச் சொற்கள் பொறிக்கப்பட்ட இப்பதக்கம் மிக முக்கியமான கண்டுபிடிப்பாகும்.

**அரேபியர் கடல் பயணப் பதக்கம்**

(பத்திரிகைச் செய்திகள்)

திருச்செங்கோடு நாணயவியல் ஆர்வலர் எம்.விஜயகுமார், 777 ஆண்டுகட்கு முற்பட்ட மிக அரிய இசுலாமிய வெள்ளிப்பதக்கம் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளார். (அப்பதக்கத்தை ஈரோடு புலவர் செ.இராசு, இசுலாமிய ஆய்வறிஞர் கு.ஜமால் முகமது ஆகியோர் ஆய்வு செய்தனர்)

தூய வெள்ளியில் உருவாக்கப்பட்டுள்ள அப்பதக்கம் 4.5 செண்டி மீட்டர் விட்டம் உள்ள வட்ட வடிவில் அமைந்துள்ளது. அதன் முதல் பக்க மையத்தில் மெக்கா நகரில் முதலில் இறைவனுக்காக அமைக்கப்பட்ட ஆலயமான 'கஃபத்துல்லா' அழகிய முறையில்

பொறிக்கப்பட்டுள்ளது. (அப்புனிதத் தலத்தைக் கண்டு வழிபடத்தான் உலகெங்கிலுமிருந்து ஆண்டு தோறும் முப்பது லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் கூடுகிறார்கள்) ஆலயத்தின் மேல் பகுதியிலும் பதக்கத்தைச் சுற்றிலும் ‘யாசின்’ என்ற புனிதச் சொல் ஒன்பது முறை அரபு மொழியில் பொறிக்கப்பட்டுள்ளது. அச்சொல் புனிதக் குரானின் முப்பத்தாறாவது அத்தியாயத்தின் தலைப்பும், முதற்சொல்லுமாகும். அச்சொல் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டவர் எனவும், நபிகள் நாயகத்தையும் குறிக்கும். புனிதக் குரானின் இதயம் என்று அப்பகுதியினைக் கூறுவர். ஒன்பது முறை அச்சொல் எழுதப்பட்டிருப்பது ஒன்பது கோள்களைக் குறிப்பதாக இருக்கலாம்.

பதக்கத்தின் மறுபக்கத்தில் கடலில் செல்லும் படகில் இரண்டு பக்தர்கள் (சூஃபிகள்) போலத் தோற்றமளிக்கும் இருவர் கையில் நீண்ட கோல் தாங்கி நிற்கின்றனர். தாடியுடனும், நீண்ட சடைமுடியுடனும் அவர்கள் காணப்படுகின்றனர். முழங்கால் வரை உடை காணப்படுகிறது. படகின் கீழ் 651 என்று அரபு மொழியில் எழுதப்பட்டுள்ளது. அது ஹிஜ்ரி ஆண்டு ஆகும். அதற்கு நேரான கி.பி. ஆண்டு 1230 ஆகும்.

கி.பி.13,14 நூற்றாண்டுகளில்தான் ஏராளமான அரபு, பாரசீக நாட்டுப்பயணிகள் தமிழகம் வந்த தாங்கள் கண்டவற்றையும், கேட்டவற்றையும் விரிவான வரலாற்றுக் குறிப்புக்களை எழுதியுள்ளனர். இரண்டாம் பக்கம் உள்ள உருவம் அப்பயணிகள் யாரேனும் இருவரைக் குறிப்பதாக இருக்கலாம்.

## 95. - A. தொழுகை நேரம் குறித்த கல்வெட்டு

கீழக்கரையில் உள்ள ஓடக்கரை மசூதியில் தொழுகை நேரம் தமிழ்மாதம், தமிழ் எண்களில் எழுதப்பட்டுள்ளது. மாதந்தோறும் சூரியன் கதிக்கு ஏற்ப தொழுகை நேரங்கள் மாறுபட்டுள்ளதை 300 ஆண்டுகட்கு முற்பட்ட இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

**அசறுக்கு அடி**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தை | மாசி | பைங்கூனி | சித்திரை | வைகாசி | ஆனி |
| 11 | 10 | 9 | 8 | 7 | 8 |
| 101/2 | 91/2 | 81/2 | 71/2 | 71/2 | 81/2 |
| 10 | 9 | 8 | 7 | 8 | 9 |
| மார்கழி | கார்த்திகை | அற்பிசி | புரட்டாசி | ஆவணி | ஆடி |

குறிப்பு:

தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாதங்கள் உத்தராயண காலம் (உத்தரம் - வடக்கு)

ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி மாதங்கள் தட்சிணாயன காலம். (தட்சிணம் - தெற்கு)

இதே தொழுகை நேரங்கள் கீழக்கரை ஜுமா மசூதியிலும் கொளச்சல்கல்லுப்பள்ளியிலும்கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

**ஓடக்கரை மசூதி, கீழக்கரை**

ஜுமா மசூதி, கீழக்கரை

கொளச்சல், கல்லுப்பள்ளி

**குறிப்பு:**

இந்தக் கல்வெட்டில் (அஸருக்கு அடி) அஸர் நேரத்தை தமிழ் பன்னிரு மாதங்களில் நிழல் எத்தனை அடிகளில் குறிக்கும் என்பது 300 ஆண்டுகட்கு முன்பு கடிகாரம் இல்லாத காலத்தில் பள்ளிவாசலில் மக்கள் அறிவதற்காகக் குறித்துள்ளது வியந்து போற்றத் தக்கது.

**இதன்படி காயல் பட்டினத்தில் அசற் தொழுகை நேரம்**

தை மாதம் -11-10/2 அடி

மாசி மாதம்- 10 – 9 1/2

பங்குனி மாதம்- 9-8 1/2 அடி

சித்திரை மாதம்- 8-7 1/12

வைகாசி மாதம்- 7-71/2

ஆனி மாதம்-8-81/2

ஆடி மாதம்-9-9 1/2

8-7/2 அடி. 7-71/2 917

8-8/2 அடி 9 - 9/29/47 8-7/22/17

ஆவணி மாதம்-8-7 1/2

புரட்டாசி மாதம்

ஐப்பசி மாதம்

8 -8/2 H19-

கார்த்திகை மாதம்

9-91/2 அடி

மார்கழி மாதம்

10 -10/2 அடி

நிழல் அரையடி செல்லும் நேரம் அசற் தொழுகை நேரம் ஆகும்.

இதை அறிவிக்க இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

**அசறுக்கு அடி' என்பதன் விளக்கம்**

இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஐந்தாகும். அவை:

1) ஈமான் என்னும் இறைநம்பிக்கை
2) தொழுகை என்னும் இறை வழிபாடு
3) நோன்பு என்னும் விரதம்
4) ஜக்காத் என்னும் தானதர்மம்
5) ஹஜ் என்னும் புனிதப் பயணம்.

தொழுகை என்பது ஐந்துவேளை என்று வரையறுக்கப் பட்டுள்ளது.

1) பஜ்ரு - அதிகாலைத் தொழுகை, கிழக்கு வானம் வெளுத்து சூரியன் உதயமாகுமுன் தொழுவது.

2) லுஹர் - மதியத் தொழுகை. சூரியன் உச்சியிலிருந்து சற்று நகர்ந்தபின் தொழுவது.
3) அஸற் - மாலைத் தொழுகை. சூரியன் மறைவதற்கு முன் தொழுவது.
4) மஃரிப் - சூரியன் மறைந்தவுடன் தொழுவது.
5) இஷா - இரவுத் தொழுகை. சூரியன் மறைந்து 70 நிமிடம் கழித்து கிழக்கு வெளுக்கு முன் தொழுவது.

ஐவகைத் தொழுகை அசற் - மாலைத் தொழுகை எப்பொழுது தொழுவது எனக் காயல்பட்டினத்தில் சிலர் வினவியிருக்கக்கூடும். அசற் நேரத்தை அறிவிக்க இந்த சூரியக் கடிகாரம் பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து சூரிய ஒளியால் ஏற்படும் நிழல் எந்த அடியைத் தொடுகிறதோ அது அந்தமாதத் தொழுகை நேரம் ஆகும். இது ஒரு அபூர்வமான அறிவியல் குறிப்பாகும்.



...

**குறிப்பு:**

இந்தக் கல்வெட்டில் (அஸருக்கு அடி) அஸர் நேரத்தை தமிழ் பன்னிரு மாதங்களில் நிழல் எத்தனை அடிகளில் குறிக்கும் என்பது 300 ஆண்டுகட்கு முன்பு கடிகாரம் இல்லாத காலத்தில் பள்ளிவாசலில் மக்கள் அறிவதற்காகக் குறித்துள்ளது வியந்து போற்றத் தக்கது.

**இதன்படி காயல் பட்டினத்தில் அசற் தொழுகை நேரம்**

தை மாதம் - 11-10 1/2

மாசி மாதம்- - 10-9 1/2

பங்குனி மாதம் - 9-8 1/2

சித்திரை மாதம் - 8 – 7 1/2 அடி

வைகாசி மாதம் - 7 - 72 அடி

ஆனி மாதம் - 8 – 8 1/2 அடி.

ஆடி. மாதம் - 9- 1/2 அடி

ஆவணி மாதம் - 8 – 7- 1/2 அடி

புரட்டாசி மாதம் - 7 – 7 1/2 அடி

ஐப்பசி மாதம் - 8 -8 1/2 அடி.

கார்த்திகை மாதம் - 9 - 2 அடி

மார்கழி மாதம் - 10 – 70 1/2 அடி

நிழல் அரையடி செல்லும் நேரம் அசற் தொழுகை நேரம் ஆகும்.

இதை அறிவிக்க இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

**அசறுக்கு அடி' என்பதன் விளக்கம்**

இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஐந்தாகும். அவை:

1) ஈமான் என்னும் இறைநம்பிக்கை
2) தொழுகை என்னும் இறை வழிபாடு
3) நோன்பு என்னும் விரதம்
4) ஜக்காத் என்னும் தானதர்மம்
5) ஹஜ் என்னும் புனிதப் பயணம்.

தொழுகை என்பது ஐந்துவேளை என்று வரையறுக்கப் பட்டுள்ளது.

1) பஜ்ரு - அதிகாலைத் தொழுகை, கிழக்கு வானம் வெளுத்து சூரியன் உதயமாகுமுன் தொழுவது.
2) லுஹர் - மதியத் தொழுகை. சூரியன் உச்சியிலிருந்து சற்று நகர்ந்தபின் தொழுவது.
3) அஸற் - மாலைத் தொழுகை. சூரியன் மறைவதற்கு முன் தொழுவது.
4) மஃரிப் - சூரியன் மறைந்தவுடன் தொழுவது.

5) இஷா - இரவுத் தொழுகை. சூரியன் மறைந்து 70 நிமிடம் கழித்து கிழக்கு வெளுக்கு முன் தொழுவது.

ஐவகைத் தொழுகை அசற் மாலைத் தொழுகை எப்பொழுது தொழுவது எனக் காயல்பட்டினத்தில் சிலர் வினவியிருக்கக்கூடும். அசற் நேரத்தை அறிவிக்க இந்த சூரியக் கடிகாரம் பயன்படுத்தட் பட்டிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து சூரிய ஒளியால் ஏற்படும் நிழல் எந்த அடியைத் தொடுகிறதோ அது அந்தமாதத் தொழுகை நேரம் ஆகும். இது ஒரு அபூர்வமான அறிவியல் குறிப்பாகும்.

...

# 96. பேகம்பூர் பள்ளிவாசல் வரலாறு

ஐதர் அலி அவர்களின் தங்கை அசரது பேகம் சாஹிபா. அவர் கணவர் நவாபு மீறா றசாலிக்கான் சாயபு. இவர் திண்டுக்கல் சீமை ஜாகீர்தாராக இருந்தார். அவர் மனைவியும் ஐதர் அலியின் தங்கையுமான ஹஜ்ரத் பேகம் சாஹிபா அவர்கட்கு நந்தன வருடம் ஆனி மாதம் 13ஆம் தேதி (கி.பி. 1772) குழந்த பிறந்து ஏழாம் நாள் காலமானார்.

மீறா றசாலிக்கான் சாயபு தன் மனைவி அடக்கம் செய்த இடத்தில் பள்ளிவாசல்கட்டி,கோரியும் கட்டி காசினாயி தோப்பு, பேகம்பூர், பனங்குளம், சின்னப்பள்ளப்பட்டி ஆகிய ஊர்களில் நன்செய், புன்செய் மானியமாக விட்டு அதைக் கவனிக்க ஒன்பது பேரையும் நியமித்தார். அந்த ஒன்பது பேரும் இந்நிலங்களை அனுபவித்துக் கொண்டு பள்ளிவாசல் பணிகளையும் கவனிக்க வேண்டும் என்று ஆணையிடப்பட்டது.

பள்ளிவாசலுள்ள இடத்தில் தண்ணீரில் விளக்கு எரித்த அதிசயம் நடந்ததென்று கூறப்படுகிறது.

இந்திய நில அளவை உயர் அலுவல் மெக்கன்சியின் உதவியாளர்களில் ஒருவராகிய தரியாபத்து நிட்டல நாயன அய்யன் பள்ளிவாசலையும் அங்குள்ள புற கட்டிடங்களையும் சுற்றிலும் உள்ள நந்தவனத் தோட்டங்களையும் நேரில் பார்த்து அதனை அழகாக வர்ணித்துள்ளார்.

அதன் மூல ஆவணம் சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசின் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. அதன் எண்கள் டி.3021; ஆர். 8275 ஆகும். அதன் நகல் இங்கு தரப்படுகிறது. அதன் அழகை நோக்கும்போது “திண்டுக்கல்லில் ஒரு குட்டித் தாஜ்மகால்” என்றே அழைக்கத் தோன்றுகிறது. அங்கு சில கல்வெட்டுக்களும் உள்ளன.

**மூல ஆவணம்**

திண்டுக்கல் வகையரா தாடிக்கொம்பு துக்குடிக்குச் சேகரம் பேகம்பூரில் இருக்கும் மொகபரா பள்ளிவாசலுடைய வரலாறு.

ஹசரது நவாபு அயிதர் ஸ்ரீரங்கப்பட்டணம் தொரைத்தனம் செய்யும் நாளையில் தம்முடைய மச்சினன் ராஜராஜஸ்ரீ நவாபு மீறா றசாலிகான் சாயபு அவர்களுக்குத் திண்டுக்கல் சீமை ஜாகீராக

விட்டுக்குடுத்து மேற்படி திண்டுக்கல் சீமையை நவாபு மீறா றசாலிகான் சாயபு துரைத்தனம் செய்யும்போது மேற்படியார் பெண்சாதி ஹஜ்ரத் பேகம் சாஹிபா அவர்கள் நந்தன வருஷம் ஆனி மாதம் 13 தேதியில் குழந்தை பிறந்து ஏழாம்நாள் இறந்து போனார். அதின் பிறகு பேகம் சாயபு அவர்களை அடக்கம் செய்து பள்ளிவாசலுங் கட்டி கோரியும்

கட்டிவச்சு தாருகா முதலிய எங்கள் ஒன்பது பேரையும் நேமுகம் செய்து சர்வமானியமாகக் காசினாயி தோப்பு, பேகம்பூர், பனங்குளம், சின்னப்பள்ளப்பட்டி யிந்த நாலுவகையும் நஞ்சை புஞ்சையுள்பட விட்டது.

விட்டு உங்கள் வமுச பரம்பரையான மாமூலாயி இவ்வகை கிராமங்களும், தோப்பும், குளமும் நீங்களே அனுபவிச்சுக் கொண்டு பேகம் சாயபுவை அடக்கம் பண்ணப்பட்ட முகபரா பள்ளிவாசலில் பணிவிடைசெய்து கொண்டு யிருக்கக்கடவதென்று கட்டளையிட்டார்கள். அந்த நாள் முதல் நாங்கள் தலைமுறை தலைமுறையாய் அனுபவிச்சுக் கொண்டு வருகிறோம். முன்னாலே பேகம் சாஹிபாவை அடக்கம் பண்ணின இடத்தில் மும்பில் தண்ணீர் விட்டு விளக்கு எரிந்ததென்று சொல்லுகிறார்கள்.

மக்பரா என்கிற பேகம் சாஹிபாவை அடக்கம் பண்ணின இடம் பத்து மாருக்கப் பத்துமார் கொண்டு கட்டியிருக்கிறது. அந்தக் கட்டுப் பேரில் இரண்டு மார் கொண்டு விட்டு நடுவே கமான் வளைவதாக வேலை தீர்த்து நாலுக்குக் கல்லு நாலு சின்ன கலசங்களும் நடுவே பெரிய பொன் கலசமும் வைக்கப்பட்ட இடமும் உண்டாக்கி அதன் சுத்திலே பிரதட்சணம் பண்ணும் தாவாரம்போலே கட்டி அதில் வாசல்கள் வச்சு மொகலாயி வேலையாக வெள்ளைக்காரை பூசி வெள்ளை கமூனாக வேலை செய்து இருக்கிற பிரகாசமான இடமும் உள்ளதற்குத் தினமும் பக்கிரிகள் வழிப்போக்கர் வருகுற பேர்களுக்கு சோறுகள் குடுக்கறதும் உண்டு.

மேலெழுதிய மக்பராவின் இடத்துக்கு மேற்கு யிதுகாவென்று ஒரு இடமும் சவரட்சனையாக ஆறு கமான் குண்டுபோலே வைக்கப்பட்டு மொகலாயிதராக ஆறு குண்டு மேலே வைத்து ஆறுவாசல் போலேயும் நடுவிலே அவர்கள் வேதம் படிக்கப்பட்ட மேடை போட்டு யிருக்கிற இடம் பேகம்பூர் மெகற்பாவென்று பிரபலமாக பெரிய தோட்டமும் அந்த பேகம் சாஹிபா சமாதிக்குச்

சர்வ மானியம் நடத்தப்பட்டு துலுக்கர் மதாச்சாரம் பிரபலப்பட்டு இருக்கிறது.

தோட்டத்தில் தென்னை மரங்கள் மிகுந்து இருக்கிறது. பாக்குமரம் பலாமரம் கிச்சிலி மரம் எலுமிச்சமரம் மாமரம் இவைகள் கொஞ்சங் கொஞ்சம் இருக்கின்றன. சந்தன மரங்கள் உண்டு. அந்த விதைகள் விழுந்து இப்போது செடிகள் ரொம்பவும் ருக்கின்றன. தோட்டத்தைச் சுற்றிலும் வேலி போடாது இருக்கிறது.

-தரியாபத்து நிட்டல நாயன அய்யன்.

(மக்பரா-சமாதிக்குமேல் உள்ள வட்ட வடிவ டூம்! இச்சொல் மொகற்பா என்று எழுதப்பட்டுள்ளது.)

தமிழ்நாடு அரசு கீழ்த்திசை சுவடி நூலகம் சென்னை. எண் ஆர் 8275. டி. 3021: பள்ளிவாசல் நிர்வாகிகட்கு இந்த ஆவண நகல் வழங்கப் பட்டுள்ளது.

## 97. மகத்துவம் நடந்த சங்ககிரி பள்ளிவாசல்

சங்ககிரியில் பலபட்டரை அல்லாக் கோயிலுக்கு அருகில் உத்தமியான ஒரு மஹமதிய சர்தார் மனைவி இறந்து போக. சமாதி செய்தார்கள். அதற்கு அழகிய கட்டிடம் உண்டு. பலர் அங்கு சென்று பாத்தியாக் கொடுத்து வணங்குதலுமுண்டு. முறை செய்து கொண்ட காரியம் சித்தியாகும்.

அத்துடன் ஏழைகளானவர்கள் எந்த மதத்தினரானாலும் அங்கு சென்று “நாளை கலியாணம் இன்ன இன்ன நகை வேண்டும்” என்று கேட்டால் “அப்படியே தருகிறேன் நாளை வா” என மறுமொழி கோயிலிலிருந்து பிறக்கும். அதிகாலையில் போனால் கேட்ட நகைகளெல்லாம் வாயிற்படிக் கதவருகில் வைக்கப்பட்டிருக்கும். வணங்கி எடுத்துக் கொண்டு வந்து கலியாணம் முடிந்தவுடன் போய், “பீபி” என்றால் “ஏன்” என்று கேட்கும்.

வாங்கிப் போன நகைகளை வைத்து வணங்கிப் போய் வருகிறேன் எனக்கூறிவிட்டு மறுபடியும் வணங்கி வருவார்கள். இப்படிப் பலகாலம் நடந்து வந்தது. யாரோ ஒருவர் வாங்கிப் போன நகைகளைக் கொடாது வைத்துக் கொண்டனர். அது முதல் திருமண வீட்டார் சென்று கூப்பிட்டால் கேட்பதில்லை. நகைகளும் கொடுப்பதில்லையாம். இது சுமார் 70 வருஷங்களுக்கு முன்னும் (சுமார் 1860 வரை) நடந்தது. பார்த்தவர்கள் இருக்கிறார்கள் என்று நேரில் விசாரித்து தி.அ. முத்துசாமிக் கோனார் 1934ல் எழுதியுள்ளார்.

கொங்குநாடு, தி.அ.முத்துசாமிக் கோனார். திருச்செங்கோடு, 1934, பக் 79

# 98. முல்லா சாஸ்திரம்

கோயமுத்தூருக்குச் சில்லா துக்குடி சேவூரு தாலுக்ாசுபா சேவூரிலேயிருக்கும் காஞ்சி சேகு மகம்மது சாயபு சேகுந்தத சாயபு இவர்களால் சொல்லப்பட்ட கைமீது என்னவென்றால்

முல்லா சாஸ்திரம் என்று சொல்லப்பட்ட கிரந்தம். இதில் சொல்லப்பட்டது முசல்மான் சாதியாரை ஈசுவரனான அல்லா அவ ருடைய பாதாரவிந்தத்தை நினைத்துக் கொள்ளச் சொல்லும்படி யாகச் சொல்லப்பட்ட பொருள் சொல்லப்பட்டது வேதம். மேல் எழுதப்பட்டது வேதம்.

பகற்காலமே நமாசு

மத்தியானம் அஸர் ஹக்கி மகறிபு யிஷா

இப்படிக்கு அஞ்சுதரம் நாள் ஒன்றுக்கு நமாசு பண்ணுகிறது. இப்படிக்கு முசல்மான் சாதியிலே சகலமான ஜனங்களுக்கும் பண்ணப்பட்டது. சிறிது ஜனங்கள் அவாளாவாளுடைய கெரிபுனோலேயும் மடத்தனத்துனாலேயும் பண்ணுகிறது இல்லை. காசி தலமாயிருக்கப்பட்டவர்கள் மசூதிகளிலே நமாசு தப்பாமல் அஞ்சு தரம் நமாசு பண்ணிக் கொண்டு ராசாக்கள் சீறேயும் பிரார்த் திச்சுக் கொண்டு இருக்கிறது. இதுக்குத் தகவலாயிருக்கப்பட்டது

பங்கு சலவாத நமாசு ரோஜா

பந்தகீ ஹல்லாகீ கறணறஹே

யிதுக்கு தாத்பரியம்

தமிழ்நாடு கீழ்த்திசைச் சுவடி நூலகம். எண் டி.2951

## 99. கைக்கூலி சீதனம் குறைத்து ஒப்பந்தம்

**இடம்**-திருச்செந்தூர் வட்டம். காயல்பட்டினம் கொடிமரப் பள்ளியில் நடப்பட்டுள்ள பலகைக் கல்

**காலம்- —**-:தொல்லியல் துறை ஹிஜ்ரி 1271 என்று படித்துள்ளனர்.

செய்தி – பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாருக்குத் கொடுக்கும் கைக்கூலி சீதனம் அதிகமாக உயர்ந்ததால் பலர் கைக்கூலி சீதனம் கொடுக்க முடியவில்லை. அதனால் பல பெண்கள் திருமணம் ஆகாமலேயே இருந்துள்ளனர். அதனால் காயல் பட்டின இஸ்லாமியர் அனைவரும் கூடி கைக்கூலி சீதனம், பெண்ணுக்குச் சீதன உடைமை இவ்வளவுதான் கொடுக்க வேண்டும் என்று முடிவெடுத்து எழுதிய ஒப்பந்தம். இதை மீறியவர்கள் வீட்டில் நடைபெறும் நன்மை தீமைக்கு யாரும் போகக்கூடாது என்றும் தீர்மானித்தனர்.

**கல்வெட்டு**

1. கிகரத்து 1271 வருஷம் (935)...........
2. கார்த்திகை மாதம் 5 தேதி காயற்பட்டணத்திலிருக்கும் முஷ்
3. லிமாகிய நம்மவர் சகலத்தினரும் எழுதிக் கொ
4. ண்ட சம்மத பத்திரக் கறார் நாமா. என்னவென்றால்
5. நம்மள் இதுமுன் மாப்பிள்ளைமார்களுக்கு கை
6. க்கூலி சீதனம் 150-200-250-300
7. 350-400 எல்லை மட்டில் வாங்கிக் கலியாணம்
8. முடிக்கிறபடியினாலே யிந்தப்படி பேசிக் குடுத்த
9. பேர்களும் வருத்தப்பட்டு அதுனாலே குமர்க்கலி
10. யாணம் முடியாமல் அனேகங் குமர்கள் இருப்பதினாலே
11. யும் யேழை யெளியதுகளும் நடப்பு மனிதர்களும் கும
12. ரை வைத்துக்கொண்டு அனேகங் கஷ்டப்படுவதி
13. னாலேயும் கைக்கூலி உசந்ததன் நிமித்தியம் தன் உடப்பிற
14. ப்பான பேர்களிடத்தில் குமரிரு சாக்காட .... ர்சங்
15. ..... இக்கைக்கூலி குடுக்கிறதையிட்டு.....
16. அந்த இடத்தில் கைக்கூலி வாங்கி கலியாண மு

17. டிக்கிறபடியினாலேயும் இப்படிப் பல விதமாய் கும
18. ரிருந்து போறதினாலேயும் அனேகங் குமர்
19. கலியாணம் முடியாமல் இருப்பதினாலேயும் னாமெ
20. ல்லோரும் இப்போது ஒற்றுமைப்பட்டு பொரு
21. த்தமாய் கைக்கூலி சீதனம் பொருந்தி யெழுதி
22. க் கொண்டது. மாப்பிள்ளைக்குக் கைக்கூலி பணம்
23. விராகன் 71 பெண்ணுக்குச் சீதன உடமை விராகன் 30. யிந்
24. தப்படிக்கு வாங்குறதில் நம் உறமுற மாப்பிள்ளைக்கு கை
25. க்கூலி குடுத்து சீட்டு மத்தாதாயிருக்கிறயின்ராகளுக்கு
26. மேற்கண்டிருக்கிற விராகன் 71க்குக் குறைந்தது கைக்கூலி
27. குடுத்திருந்தால் மேற்படி விராகனுக்குச் சரிகூடிக் குடுத்து சீதன
28. உடமை விராகன் 30க்குப் போட்டு கலியாணம் நிறவேத்திக்
29. கொள்கிறது. மேற்படி கைக்கூலி விராகன் 71க்கு மேற்கொ
30. ண்டு பத்தியிருந்தால் மேற்கொண்ட பணம் விராகன் யக்குடு
31. த்து கலியாணத்தை நிறவேத்திக் கொள்கிறது. பெண் (ம)
32. வுத்தாகி 2ம் தாரம் கலியாணம் முடிக்கிறதும் காசு
33. கந்தைக் குடாத்திப் பட்டவர்களிடத்தில் பெண்ணிருந்
34. தால் பணம் விராகன் 10 வாங்கிக் கொண்டு கலியாண முடி
35. த்துக்கொள்கிறது பெண்ணுக்கு சீதனம் பணம் விராகன் 30
36. . பெத்துக்கொள்கிறது. நிசவுப்பட்டறை முன் வளக்கம்
37. கைக்கூலி பொன் 21க்கு ரூபாம் 42ம் 2ஆம் தாரத்துக்கு
38. ரூபாய் 10ம் கோமாளிந் தெருவில் முன் வளக்கம் பொன் 21க்கு
39. ரூபாய் 42ம் 2ஆம் தாரத்துக்கு ரூபாய் 10ம் பரிமாறந்தெருவில்
40. ரூபாய் 40/2ம் 2ஆம் தாரத்துக்கு ரூபாய் 40ம் சித்தந்தெருவீல்
41. பொன் 35க்கு கோப்பள்ளி ண் 5 ரூ பொன் 30க்கு ரூபாய் 40ம்
42. 2ம் தாரத்துக்கு ரூபாய்... டிக்களந்தெருவில் ரூபாய்
43. 21ம் 2ஆம் தாரத்துக்கு ரூ.....வளப்பு.....ருடை...

44. வங்களுக்குடை பொன் 10 ரூ 2ம் தாரத்துக்கு ரூ
45. 21ம் யிந்தப்படிக்கு கலியாண முடித்துக் கொள்
46. கிறது இந்தப்படிக்கு நடந்து வருவோமாகவும்
47. இந்தப்படிக்கு நடக்காத.......சூலு
48. க்கு மாறுபட்டு நவியு.........பெறாமல் போவாரகவும்
49. அப்படிக்கு வராமல்.............ஆல காத்து கொள்வானவகவும்
50. ஆமீன் அப்படிச் சறுகுப் போனவன் வீட்டு
51. நன்மை தின்மைக்கு போகாமலிருப்போகவும்
52. யெங்கள் மன ராசியில் எழுதிக்கொண்ட க...
53. நிசாக்கு அந்தந்த முகாவக்காறரைக் கொண்டே யெ
54. ழுதிக் கொள்கிறது இதற்கு அசல்ப் பத்திரம் அறபு
55. முகியித்த....க......யவர்கள் வசமிருக்குது
56. அடித்தும் சாதிறுஅ.... குமாரர் உமறு சாகி.....
57. முயற்சியாயிந்த முகப்பும் கட்டி விய.......
58. கறார் நாமாவும் எழுதி வைத்தார் கூயி......
59. ............ளிக்கொண்டு கொத்த எழுதிக்கொ.......
60. ............ குமரரான க...........

(முற்றுப் பெறவில்லை)

Annual Report on Epigraphy 104 of 1948

# 100. திப்புவின் திவான் தீர்ப்புப் பட்டயம்

ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் இந்த ஓலைப்பட்டயம் உள்ளது.

கொங்கு நாட்டு விசயமங்கலப் பகுதியில் 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் மக்கள் இடங்கை வலங்கைப் பிரிவுகளாக இயங்கி வந்துள்ளனர். செங்குந்த முதலியார், படையாட்சிக் கவுண்டர், ஆசாரிகள் ஆகிய பஞ்சகம்மாளர், நகரத்தார், பள்ளர். மாதாரிகள் ஆகியோர் இடங்கைச் சாதியாகவும், கவரைச் செட்டிகள், தேவாங்கர், சாணார் ஆகியோர் வலங்கைச் சாதியாகவும் தம்மை அழைத்துக் கொண்டனர்.

விசய மங்கலம் மாரியம்மன் திருவிழாவில் இடங்கைக்குரிய சில சிறப்புக்களை வலங்கையார் அணிந்து கொண்டனர். இடங்கையார் ஆட்சேபம் தெரிவிக்க ஒரு வருடம் இந்தத் தகராறு நீடித்தது. அங்கு வந்த அசரத் திப்பு சுல்தானின் அந்தியூர் திவான் கிரிமிரே சாயபு பாட்சாவிடம் முறையிட அவர் 'பூர்வம் தீர்ந்த பட்டயங்கள் வாங்கிக் கொண்டு ஆதாரங்களுடன் அவர்களைத் திருப்பூருக்கு வரச் சொல்லுகிறார்.

திருப்பூரில் விசாரித்தபின் தவறாக வழக்குத் தொடுத்த வலங்கையார்க்கு 2400 பொன் அபராதம் விதித்து வலங்கை, டங்கையார்க்குப் பூர்வீகம் முதல் என்னென்ன உரிமைகள் உண்டு என்று நிர்ணயம் செய்கிறார். வெற்றி பெற்ற இடங்கையார் வெற்றிக் காணிக்கையாக 1500 ரூபாய் கொடுக்க வேண்டும் என்றும் உத்தர விடுகிறார். இந்த விசாரணை 5.2.1797இல் நடைபெற்றுள்ளது.

திப்புவின் ஆட்சிக் காலத்தில் கொங்கு நாட்டுக் கிராமங்களில் அமுலுதார், சேனபாகம், சிரஸ்தார் ஆகிய மூன்று அதிகாரிகள் இருந்தனர். அமுலுதார் பெரும்பாலும் இசுலாமியராகவே இருந்தனர். மற்றவர் பெரும்பாலும் அந்தணராக இருந்தனர். விசயமங்கலம், அறச்சலூர், துடுப்பதி, ஊத்துக்குளி அதிகாரிகள் பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன. திப்புவின் நிருவாகம் பற்றி அறிய இப்பட்டயம் மிகவும் உதவுகிறது.

இடங்கையர்க்குச் செங்குந்தர் தலைமை தாங்கியதால் இந்த ஓலைப்பட்டயம் செங்குந்தர் வெற்றிப் பட்டயம் என அழைக்கப்படுகிறது. பல ஊர்க் கவுண்டர்கள் முன்னிலையில்

இவ்வழக்கு தீர்க்கப்பட்டுள்ளது. திப்பு சுல்தானின் நீதி விசாரணை முறைக்கு இந்தப் பட்டயம் சிறந்த சான்றாகத் திகழ்கிறது.

**மூலம்**

ஸ்ரீ சாலியவாகன சகார்த்தம் 1718க்கு மேல் கலியுக சகார்த்தம் 4897 க்கு மேல் செல்லாநின்ற நழ வருஷ தை மாதம் 27ஆம் தேதி நாயற்றுக்கிளமையும் அவிட்ட நச்சேத்திரம் பரிநாம யோகமும் வாலவாகரணமும் யிப்படியாகக் கொற்ற சுபதினத்தில்

ஸ்ரீமது றாசாதிராசன் றாசமாத்தாண்டன் றாசகெம்பீரன் பிரவுளுறாயர் பிரதாபறாயர்

நற்பதிறாயர் நரசிங்கறாயர் தேவப்பறாயர்வுடையார் வீரசமந்தராயர் சிக்கிந்ததேவருடையர் கிஷ்ட்டினறாயர்வுடையார் இவர்கள் முதலான அநேக றாயர் பட்டங் காணங்கர் மயிசூர்ச்சமஷ்த்தானம் சாமராயர்வுடையார் உபைய காவேரி மத்தஷ்ஷமான சீரங்கப்பட்டணத்தில் ரற்றின சிம்மாசனரூடராய் பிருதுவிராச்சியம் மத்திசம் பண்ணிக் கொண்டிருக்கும்போது,

யிவர்கள் காரியத்திற்குக் கருத்தராயிய அசுரது நவாப்பு அயிதரலிக்கான் சாயிவு அவர்கள் குமார நவாப் அசறது டீப்புச் சுலுத்தான் பாச்சா சாயபு அவர்கள்கு றாச்சியம் பரிபாலனம் பண்ணுகிறபோது யிவர்கள் காரியத்திற்கு முக்கிஷ்த்ராயியா மசூர் கச்சேரி மகாராயர் றாயேஷ்த்திரி மீரு சாயவு பாட்சா அவர்கள் விசாரணை பண்ணும்போது,

கொங்குமண்டலத்துக்குச் சேற்ந்தா அந்தியூர்க்கச்சேரி ஸ்ரீ திவான் கிரிமிரே சாயிவு பாட்சா அவர்கள், சிரஷ்த்தார் றாமறாயர் அவர்கள், அமுதலிச்சாயிவு பாட்சா அவர்கள், கொங்கு மண்டலம் குரிப்பு நாட்டில் விசையாபுரத்துக்கு அமுலுதாரர் மம்முதல்லி சாயிவு அவர்கள், சேனபாகன் அன்னயன் அவர்கள். சிரச்த்தார் வெங்கிட்டன் அவர்கள், அரச்சலூர் அமுலுதாரர் சுமானுக்கான் சாயிவு அவர்கள், செனபாக கோபால கிஷ்ட்டினய்யனவர்கள், சிரத்தார் சல்லய்யன் அவர்கள், துடுப்பூதி அமுலுதார் மீரண்சாயிபு அவர்கள், சேனபாகச் சின்னப்பன் அவர்கள், சிரஷ்த்தார் வீரறாகுவய்யன் அவர்கள், ஊத்துக்குளி அமலுதார் சாலீ சாயிபு அவர்கள், சிரஷ்த்தார் சேசகிரி அய்யர் அவர்கள், சனபாக சுப்பய்யன் அவர்கள்.

குறிப்பு நாட்டுக் கவுண்டர்களில் அந்தியூர் காழியண கவுண்டன், அனுமந்த கவுண்டன், பொன்னைய கவுண்டன், நெட்டரங்க கவுண்டன், துடுப்பூதி வாரணவாசிக் கவுண்டன், அரசப்ப கவுண்டன், நாகய்ய கவுண்டன், பொன்னய கவுண்டன், றாமய கவுண்டன். சின்னத்தம்பி கவுண்டன், றாமய கவுண்டன், ஊத்துக்குளி சறபண கவுண்டன், பெரியதம்பிக் கவுண்டன், முத்துக் கவுண்டன், செல்லப்ப கவுண்டன், திருப்பூரு பொன்னய கவுண்டன், முதலிபாளையம் முத்துக் கவுண்டன், குன்னத்தூரு சீரங்க கவுண்டன், அறியூரு முத்துவேலப்ப கவுண்டன், ஆவுடையாக் கவுண்டன், கருப்ப கவுண்டன், திங்களூரு குள்ள கவுண்டன், முட்டத்து றாம கவுண்டன், செவியூறு ஈஸ்வரமூர்த்திக் கவுண்டன் மேற்படியார்கள் முதல் இருபத்துநாலு நாட்டுக் கவுண்டர்கள் நாங்களெல்லாருங் கூடி யிடங்கயிலாகிய இருபத்திநாலு நாட்டு யிடங்கய்யாருக்கு நாங்களெல்லாருங்கூடி எளுதிக்கொடுத்த வெற்றிப்பட்டயம்.

பூந்துறைநாடு சபையில் பட்டக்காரர் தேவண கவுண்டர், வய்யாபுரிநாடு முத்துக்காளியப்ப கவுண்டர், காஞ்சி ஓடுபங்கநாடு முதலி பட்டக்கார கவுண்டர் அவர்கள். ஆருநாட்டு முதலி பட்டக்கார கவுண்டர் அவர்கள், பொன்குலுக்கி நாடு முதலி பட்டக்கார் அவர்கள், வாரக்கநாடு சமையப்பட்டக்காரக் கவுண்ட ரவர்கள், குரிப்பு நாடு சமையப்பட்டக்காரக் கவுண்டவர்கள். காங்கய நாடு சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், கவுண்டரவர்கள்,

தேன்கரைநாடு சமையப்பட்டக்காரக் வேங்கலநாடு சமையம்பட்டக்காரக் கவுண்டரவர்கள்,

ஒடுவங்கம் சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், அரையநாடு சமையம்பட்டக்கார கவுண்டவரவர்கள்,

எழுகரைநாடு சமயம்பட்டக்காரக் கவுண்டர், படையாச்சிக் நாடு படையாச்சிக் ஓடுவங்கம்

கவுண்டன். சின்னாயிக் கவுண்டன், கவுண்டன், கருப்ப கவுண்டன், காஞ்சி சமையம்பட்டக்காரர், பச்சைமுத்தாக் கவுண்டன், பூந்துறைநாடு சத்திமங்கலம் ஒடுபங்கம் முத்துக் கவுண்டன், ஆசாரிகள் சின்னத்தட்டான், திருவேங்கிடக் கொல்லன், கதித்தமல ரங்கத்தச்சன், ஆணிமுத்து ஆசாரி, பொம்மதச்சன், முத்துக்கொல்லன், நகரத்தான் தொப்பைசெட்டி, முத்தஞ்சட்டி,

வடமஞ்செட்டி, கோவிந்தசெட்டி, பொக்கிஷக் கொல்லர் வகையில் கரியநாயக்கன் குள்ள சேர்வைக்காரன் முத்துரங்கயன், வெங்கிட்டநாயக்கன், பழ்ழர் வகையில் வீரபத்திரப்பண்ணாடி, குட்டிப்பன்னாடி, யிருளப்பப்பன்னாடி, சோணப்பண்ணாடி மாதாரி வகைகள் குப்பமாதாரி, ரங்கமாதாரி,சின்னமாதாரி... மாதாரி...இவர்கள் மாதாரி... யிவர்கள் முதலாகிய இருபத்து நாலு நாட்டிலுள்ள யிடங்கையாருக்கு செங்குந்த முதலிமார் படையாச்சிக் கவுண்டர் அவர்கள் பஞ்சாளத்தார் பழ்ழர் மாதாரிகள் யிடங்கையோருகளும் வெற்றிப்பட்டையம் கொடுத்த விவரம்.

விசயமாநகரத்தில் மாரியம்மன் திருநாளிலே யிடங்கை யாருக்கும் வலங்கையாருக்கும் யித்தண்டத்தாருக்கும் தண்டம் வந்து வலங்கைக் கவரைச் செட்டியாகிறவன் இடங்கையாருக்குள்ள சிகப்பு கத்தியும் விருதும் நமக்குச் செல்லுமென்று சொல்லிக்கொண்டு யித்தண்டத்தாரும் வழக்காடி ஆறு மாதம் ஒருவருசக் காலமாய் யித்தண்டத்தாரும் சாதியும் கூட்டிக்கொண்டு வழக்காயிருந்த யிடத்தில் மகாறாயர் றாயஸ்த்திரி திவான் கிரி மீரே சாயபு அவர்கள் சீமை விசாரணைக்கு விசயமங்கலத்திற்கு வந்திருந்தயிடத்தில் வலங்கை கவரை தேசம் பெத்திசெட்டி, சேடச்செட்டி, தேவாங்கச்செட்டி, சாணார் முதலான வலங்கைச் சனமும், யிடங்கைக்குச் சேர்ந்த முதலிமார், படையாச்சிக் கவுண்டரவர்கள், ஆசாரியள் இத்தண்டத்தாரும் வந்து வழக்குச் சொன்னபடியினாலே யித்தண்டத்தாரை பூருவந் தீர்ந்த பட்டையங்கள் வாங்கிக் கொண்டு திருப்பூருக்கு வரச்சொல்லிப் போட்டுப் போனபடியினாலே அதே மேரைக்கு யித்தண்டத்தாரும்

திருப்பூருக்கு வந்து பட்டையங்கள் வாசித்துப் பார்த்தயிடத்தில் யிடங்கையார் பட்டையத்தில் பூருவம் காஞ்சிபுரத்தில் தீர்த்த பிரகாரத்துக்கு கத்தியும் பஞ்சவர்ண விருதும் அத்தநாரிக் குஞ்சமும் பகல்த் தீவட்டியும் பஞ்சவர்ணப் பாவாடையும் தெருமேல் மிரவணையும் அன்னமேல் மிரவணையும் குதிரைமேல் மிரவணையும் பல்லக்கின்மேல் மிரவணையும் செல்லுமென்று யிருந்தது.

வலங்கைக் கவரைச்செட்டியள் கொண்டுவந்த பட்டையத்தில் வலங்கை சனத்துக்கு வெள்ளைக்குடை வெள்ளை வெண்சாமரம் வெள்ளைவெட்டுப் பாவாடையும் வலங்கைச் சனத்துக்குச்

செல்லுமென்று யிருந்தது. வலங்கையர் கொண்டுவந்த பட்டையத்தில் யிடங்கையார்க்குச் செல்லும் விருது பஞ்சவர்ண விருதும் பஞ்சவர்ணக் குடையும் பகல்த்தீவட்டியும் கவரைச்செட்டி கொண்டு வந்த பட்டையத்திலே யிருந்தபடியாகவே பஞ்சாயத்தாரு... செட்டி வாலிசெட்டி வீரிசெட்டி முதலான பலபட்டறையார் முன்பாகத் தீர்ந்து வலங்கையான்... கொண்டு வந்த பட்டையத்திலே யிடங்கையாருக்குச் சகல விருதும் செல்லுமென்றுயிருக்கிறபோது நீ யில்லாது குமார்க்கம் சண்டை பண்ணிக்கொண்டு யிருக்கக் காரணமென்னவென்று வலங்கைக் கவரைத் தேசம் பெத்திசெட்டியைப் பிடித்து அங்கை செய்து விலங்குபோட்டு அரமனைக்கு ரண்டாயிரத்து நானூறு பொன்னு அவுதாரம் வாங்கி வச்சார்கள். யிடங்கையார் கிட்ட வெற்றிக் காணிக்கு ஆயிரத்தி அயினூறு ரூபா வாங்கி வச்சார்கள். வெற்றிப் பட்டையமுங் குடுத்தார்கள். மிரவணையும் பண்ணி வச்சார்கள். இதெ வெற்றிப்பட்டையமாக அனைவரும் கூடி எழுதிக் கொடுத்த வெற்றிப் பட்டையம். இதெ வெற்றிப்பட்டையமாகக் கட்டிக் கொள்ளவும்.

எழுதினவர் விசயாபுரிக்கெடியில் சிரஷ்த்தார் வெங்கிட்டய்யன் அவர்கள் எழுதினது. கமாச்சியம்மன் துணை. அந்தியூர்க்கச்சேரி ராஜஸ்ரீ திவான் கிரிமீரே சாயிபு அவர்கள், கச்சேரி சிரஷ்த்தார் இராமறாயர் அவர்கள், அமுதல்லிக்கான் சாயிபு அவர்கள், விசயாபுரித்துக்கிடியில் அமலுதாரர் மம்முதல்லி சாயபு அவர்கள், சேணபாக அன்னய்யன் அவர்கள், சிரஷ்த்தார் வெங்கிட்டய்யன் அவர்கள், அரச்சலூரு அமுலுதாரர் ராயசம் சுபானு கான் சாயபு அவர்கள், சிரஷ்த்தார் கல்லய்யன் அவர்கள், சேனபாகக் கோபாலகிஷ்ட்டப்பயன் அவர்கள். துடுப்பூதி அமுலுதாரர் மீரான் சாயிபு அவர்கள், ஊத்துக்குளி அமுலுதாரர் சாலீ சாயபு அவர்கள், சிரஷ்த்தார் சேஷகிரி அய்யன் அவர்கள், சேனபாக சுப்பய்யன் அவர்கள், குரிப்புநாட்டுக் கவுண்டர்கள் அனுமந்த கவுண்டன், பொன்னைய கவுண்டன், அரசப்பக் கவுண்டன். குப்பண கவுண்டன், பட்டக்காரக் கவுண்டன், நாகப்பக் கவுண்டன்.பொன்னைய கவுண்டன், றாமைய கவுண்டன், துடுப்பூதி வாரணவாசிக் கவுண்டன், சின்னத்தம்பிக் கவுண்டன், ராமைய கவுண்டன், ஊத்துக்குளி சரபண கவுண்டன்

பெரியதம்பிக் கவுண்டன், முத்துக் கவுண்டன், செல்லைய கவுண்டன்.திருப்பூரு பொன்னைய கவுண்டன், முதலிபாளையம் முத்துக் கவுண்டன், அந்தியூர் காளியண கவுண்டன், குன்னத்தூரு சீரங்கக் கவுண்டன்... கவுண்டன், ஆதியூரு முத்துவேலப்பக் கவுண்டன், ஆவுடையாக் கவுண்டன், கருப்ப கவுண்டன், திங்களூரு குள்ள கவுண்டன், செவியூரு ஈஸ்வரமூர்த்திக் கவுண்டன் இவர்கள் முதலாய் இருபத்தி நாலு நாட்டுக் கவுண்டர்கள் கையொப்பம் இந்தப் பட்டையத்தை யாதாமொருவர் இல்லைப் பொய்யென்று சொன்னவர்

கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகவும், தெய்வ தத்துவாராதி திருவிழக்கதையை நிந்தனை பண்ணின தோசத்திலே போகவும், மாதா பிதாவுக்கு வஞ்சகம் பண்ணின தோஷத்திலே போகவும். காமாச்சியம்மன் துணை உ.

கொங்குநாட்டுச் சமுதாய ஆவணங்கள். செ.இராசு. தமிழ்ப்பல்கலைக்கழகவெளியீடு

## 101. வேலூர் துலுக்கப் பிரபுக்கள் வம்சாவளி

சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசின் கீழ்த்திசை சுவடி நூலகத்தில் இந்த ஆவணம் உள்ளது.

வேலூர்க் கோட்டையில் குலாமல்லிகான் ஆட்சி செய்ததும், அவர் மக்கள் நால்வர் பாக்கரல்லிகான், தோஸ்த்தல்லி, சாதகல்லி, அக்பர் முகம்மதலி என்ற நால்வரும் தந்தைக்குப் பின் ஆட்சி புரிந்ததும்.

முகம்மதலி காலத்தில் இந்த ஆவணம் எழுதப்பட்டிருக்க வேண்டும். அவர் ஆட்சிச் சிறப்பு வருணிக்கப்படுகிறது. சிலு நாயக்கனின் தொல்லையும அவர் முகம்மதலி படையால் வெற்றிகொண்ட விவரமும் கூறப்பட்டுள்ளது.

இந்த ஆவணம் கவி வடிவில் வெள்ளிக்கந்தப்பய்யர் என்பவரால் எழுதப்பட்டது என்ற விபரமும் கூறப்பட்டுள்ளது.

**ஆவணம்**

திருவளர் செம்பாவை வாழும்

செல்வ விநாயகன் திருவடியை

மருவிய தணிகைமலை வாழும்

மயில்வடிவேலர் திருவடியை

பரந்திவெள்ளிமலை காளத்தி

பரன் அரவிந்தன் திருவடியை

வறந்தியுள முடியே வளர்த்த

மார்க்கசகாயர் திருவடியை

அண்ணாமலை பாகன் நாயகி

உண்ணாமுலையார் திருவடியை

பண்ணார் படைவீட்டில் வாழும்

பரஞ்சோதி எல்லம்மாள் திருவடியை

திரிசந்தி வேளையிலே இவர்களை

சிந்தையிலே மனந்தொழு தேத்தி

அரிச்சந்திரன் மனையாள் தனஇவரால்

ஆகிற காரியம் என்னவென்றால்

கல்விகல் லோவையெல்லாம்

கனகமலை போல

சொல்வேன் இங்க் கதைத் தொகுப்பை

செண்பக விநாயகன் அருளாலே

தாரணி கலியுகத்தில் கலவியு மிலவியும் மிகவுளதாய்

இப்படி இருக்கையிலே வேலூர் ஒப்புடன் ஆண்டவர்பேர்

மெப்பிய குலாமல்லிகான் சாயபு தப்பிறையில்லா துரையவன்தான் குமாரர்கள் நால்வருண்டு அவர்பேர் கூறுகிறேன்

அவன் மூத்தவன்பேர் பரியபாக்கறல்லி கானுக்கு

இளையவன் பார்த்திபன் சாககல்வி நிருபன்

தோஷத்தறல்லிக்கானுக் கிளையவன் அருபேர் முகமதலியவருடனே கோட்டையிலே சுகமாய் கொற்றவர்போல் வீற்றிருந்தார்

கனுசாய்புக் கிளைய நவாபு சாததுல்லா கானென்றுபேர் படைத்து வேலூர்க்கோட்டையிலே குலாமல்லி

வீருடன் தர்மமாய் ஆண்டிருந்தார் இவர்காலமுஞ்சென்று

பாக்கறல்லி அவரும் பட்டங்கட்டி வேலூர்க்கோட்டை

சாதகல்லி மிகுந்த சனங்களுடன் வாழ்ந்திருந்தார்

அவன் காலமுஞ்சென்று

நிருபன் தோஷத்தறல்லி நிதானமாய் ஆண்டிருந்தான்

அவன் காலமுஞ்சென்று

யகுபேரு மம்மதலி யவருக்கு யாவரும் கூடப்பட்டமுடன்

அரியதோர் ஆர்க்காட்டில் நவாபு சாயபு வாழ்ந்திடும் நாளையிலே பெரியதோர் லாலவும் தோன்றமல்லு பின்னையும்

முல்ல குப்புசந்து தனதானி மிகுந்த நல்ல

சங்கற பாற்கு சவுக்காற கடைகளுடன்

அன்னதான மிகுந்த அன்பான வீதிகள்

கடைத் தெருவும் உப்பரிக்கை மேடைகளும்

நல்ல உயர்ந்த மாளிகை கோபுரமும்

தப்பறை யில்லாமல் அனேகம் தானதர்மங்கள்

தாண்டகம் இப்படி இருக்கையிலே

சிலுநாயக்கன் இன்பமுடனே

துலுக்குகள் செய்யலுற்றான் சிலுநாயக்கனாலே நம்முடைய

சீமையெல்லாம் வெகுலூட்டி என்று

போலூர் வலுதய்யரும் றங்கப்பசெட்டி யிவாள்

நாட்டாமைக்காரர் யாவரும் ஆலோசனைகள் பண்ணி

நம்மாலாகிற காரியம் அல்லவென்று

லாலாவண்டைக்குப்போய் இங்கு

---

நடக்கிற துருக்குகள் தெரியச் சொல்ல

திவான்சாய்பே நாமசேதிகள் எல்லாம் தெரியச்சொல்லி இதுயிதுவிபரமென்று அவர் இன்பமுடனே உரைக்கலுமே

லாலா சாத்துலகான்

நாளை காலமே பயணம் அறியுமென்றார்

சாத்தேரிக்கரைமேல் பெரியசெண்டாவும் அவருந்தான் போட்டார்

அன்று முகாமிருந்து மற்றாநாள்

ஆரணி யருகிலே போயிறங்கி

ஆரணி வெங்கிட ராவை அழைத்து

பொந்தியலவர் வந்து அன்று முகாமிருந்து

மற்றாநாள் போலூருறப் பட்டினில் போயிறங்கி

இரண்டுமூன்று நாளிருந்து கலசபாக்கம் தனியே

கணக்கவே நாலுமுகம் போயிறங்கி சிந்தாமல் சிதறாமல்

சிலுநாயக்கன் தெத்தடி செக்கினில் போயிறங்கி

அந்தரங்கமாகவே அவனுக்கு அந்தப்புறத்திலே ஆள்போகவிட்டு யெந்தவிதத்திலேயும் சிலுநாயக்கன் யெப்படி யாகிலும்

கைப்பிடியாய்க் கொண்டுவர வேணுமென்று

மனிதர் கொக்கரித்தே மலையேற லுற்றார்

அவனண்டையில் இருந்தவர்கள் நாங்கள்

பெண்டுகளே அல்லாமல் வேறொரு

மொண்டி சிலு நாயக்கனைக் காணோமென்றார்

அகப்பட்ட பேரையெல்லாம் நம்முட

ஆற்காட்டுக்கே கொண்டுபோ என்றார்

நகைத்துடன் சாத்துலகான் நல்லதென்று சம்மதித்து

திருவருணாமலைதனிலே தண்டு செயமாய்

வந்து யிறங்கியபின் மறுநா ளானபின்பு

வகையுள்ள றங்கப்ப செட்டியவாள் சேர்ந்தபின்

சிலுநாயக்கன் பெண்டுகள் சிக்கின பேறெல்லாரையும்தான்

கைகால் வாங்கச்சொல்லி அவர்களை

கணக்கவே அயிராணி பண்ணலுற்றனர்.

முற்றுப்பெறவில்லை

தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம் எண் டி. 3809 தொண்டை மண்டல வரலாறுகள். மேற்படி நூலக வெளியீடு. பக்கம் 244-248

## 102. பந்தரும் ஃபர்கானாவும்

தஞ்சை மராட்டியர் காலக் கல்வெட்டுக்களில் முகம்மது பந்தர், நாகூர் பந்தர், நாகூர் ஃபர்கானா என்ற தொடர்கள் காணப்படுகின்றன. ‘பந்தர்’ என்பது பொருளைக் குவித்து விற்கும் இடத்தையும் வணிகத் தலத்தையும் குறிக்கும் சொல். மேற்குக் கடற்கரையிலும் சில பந்தர் பற்றிய குறிப்புகள் வருகின்றன. பின்னர் பந்தர் என்பது பந்தர் உள்ள அவ்வூர்ப் பெயராகவும் மாறியது. (உருது, பர்சியன், அரபு மொழியில் பந்தர் என்ற சொல் உள்ளது) பதிற்றுப் பத்தில்

”கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கவொரு

பந்தர்ப் பெயரிய பேர்இசை மூதூர்” (67:1-2)

”கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்

பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்” (74:5-6)

”இன் இசைப் புணரி இறங்கும் பௌத்து

நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்” (55:3-4)

ஆகிய இடங்களில் ‘பந்தர்’ என்ற சொல் குறிக்கப்படுகிறது. இரண்டு இடங்களில் கொடுமணல் மணிகளோடும் ஓரிடத்தில் பந்தரில் முத்துக்கள் கிடைப்பதையும் பதிற்றுப் பத்து கூறுகிறது. ‘பந்தர்’ பற்றி இதுவரை சரியான அடையாளத்தை யாரும் காட்டவில்லை. ஓர் இடப்பெயர் என்ற அளவிலேயே கருத்துக் கூறப்படுகிறது.

தமிழகம் வந்த சங்ககால யவனரில் அரபு நாட்டவரும் இருந்தனர். ‘யவனர்’ என்ற சொல்லே பிற்காலத்தில் ‘சோனகர்’ என்றாகி இஸ்லாமியரைக் குறித்தது என்று ஆய்வாளர் பலரும் கூறுவர். எனவே பதிற்றுப்பத்தில் வரும் ‘பந்தர்’ என்ற சொல் அரபுச் சொல்லாக இருக்கக்கூடும்.

ஃபர்கானா என்ற சொல் நாகூர் வட்டாரத்தைக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது. அச்சொல்லும் அரபுச் சொல்லே.

யவனரான அராபியர் கடல் ஆதிக்கம் செலுத்திய காரணத்தால்தான் “அரபிக்கடல்” என்ற பெயரே பெற்றது.

“தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள்”. தமிழ்ப் பல்கலைக் கழகம், செ.இராசு.

## 103. தினாரும் திரமமும்

அரபு நாடுகளில் பயின்று வந்த நாணயங்களில் 'தினார், 'திரமம்' என்ற இருவகை நாணயங்களும் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலேயே தமிழ்நாட்டில் வழக்கத்தில் இருந்துள்ளது. அரேபியக் குதிரை வணிகர்கள் மூலம் அவை தமிழ்நாடு வந்திருக்கலாம்.

பாண்டியமன்னன் முதலாம் வரகுணன் காலத்தில் (768-811) கி.பி. 778ஆம் ஆண்டு அருகந்தூர்கிழார் மகள் மோசி கண்டன் சங்கரன் என்பானின் மனைவி மாறம்பட்டத்தாள் திருப்புத்தூர் திருத்தளிப் பெருமாழைகளுக்கு நந்தாவிளக்கு எரிக்க பத்துக் காசுகள் அளித்தார். இச்செய்தி வடமொழிப் பகுதியில் 10 தினார் என்று குறிக்கப்பட்டுள்ளது. தமிழ்ப்பகுதியில் காசு என்று குறிக்கப் பெற்றிருப்பதால் செம்பொன்னால் உருவாக்கப்பட்ட 'தினார். தமிழ்நாட்டில் வழக்கில் ஏற்றுக் கொள்ளப்பட்டது' என்பதை அறிகிறோம். 'திரமம்' என்ற காசும் தமிழ்நாட்டில் வழக்கில் இருந்துள்ளது. edit

'திர்ஹம்' என்ற சொல்லே தமிழில் 'திரமம்' என வழங்கியது.

1) Damilica II part 3; "Fresh light on Arab trade with South Indina."S.I.I. Vol XIV No. 9; ARE 136 of 1908.

2) T.A.S. Vol IV No 30; Tamil lexicon, supplement P.310

# 104. அஞ்சு வண்ணம்

கேரள மாநிலத்திலும், தமிழ்நாட்டிலும் உள்ள பல கல்வெட்டுக்களில் (ராமந்நதளி, தலக்காடு, கொடும்பாளூர், உறையூர், சீனிவாசநல்லூர்) 'அஞ்சுவண்ணம்' என்ற மிகப்பெரிய கடல்வணிகக் குழுவின் பெயர் காணப்படுகிறது. கி.பி. 9ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கும் அவ்வணிகக் குழுவின் பெயர் பற்றி வி. வெங்கய்யா,டி.ஏ. கோபிநாதராவ். டி.சி.சர்க்கார், டி.வி. மகாலிங்கம், கே.வி.ரமேஷ், எ.சுப்பராயலு ஆகிய பல வரலாற்றுப் பேராசிரியர்கள் மிக விரிவாக ஆய்வு செய்துள்ளனர். பலர் பல்வேறு கருத்துக்கள் கூறியுள்ளனர்.

டி.சி. சர்க்கார் "அலி, முகம்மது என்ற சொற்கள் அஞ்சுவண்ணம் வணிகக் குழுக் கல்வெட்டில் காணப்படுவதையும், கே.வி.ரமேஷ் 'உமர்' என்ற சொல் வருவதையும் சுட்டிக் காட்டியுள்ளனர். பலரும் 'அஞ்சுமன்' என்ற பாரசீகச் சொல்லுடன் 'அஞ்சுவண்ணம்" என்பதை ஒப்பிட்டுக் காட்டியுள்ளனர்.

'களவியல் காரிகை' என்ற நூல் உரையில் பல்சந்தமாலை என்ற நூலில் வரும் சில பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

"இயவன ரான் கலுபதி தாமுதல் எண்ணவந்தார்

அயன்மிகு தானனயர் அஞ்சுவண்ணத்தில் அஞ்சல் என்னா"

"யவனர்கள்

அல்லா எவைந்து சந்தியுத்தார் வகைதொழும்சீர்

நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரும் நாட்டகமே"

என்பன அவற்றில் வரும் தொடர்கள். யவனர்-யோனகர்-சோனகர் என மாறியதாக எ. சுப்பராயலு அவர்கள் ஆய்ந்து நிறுவியுள்ளார். 'கலுபதி என்ற சொல் 'கலீஃபா' என்பதன் தமிழ் வடிவாகும். இரண்டாம் பாடலில் அஞ்சுவண்ணத்தார் 'அல்லா' என வந்து வணங்குவது கூறப்படுகிறது.

தஞ்சாவூர் சரசுவதி மகால் சுவடியில் கிடைத்தபாடல் ஒன்று நாகப்பட்டினத்தைப்

பின்வருமாறு புகழ்ந்து பாடுகிறது:

"குடக்கினில் துரங்கமும் வடக்கினில் கலிங்கமும்

குணக்கினில் பசும்பொன்னும் குளிர்ந்த தெற்க்கில் ஆரமும்

அடிப்பரப் படைகல்து அனேக வண்ண மாகவந்து

அஞ்சுவண் மும்தழைத்து அறத்தின்வண்ணம் ஆன ஊர்"

என்பது அப்பாடல்.எனவே 'அஞ்சு வண்ணம்'என்பது இசுலாமியக் கடல்வணிகக் குழுவேயாகும் என்பது அறிஞர்கள் முடிவு.

(லீஃபா பிரதிநிதி என்று பொருள்)

# 105. திப்பு சுல்தான் வாங்கிய பழைய கோட்டை

ஈரோடு மாவட்டம், காங்கயம் வட்டம் பழைய கோட்டையில் பசுக்கள், காளைகள், குதிரைகள் மிகுதியாக இருந்தன. காங்கேயம் காளை போலப் பழையக் கோட்டை குதிரைகளும் சிறப்பானவை. ஒரு பட்டக்காரர் குதிரையேறி கொங்கு நாட்டுத் தேவாரத் தலங்களான ஏழு கோயில்களையும் ஒரே நாளில் சென்று வணங்கி வந்தார். அவர்கள் குதிரை பழைய கோட்டையிலிருந்து பழனிக்கு 9 நாழிகையில் (4 மணி 16 நிமிடம்) செல்லும் என்று பாடல் கூறுகிறது.

22ஆம் பட்டக்காரர் நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியாரிடம் 10 சுழிகள் உடைய 'பஞ்சகல்யாணி" என்னும் மிக அரிய அழகான குதிரை ஒன்று இருந்தது. அக்குதிரையைப் பற்றித் திப்பு சுல்தான் கேள்விப்பட்டார். அதை வாங்க விரும்பினார். பழைய கோட்டையிலிருந்து குதிரைகள் வாங்கி ஐதர்அலி, திப்புசுல்தான் படைக்கு அனுப்ப ஒரு இசுலாமியப் பொறுப்பளர் பழைய கோட்டையில் இருந்தார் (அவர்களுடைய ஆறாம் தலைமுறையினர் இன்றும் பழைய கோட்டையில் வாழ்கின்றனர்). அவர் மூலம் அக்குதிரையை விலைக்கு வாங்க இயலவில்லை. பட்டக்காரர் கொடுக்க மறுத்துவிட்டார்.

ஒருநாள் பழையகோட்டைக்குத் திப்புசுல்தானே நேரில் வந்தார். பட்டக்காரர் வரவேற்று சைவ விருந்து அளித்தார். குதிரையைக் கொடுத்தே ஆகவேண்டும் என்று வற்புறுத்திய திப்புசுல்தான் மிக அதிக விலையாகிய 200 பொன் கொடுத்து அக்குதிரையை வாங்கிச் சென்றார்.

காரையூர்ச் சர்க்கரை உத்தமக் காமிண்டன்
காத்து வளர்த்திய பஞ்ச கல்யாணிப்
பேரைஉன ஓர் குதிரை கழிகள் பத்தும்
பிறழாது இருந்தசெய்தி கேட்டு வந்து
தாரையோ அலதுழிலையோ எனமிரட்டித்
தயலொடுஇரு நூறுபொன்னும் தானே ஈந்து
போரையே கொள்திப்பு சுல்தான் சைவ
போசனமும் கூடஉண்டு போனான் தானே!

பழைய கோட்டை மரபுப் பாடல்கள் எண். 72. பக்கம் 78

# 106. கச்சத்தீவை குத்தகைக்கு வாங்கிய இஸ்லாமியர்கள்

பாக் ஜலசந்தியில் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்கட்குச் சொந்தமானதாகவும், இராமேசுவரம் நகரியத்திற்கு உட்பட்டு இராமேசுவரம் கர்ணத்தின் அதிகார எல்லைக்கு உட்பட்டதாகவும் இருந்தது கச்சத்தீவு. இதற்கு ஏராளமான ஆவணச்சான்றுகள் உள்ளன.

1974ஆம் ஆண்டு ஜூன் மாதம் இந்தியா - இலங்கை ஒப்பந்தப்படி இந்திய அரசாங்கம் கச்சத்தீவை இலங்கைக்கு அன்பளிப்பாக வழங்கி விட்டது. இன்று கிழக்குக்கடற்கரை மீனவர்கட்கு ஏற்பட்ட வாழ்வுரிமைப் போராட்டங்களுக்குக் கச்சத்தீவு கைவிட்டுப் போனதே காரணம்.

கச்சத்தீவு, அதை ஒட்டிய சில தீவுகளிலும் சாயவேர் மிகுதியாக கிடைக்கும். பல இஸ்லாமிய பெருமக்கள் அதைக் குத்தகைக்கு எடுத்துள்ளனர். தனியாகவும் கூட்டமாகவும் குத்தகைக்கு எடுத்துள்ளனர். பல ஆவணங்கள் இருப்பினும் கால எல்லையாக 1880, 1947ஆம் ஆண்டுகளில் எடுத்த குத்தகை நகல்கள் இங்கு அறியப்படுகின்றன. பத்திரம் முத்திரைத்தாளில் எழுதப் பட்டுப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**பத்திரம்**

**பதிவு எண் -510/80 2-7-1880**

**1 புத்தகம்-16ஆம் வால்யூம் -ரிஜிஸ்டர் பத்திரத்திற்கு நகல்**

**(7ரூ முத்திரைத் தாளில் எழுதப்பட்டுள்ளது)**

1880 ஆம் வருஷம் சூன் மாதம் 23ஆம் தேதி மதுரை டிஸ்டிரிக்கு ரிஜிஸ்தார் சரகத்து இராமநாதபுரம் சப் டிஸ்டிரிக்கு இலாக்கா இராமநாதபுரத்திலிருக்கும் மதுரை ஜில்லா ஸ்பெஷல் கலக்டர் எட்வாடு டர்னர் துரையவர்களுக்கு மேற்படி இராமநாதபுரம் டிஸ்டிரிக்குச் சேர்ந்த கீழக்கரையிலிருக்கும் சோனக ஜாதி சாயபு மாப்பிள்ளை மரைக்காயர் குமாரர் வியாபாரமும் விவசாயமும் ஜீவனம் முகம்மது அப்துல் காதர் மரைக்காயர் 1 இராமாசாமிப்பிள்ளை மகன் விவசாய ஜீவனம்

முத்துச்சாமிபிள்ளை 2 பேரும் எழுதிக்கொடுத்த கறார் நாமா. என்னவென்றால் இராமநாதபுரம் ஜமீன்தாரியைச் சேர்ந்த சாயவேர்களின் பிரத்யேகமாய்க் குத்தகை ஏற்பட்டிருக்கிற ஏர்வாடி கிராமம் மேல்பக்க எல்லைக்கும், மேல்பக்கமிருக்கிற பாலையார் முதல் வேம்பாத்து கீழ்ப்பக்கம் வரையிலும் அதற்குள்ளடங்கிய தீவுகளும் நீங்கலாக இத்துடன் சேர்ந்திருக்கிற நாள்கெல்லை ஜாப்தாவில் அடங்கிய மேற்படி பாலையாத்துக்குக் கீழ்ப்பக்கம் முதல் இராமநாதபுரம் பாம்பன். முதுகுளத்தூர், திருவாடானை, சப் ரிஜிஸ்திராருக்குச் சேர்ந்த சாலைக்கரை வட்டகையென்று ஆத்தங்கரை, இராமேசுவரம், ஏர்வாடி, திருப்பாலைக்குடி, வகையறாவிலும் அதற்குள்ளடங்கிள தீவுகளிலும் உண்டாகிய

சாயவேர்களை இராமநாதபுரத்தில் உசூராபீசில் துரையவர்கள் முன்பாக நாளது மாதம் 21ஆம் தேதி இஸ்தியாரின் நிபந்தனையையும் உச்சரித்து யேலங் கூறினதில் கடோசியாக பசலி ஒன்றுக்கு ரூ 700/- இந்த ஏழுநூறு வீதம் 1290ஆம் பசலி முதல் 1294ஆம் பசலி வரை பசலி 5க்கு எங்களில் முத்துச்சாமி பிள்ளையாகிய நான் ஏலத்தில் ஒப்புக்கொண்டு அதற்காக 1 பசலி குத்தகைத் துகையில் கால்வாசி துகை ரூ 175/- தேதி 21ல் டேவணியாகச் செலுத்தியிருப்பதால் மேற்படி தீவு வகையறாக்களில் உண்டாகும் சாயவேர்களை நாங்களிருவரும் மேற்படி 1290ஆம் பசலி 1294 ஆம் பசலி வரை அனுபவித்துக் கொண்டு ஒவ்வொரு பசலிக்கும் ஏற்பட்டிருக்கும் மேல்கண்டத் குத்ததைசுத் துகையை கிஸ்தி பந்திப் பிரகாரம் நாங்களிருவரும் செலுத்திவர வேண்டியது. டேவணித் துகையை கடோசிப் பசலி வாயிதாவுக்குச் செல் வைத்துக் கொள்ளவும். எந்தப் பசலியிலாவது கிஸ்தி வாயிதாப் பிரகாரம் பணம் செலுத்தத் தவறினால் தவறின தேதி முதல் மாதம் 1-க்கு 100க்கு ஒரு ரூபாய் வீதம் வட்டி சேர்த்திக் குடுக்கவும். அப்படியாவது பசலி வகையறாக்குள் அந்தந்தப் பசலி குத்தகைத் துகையைப் பூரா செலுத்தி விடாத அடுத்த பசலி குத்தகை பாத்தியதையும் டேவணியையும் இழந்து விடவும் மறு ஏலம் கூறினதில் நஷ்டம் சம்பவித்தால் அந்த நஷ்டத்திற்கு உத்திரவாதம் செய்யவும் அனுபவித்த பசலிகளுக்குள்ள குத்தகைத்துகையை நிலுவையிலிருந்தால் செல்லாகும் தேதி வரை வாயிதா தவறின தேதி முதல் மேல்கண்டபடி வட்டி சேர்த்துச் செலுத்தவும்

நாங்களும் எங்களுடய வாரிசுகளும் பிரதிநிதி வகையறாவும் உத்திரவாதியாக இருப்போம்.

**கிராமாந்தரங்களுக்கு விபரம்**

மதுரை டிஸ்டிரிக்கு பாம்பன் சப் டிஸ்டிரிக்கு சேகரத்தில் மன்னாரு கரைக்கும் மேற்கு வட சமுத்திரத்திற்கும் தெற்கு சொக்கம்பிள்ளை மடத்திற்கும் கூத்தன்புளிக்கும் முட்டக்கோன் வல்சைக்கும் கிழக்கு குத்துக்கால் தீவு, முயல் தீவு, மன்னாளித் தீவு தென்கரைகளுக்கு வடக்கும் இந்நான்கெல்லைகட்குட்பட்ட கிராமங்களின் விபரம்.

இராமேஸ்வரம் உள்கடை உட்படக் கிராமம் 1

பாம்பன் தங்கச்சிமடம் கிராமம் 1

மண்டபம் கிராமம் 1

மரைக்கான்பட்டினம் கிராமம் 1

குஞ்சியாவலசை கிராமம் 1

அருப்புக்காடு கிராமம் 1

வேதாளை கிராமம் 1

சாத்தன்கோள்வலசை கிராமம் 1

ஆகக் கிராமங்கள் 8

1. குத்துக்கால் தீவு 1
2. முயல் தீவு 1
3. மன்னாளித் தீவு 1
4. கச்சத் தீவு 1

ஆக தீவு 4

(ஒப்பம்) முத்துச்சாமிபிள்ளை,

முகம்மது அப்துல் காதர் மரைக்காயர்

**இராமேஸ்வரம் சப்ரிஜிஸ்தாரா பீஸ்**

**எண் 278/1948/26 7 1948**

1947ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 2 இராமநாதபுரத்தில் இருக்கும் ஸ்ரீ ந. முத்துராமலிங்க சேதுபதியவர்கள் குமாரர் மரவ

ஜாதி ராஜாங்க அந்தஸ்து இராமநாதபுரம் ராஜா ஸ்ரீ ஆர். ஷண்முக ராஜேஸ்வர சேதுபதியவர்களாகிய நாகநாத சேதுபதியவர்கள் பவர் பெற்ற திவான் ஸ்ரீ வி. பொன்னுச்சாமி பிள்ளையவர்கள் 1-வது பார்ட்டியாகவும்......லிருக்கும் ஜனாப்.... பிள்ளை மகன் கே.எஸ். முகம்மது மீராசா மரைக்காயர் 2- பார்ட்டியாகவும் எழுதிக் கொண்ட குத்தகை தெஸ்தாவேசு.

1. 1-வது பார்ட்டியவர்களின் சமஸ்தானத்துக்குப் பாத்தியமான சமஸ்தானம் அனுபவத்திலிருக்கும் அடியில் கண்ட தீவின் 1356ஆம் பசலி முதல் 1358ஆம் பசலி முடிய குத்தகையை 2-வது பார்ட்டி1-வது பார்ட்டியவர்களின் தாசில்தாரிடம் பசலி 1க்கு ரூ 23.2.0 வீதம் ஒப்புக் கொண்டும் அதன் விஷயமாய் ஏற்பட்ட நடவடிக்கையின் பேரில் 1-வது பார்ட்டியவர்களின் தாசில்தாரிடம் பசலி 1-க்கு ரூ 23.2.0 வீதம் ஒப்புக் கொண்டும் அதன் விஷயமாய் ஏற்பட்ட நடவடிக்கையின்பேரில் 1-வது பார்ட்டியவர்களின் (Huzur Roc. E4. 10314/42, Dt. 15-2-1947 No Proceedings) மூலம் அப்ரூவல் ஆர்டர் பிறப்பிவிக்கப் பட்டிருக்கிறது. க்ஷ பசலிக் குத்தகைத் துகை ரூ 69.6.9வும் 2-வது பார்ட்டியால் 1-வது பார்ட்டியின் இராமநாதபுரம் தாலுக்கா கஜானாவில் 30-1.1947 தேதி 141820 செலவான் மூலம் இருசால் செய்யப்பட்டிருக்கிறது.
2. அந்தப்படி அடியில் கண்ட தீவை 2-வது பார்ட்டி 1-7-1946 முதல் குத்தகைக்கு அனுபவம் எடுத்துக் கொண்டிருக்கிறபடி 1-7-1947 தேதி பசலி 1க்கு ரூ 23.2.0 வீதம் 3 பசலிக்கு அனுபவித்துக் கொள்ள வேண்டியது.
3. குத்தகை பாத்யதையை 2-வது பார்ட்டி 1-வது பார்ட்டியவர்களின் அனுமதியன்னியில் வேறுயார்க்கும் TRANSFER செய்யக்கூடாது.

4. இவ்விதம் மேற்படி குத்தகை பாத்யதையை அனுபவித்துக் கொண்டு குத்தகை காலம் திகைவாகிற 1949ஆம் வருடம் ஜூன் மாதம் ஆகையறாக்கு எவ்விதப் பின் துயர்ச்சியுமள்ளியில் 2-வது பார்ட்டி 1-வது பார்ட்டியின் தாலுக்கா தாசில்தாரிடம் ஒப்புவித்து விட வேண்டியது. இதன்படி 1-வது பார்ட்டி எஸ்டேட்டிற்கும் 2-வது பார்ட்டியும்

அவரவர்களின் வாரிசுகளும் அவர் பாத்யதையை அடைகிறவர்களும் கட்டுப்பட்டு நடந்து வர வேண்டியது.

**சொத்து விபரம்**

இராமநாதபுரம் ஜில்லா ராமேஸ்வரம் சப்-ரிஜிஸ்திரேஷனுக்கு தனுஸ்கோடிக்கும் தலைமன்னாருக்கும் இடையே இருக்கும் சமஸ்தானத்துக்குப் பாத்தியமான சுச்சத்தீவு.

‘கச்சத்தீவு’ செ. இராசு, கொங்கு ஆய்வு மைய வெளியீடு, 1995

# 107. புதுக்கோட்டை ஓலை ஆவணங்கள்

சேது நாட்டு அரசர் கிழவன் சேதுபதி என்ற இரகுநாத சேதுபதியிடம் பணியாற்றியவர் இரகுநாதத் தொண்டைமான். தொண்டைமான் சகோதரி காதலி நாச்சியாரைக் கிழவன் சேதுபதி திருமணம் செய்து கொண்டார். கிழவன் சேதுபதி தன் மைத்துனர் இரகுநாதத் தொண்டைமானை தனக்கும் சமமான அரசர் ஆக்க வேண்டும் என எண்ணித் தன் சேது நாட்டிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து புதுக்கோட்டை அரசென்று ஏற்படுத்தி 1686ல் திருமெய்யம் கோட்டையில் நடந்த விழாவில் இரகுநாதராயத் தொண்டை மானுக்குப் புதுக்கோட்டை அரசை அளித்தார்.

மற்ற பல சமஸ்தானங்கள் ஆங்கில இந்தியாவில் இணைந்த போதும் புதுக்கோட்டை மட்டும் தனியரசு செலுத்தும் மாநிலமாகவே இருந்தது. 1948ல்தான் இராஜகோபாலத் தொண்டைமான் இந்திய அரசோடு புதுக்கோட்டையை இணைத்தார். 19ஆம் நூற்றாண்டில் அங்கு வாழ்ந்த இஸ்லாமிய பெருமக்கள் வணிகம், விவசாயம், கைத்தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தனர். புதுக்கோட்டை மாநில வளர்ச்சியில் இஸ்லாமியப் பெருமக்களுக்கும் பெரும் பங்கு உண்டு. இப்போது தனி மாவட்டமாக உள்ள புதுக்கோட்டையில் பல ஓலை ஆவணங்கள் கிடைத்துள்ளன. அவற்றில் இஸ்லாமியப் பெருமக்கள் தொடர்புடைய ஆவணங்களில் மூன்று இங்கு அளிக்கப்படுகின்றன.

இவைகளை அன்புடன் அளித்தவர் புதுக்கோட்டை மாவட்டம், திருமலை ராய சமுத்திரம் திருமலைநம்பி அவர்கள்.

19ஆம் நூற்றாண்டில் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்த இஸ்லாமியர்களின் வாழ்க்கை நிலை, சமயம், பொருளாதாரம், வணிகம், மற்ற மக்களோடு கொண்டிருந்த உறவு. பெயர் அமைப்பு இவைகளைப் பற்றி அறிந்து கொள்ள இந்த ஆவணங்கள் ஓரளவு உதவும்.

**நிலக் கிரயம் பத்திரம் (ஓலைச் சுவடி) கி.பி. 1878 முன்பக்கம்**

1) 1878 ஜனவரி மாதம் 7 தேதிக்கு வெகுதான்ய வருஷம் மார்கழி 20 தேதிக்கு புதுக்கோட்டை சமஸ்தானம் சப்திரிக் கட்டைச் சேர்ந்த ஆலங்குடி தாலுகா கவிநாடு வட்டம் பொன்னம்பட்டியிலிருக்கும் பழனியாண்டி சேருவை காரன் மகன்
2) சாதி வலயன், சிவமதம் தொழில் குடித்தனம் செல்லப் பனுக்கு மேற்படி தாலுகா வட்டம் திருமலைராயசமுத்திரத் திலிருக்கும்... ராவுத்தன் மகன் சாதி துலுக்கள் மகமது தொழில் குடித்தனம் சின்னயராவுத்தன்
3) எழுதிக் கொடுத்த புஞ்சை நிலம் கிறைய சாதனம் யென்ன மெண்டால் குன்னாம் குளத்துக்கும் தொனபதி கொளத்துக்கும் வார வாரிக்கு மேற்கு பற செல்லன் பிரகார கொல்லைக்கு வடக்கு ஓட்டைக் குளத்துக்கு தண்ணீர் போற

4) வாரிக்குக் கிழக்கு... வீரப்பன் கொல்லைக்குத் தெற்கு யிந்த நான்கெல்லைக்கு உள்பட்ட புஞ்சை நிலம் தாக்கு... பதினாலு அடி. (கோல்) 1059 குளி 6 நிலத்துக்கு விபரம்.. புஞ்சை நிலத்தை யென் தகப்பன்...

5) சித்திரை மாதம் 23 தேதி மேற்படி தாலுகா திருமலைராம சமுத்திரத்திலிருக்கும் கேப்பறைக்கி வீரப்பன் சேர்வை காரனிடத்தில் கிரையம் பெத்து அனுபவித்து வந்த பிஞ்சை கொல்லையை தன்னிடத்தில் நான் சுத்தக் கிரைய சாதனம்

6) செய்து குடுத்து நான் வாங்கினதுக்கு 1 விவரம் தான் தன்னிடத்தில் புஞ்சை கொல்லையை ஒத்தி வைத்து வாங்கியிருந்தது. நான் ரொக்கம் வாங்கினது ரூபாய் 24 ஆக... க்கி (50)ம் நான் பத்திக்

7) கொண்டது... இப்போது... புஞ்சை நிலத்துக்கு ஏற்பட்டிருக்கிற பட்டா, சிட்டா கணக்குப்படி உள்ள கிஸ்தி பணத்தைத் தானகப்படிகொண்டு புத்திர பவுத்திர பாரம்பரியாய் தானதி விக்கிறய

**பின்பக்கம்**

1) ங்களுக்கு போக்கியமாய் ஆண்டு அனுபவித்து கொள்ளக் கடவீராகவும் புஞ்சை கொல்லைக்கு என் தொகப்பன் பேரால் பட்டா ஏற்பட்டு யிருப்பதை நான் தன்பேருக்கு ஆகும்படி

2) (சர்க்காரிலே) மனுக் கொடுத்து விடுவேனாகவும் யிந்தப்படி புஞ்சை நிலம் கிறைய சாதனம் செய்து கொடுத்தேன்.

யிதற்கு அறிவேன் சாட்சியான சின்னியா ராவுத்தன் சம்மதி திருமலைராயசமுத்திரத்திலி

3) ருக்கும் பண்டுதம் சேகுகனி ராவுத்தர் மகன் பிச்சை யெண்டு கூப்பிடப்படும் மகமது மீரா ராவுத்தர் அறிவேன்... சீனி ராவுத்தன் மகள் மகமது மீரா அறிவேன். யிந்த பத்திரத்தை

4) எழுதினது புதுக்கோட்டையிலிருக்கும் வீரப்பபிள்ளை குமாரன் முத்துச்சாமி... மேற்படி புஞ்சை நிலத்துக்கு யென் தொகப்பன் கிரையம் பெற்ற சாதனம்... யித்துடன் தன் வசம் குடுத்திருக்கிறது. சின்னியா ராவுத்த

5) ன் சம்மதி வருஷம் 1878 சினவரி மாதம் 24 தேதியில் கண்டு யிருக்கிற நிலம் கவிநாடு கிராமத்தில் யிருக்கிறது. சின்னியா ராவுத்தன் சம்மதி யிந்தக் கிரைய சாதனப் பத்திரத்தில் பின்

6) பக்கம் யெழுதினது திருமலைராய சமுத்திரத்திலிருக்கும் பண்டுதம் சேகு கனி ராவுத்தர் மகன் பிச்சை யெண்டு கூப்பிடப்பட்ட மகமது மீரா ராவுத்தர் கயி நாட்டு யெழுத்து.

**வட்டிக்கடன் பத்திரம் கி.பி. 1883**

**முன்பக்கம்**

1) வருஷம் 1883 மே மாதம் 19 தேதிக்கிச் சரியான சுபானு வருஷம் வைய்யாசி மாதம் 22 தேதி புதுக்கோட்டை சமஸ்தான ச்ப்டிஸ்த்திரிக்கட்டைச் சேர்ந்த ஆலங்
2) குடித் தாலுகா கவினாடு வடக்கு வட்டம் சேர்க்கை திருமலை ராய சமூத்திரத்திலிருக்கும் பண்டிதம் சேருகனி ராவுத்தர் மகன் துலுக்க சாதி மகமதியர்
3) மதம் தொழில் வயித்தியம் சவளி வியாபாரம் மகமது மீரா ராவுத்தருக்கு ஓரடி வட்டம் சேர்க்கை அன்ன சத்திரத்திலிருக்கும் சிலம்பன் அம்பலகாரன் மகன் வல

4)ச் சாதி, சிவ மதம் தொழில் குடுத்தனம் மண்டய நெண்டு கூப்பிட்ட செல்லக்குட்டி வட்டிக் கடன் பத்திரம் யெழுதிக் கொடுத்தபடி பத்திரமாவது யிதற்

5) க்கு முன் தாது பிறட்டாசி 7 தங்களிடத்தில் நான் சவளி வாங்கின வகையில் ரூ 1 யென் தகப்பன் சிலம்பன் அம்பலகாரன் சவளி வாங்கினது
6) ரூ 1... முக்குணாமலைப்பட்டி சின்னயா ராவுத்தரிடத்தில் நான் சவளி வாங்கி யிருந்ததில் யாருக்கு கொடுக்க வேண்டிய துகை 1
7) தங்களே யேத்துக் கொண்ட வகையில் ரூ 2 வகை நாளது தேதியில் நான் ரொக்கம் வாங்கின வகையில் ரூ (3/8) ஆக வகை 4ம் நாளது உ தேதியில்

**பின்பக்கம்**

1) கணக்குத் தீர்ந்து தங்களுக்கு நான்கொடுக்க வேண்டியது ரூ 6 யிந்த ரூபாயி ஆறுக்கும் 1 ரூ வட்டி வட்டிகூட்டி நிண்ணை நாளைக்கி யேருண
2) வட்டியும் முதலும் உடையார் வேணும்போது குடுத்து யிந்தப் பத்திரத்தை வாங்கிக் கொள்வேனாகவும். யிந்த பத்திரத்துக்குச் செல்லான வி
3) ந்தப் பத்திரத்தில் தானே வரவு வயித்துக் கொள்ளுகிற யிந்தப் பத்திரத்துக்கும் இதையே வகைச் செல்லுச் சொன்ன போதிலும் யேத்துககொ
4) ள்ளத்தக்கதில்லை யிந்த படிக்கி சம்மதிச்சு வட்டிக்கடன் பத்திரம் யெழுதிக் கொடுத்தேன் செல்லக்குட்டி சம்மதி விலாக்குடியிலிருக்கும் ஆறுமுக னா
5) டாவி மகள் ஆண்டியப்பள் அறிவேன். விலாக்குடியி லிருக்கும் ராம நாடார் மகன் தனுக்கோடி நாடார் அறிவேன். யிந்த வட்டிக் கடன் பத்திரம் யெழு.
6) தினது விலாற்குடி பறச் செல்வன் மகள் கருப்பன் கய்யெளுத்து யிந்த பத்திரத்துக்கு சாதாண்ட கூலி... ரூ விட்டுப் போனதுனால சாகண்டு சேர்த்து எழுதி இருக்குது.
7) செல்லக்குட்டி சம்மதி

**நெல்லு லாபக் கடன் பத்திரம் கி.பி. 1898**

**முன்பக்கம்**

1) வருஷம் 1898 அக்டோபர் மாதம் 19 தேதி புதுக்கோட்டை சமஸ்தானம் டிஸ்திரிக்கட்டு டவுள் தெற்கு ராஜவீதி பழய...யில் சந்துக்குள்ளிருக்கும் காஜி அப்துல்காதர் லெவை சாயபு அவர்.
2) காஜி முகமது ஜவுளி வியாபாரம் காஜி முகமது சுல்தான் லெவை சாயபு அவர்களுக்கு மேற்படி சமஸ்தானம் ஆலங்குடி தாலுகா சப்டிஸ்திரிக்கட்டு கவினாடு வடக்கு வட்டம் பொன்னம்பட்டி...

3)ம் பலகாரன் மகன் சிவ மதம் தொழில் குடித்தனம் பழனியாண்டி அம்பலகாரன் வலச்சாதி பழனியாண்டி அம்பலகாரன் எழுதிக் கொடுத்த வென்னிலை நெல்லு லாபக் கடன் பத்திரம்...

4) த்தில் குடும்ப செலவுக்காகவும், வாயிதாவுக்காகவும் வாங்கியது ரொக்கம் ரூபாய் 35 இந்த ரூபாய் முப்பத்தி அஞ்சுக்கும் ரூ கர நெல்லு மரக்கால் 1 1/2 வீதம் லாபம் சேர்த்து கூடிய...
5) ரூபாய் 35ம் நாலது வருஷம் மாசி மாதம் 30 க்குள் மேற்படி லாப நெல்லையும் முதக் காயும் (தலையடிநெல்) ஈறம், பதர் போக்கி ஒருவழியாகக் கைவரிகை பாத்து (துர்த்தி புடைத்து, காய வைத்து) முத்திரை மரக்காலால் அள
6) ந்து குடுத்து இந்த நெல்லை லாபத்துடன் பத்திரம் வாங்கிக் கொள்வேனாகவும் குடுக்கத் தவறினால் ஆடிக் காலாவதி, வீகாப்பட்டி...

**பின்பக்கம்**

1)... படி லாபம் சேர்த்து உடையவர் வேண்டும்போது பணம் குடுத்து யிந்த நெல்லு லாபக் கடன் பத்திரம் வாங்கிக் கொள்வேனாகவும்

2) ச செல்ந்து சொன்னபோதிலும் ஏத்துக் கொள்ளத் தக்கதில்லை. இந்த பத்திரத்துக்கு நேரிடும் ரஜிஸ்தர் சிலவு நானே ஒத்துக் குடுப்பேனாகவும்... என் மனோ ராசி...
3) ட்டு இந்த நெல்லு லாபக் கடன் பத்திரம் எழுதிக் கொடுத்தேன். இந்த கீரல் பழனியாண்டி அம்பலகாரன் சம்மதி. திருமலைராய சமுத்திரத்திலிருக்கும் ப.சேகுக்கனி சம்..
4) புதுக்கோட்டையிலிருக்கும் மீரா ராவுத்தர் மகள் பிச்சை ராவுத்தர் அரிவேன். மேற்படி யூரிலிருக்கும் சாமிநாதன் மகன் காமாட்சி... அரிவேன் க்ஷ யூரிலிருக்கும்
5) இந்தப் பத்திரம் எழுதியது மேற்படி யூரிலிருக்கும்... சாமி சேர்வை மகன் துரைச்சாமி

# 108. பழவேற்காடு ஆவணத்தில் இஸ்லாமியர்

சென்னப்பட்டினம் (சென்னை) கிழக்கிந்திய கம்பெனி நடிவடிக்கைகளில் மிக முக்கியமான ஊர். இலங்கையிலிருந்து வந்த டச்சுக்காரர்கள் 1578லேயே அங்கு வந்து கோட்டை கட்டினார்கள். கோல்கொண்டா சுல்தானிடம் அனுமதி பெற்றனர்.

பழவேற்காடு, இறுக்கந்தீவு. அவரிப்பாக்கம், கணவந்துறை, தாங்கல் பெரும்புலம் இந்த 5 கிராமங்களையும் ஆயிரம் வராகன் குத்தகைக்கு டச்சுக்காரர்கள் வாங்கினர். மக்கள் பலர் அங்கு குடியேறினர். சிலகாலம் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும் பழவேற்காட்டைக் கைப்பற்றித் தங்கள் வசம் வைத்திருந்தார்கள்.

அந்த ஊரில் பல்வேறு சமூக மக்கள் இருந்தார்கள். ஒவ்வொரு வீட்டையும், உள்ள மக்களையும் கணக்கெடுத்து 1816 ஆம் வருடம் ஆவணம் எழுதப்பட்டது. இஸ்லாமியர் பற்றிய குறிப்பும் உள்ளது. பெரும்பாலும் மீன்பிடி தொழில் நடைபெற்றது.

**ஆவணப்பகுதி**

**பளவற்காடு**

வீட்டுக் கணக்கும் செனக் கணக்கும்

19. சோனகர் வீடு 100 க்கு

ஆண் பெண் பசகள் உன்படச் செனம் 600

**இடமணி**

9. இடமணி துலுக்கர் வீடு 2 க்கு

ஆண் பெண் பசகன் உள்படச் செனம் 12

**காட்டாங்குப்பம்**

2. மீன் லாபக்காரர் சோனகர் குடிசை 1 க்கு லாபக்காரர் துலுக்கர் குடிசை 1 க்கு

**தீவுக்குப்பம்**

6. வாபக்காரர் சோனகர் குடிசை பிக்கு

செனம் 20

லாபக்காரர் - மீனவரிடம் மீன் கொள்முதல் செய்து லாபத்துக்கு விற்பவர்கள்.

“லாபக்காரருக்கு ஒரு வராகன் மீன் முக்கால் வராகனாய்க் கொடுத்து விடுவார்கள். அவர்கள் கொண்டுபோய் சென்னப் பட்டணம் முதலான இடங்களில் வித்துக் கொள்ளுவார்கள்” (ஆவணம்)

## 109. கூலப்பண்டகசாலை வாங்கிய லெப்பை மரக்காயர்

பாம்பன் முத்தய்யபிள்ளை மகன் முத்துசாமிப் பிள்ளைக்குரிய இராமேசுவரம் கூலப்பண்டக சாலையைக் கீழக்கரையிலிருக்கும் இராமேசுவரம் மீரா லெப்பை அவர்கள் 100 பூவராகன் பணத்துக்கு 1818ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் விலைக்கு வாங்கியதை இந்த முத்திரை ஓலைப்பட்டயம் கூறுகிறது.

கூலப்பண்டக சாலைக்கு (தானியம் விற்கும் கடை) நாற்புற எல்லைகள் கூறப்படுகின்றன. இடைக்காலத் தமிழகத்தில் விளங்கிய பண்டைய விற்பனை முறை பின்பற்றப்பட்டுள்ளது. விற்பவர் ஊர்ப்பொது இடத்தில் எல்லோரும் அறிய "விலைகொள்வார் உளரோ" என்று கூற வேண்டும். வாங்குபவர் விலை குறித்தால் கொள்வேன் என்று பிற்கூறவேண்டும். பின் விலை ஆவணம் எழுதப்படும்.

ஓலையில் உள்ள ஓலைக்குற்றம், எழுத்துக்குற்றம், சொல் குற்றம், பொருள் குற்றம், வரிப்பிழை, வரிமாறாட்டம், வரிமுடைத் தெழுதுதல், நெரிதல், வெட்டு, செதுக்கு முதலிய குற்றங்களைப் பொருட்படுத்தக் கூடாது என்று எழுதப்பட்டுள்ளது. இந்துக்களும் இஸ்லாமியர்களும் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். முதிதணன் என்பவர் ஓலை எழுதியுள்ளார்.

**ஓலை ஆவணம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாந்தம் 1741 யிதன் மேல் 1818 டிசம்பர் மாதம்... தேதி வெகுதான்ய வருஷம் மார்களி மாதம் 3 தேதி செம்பி நாடு அனுத்துகைமங்கலம் நினைத்தது முடித்தான் பட்டினமாகிய கீழெக்கரையிலிருக்கும்
2. ராமீசுரம் லெவ்வை மரைக்காயரவர்களுக் பாம்பனி லிருக்கும் முத்தய்ய பிள்ளை மகன் முத்துச்சாமியா பிள்ளை ராமீகரம் கூலப்பண்டகசாலை அறுதிவிலைச் சாதனம் பண்ணிக் குடுத்த பரிசாவது யித்தனாள் தங்களுக்கு விக்கின்ற ராமேசுரம் கூலப்பண்டகை சாலைக்கு
3. எல்கையாவது கிழக்கு எல்கை சரவணைப்பணிக்கன் வீட்டிற்கு மேற்கு, தென்னெல்கை பொன்னப்ப பிள்ளைவீட்டுக்கு, வடக்கு, மேல் எல்கை மீனாட்சி செட்டி

வீட்டுக்குக் கிழக்கு, வடயெல்கை கடைத்தெருப் பாதைக்கு தெற்கு ஆகிய யின்னாங்கெல்கைக்

4.குள்ளிட்ட கூலபண்டகசாலையும் அதில் சேர்ந்த நிலமும் ராமீசுரத்தில் கொள்வாருளிரோ, கொள்வாருளிரோ வென்று நான்முற்கூற, தங்கள் பிற்கூறி கொள்வோமென்று வந்து இசைந்து எம்மிலிசைந்து தம்மில் பொருந்தி னால்வர்

5.கூடி மூவர் உசாவி யிருவர் கொய்து பிடித்து ஒருவர் விலை நிள்ச்செயித்து அன்றாடகம்

விளங்கும் பூவிராகன் 100... யிந்த நூறு பூவிராகனும் களி ஒரு பணமும் ரொக்கம் பத்திக் கொண்டதினாலே இதுவே அறுதி விலையாகவும் இதுவல்

6.வது வேறு விலைமாகி அல்லது பொருள்மாசி அல்ல. பொருள் சிலவாவது யிதுவன்றியே ஒருக்காலாவ யிருக்காலாவது முக்காலாவது ஒலைக்குத்தப் யெளுத்துக்குத்தம் சொல்குத்தம் பொருள் குத்தம் வரிப்பிளை

7.வரிமாறாட்டம் வரி முடைந்தெளுதல் நெரிதல் வெட்டுச் செதுக்கு மற்று மேல் குத்தமும் குத்தமனாதியெளுதி சந்திராதித்த சந்ததிப் பிரவேச புத்திர பவுத்திர பரம்பரையாக கீள் நோக்கிய கிணறும் மேல் நோக்கிய மரமும் திட்டுத்திடல்

8.யெப்பேர்ப்பட்ட சொல் பதார்த்தமு மீட்சியின்றியே ஆட்சியாக கல்லுங்காவேரியும் புல்லும் பூமியும் உள்ள நாள் வரைக்கும் அனுபவித்துக் கொள்ளக் கடவீர்களாகவும் இப்படிக்கு ஆளுமிடத்தில் தடையிடை

9.வந்தால் நானே தடைதீர்த்துத் தருவேனாகவும் இப்படிக்கு சம்மதித்து ராமீசுரம் கூலப்பண்டகைசாலை அறுதிச் சாதனம் பணிக்குடுத்தேன் லெவ்வை மரக்காயரவர்களுக்கு முத்துச்சாமியாபிள்ளை ஒப்பம் இது காரியம் சாட்சி.

10.ஸ்ரீதர்ம மகாஜன நெயினாக்களில் சபாபதி நெயினார் மகன் சாமி நெயினார் முத்தணன் நெயினார் மகன் அய்யாக்குட்டி நெயினா கொத்துக்கணக்கு நல்லசிவம் பிள்ளை மேற்படி அனந்தப்பிள்ளை மீராலெவ்வை அம்பலம் மேற்படி அம்பலம் ராக்கப்பர் செட்டி

11.மேற்படி அம்பலம் கோமுட்டி நாகந்செட்டி மகன் ராமலிங்கம் மேற்படியார் வாவாராவுத்தர் மகன் சங்கிலி வாவா இவர்களறிய இந்தக் கூலபண்டக சலை அறுதிச் சாதனம் எழுதினேன் முத்தணன் கைநெட்டெழுத்து,

12.இந்தப்படிக்கு முத்துச்சாமி இந்தப்படிக்கி அறிவேன் ரெகுநாத குருக்கள் அறிவேன் கொத்துக்கணக்கு அளந்தப்பிள்ளை அறிவேன் மீராலெவ்வை அம்பலம்

13. இந்தப்படிக்கு அறிவேன் கொத்துக்கணக்கு சண்பகம் பிள்ளை

14.இந்தப்படிக்கு சபாபதிநயினார் மகன் சாமிநெயினார் அறிவேன் ராக்கப்பஞ்செட்டி அறிவேன் ராமலிங்கஞ் செட்டி

15.இந்த ஓலை வித்தேன் இராமநாதபுரம் முத்திரைக் காகிதம் விற்பனை ஹெட்தாசில்தார் (கையொப்பம்)

16.1818 டிசம்பர் மீ 17 தீ

ஆவணம் 8, சூலை 1997, பக் 85, 86; தமிழகத் தொல்லியல் கழக வெளியீடு

# 110. ஜம்பை காசிம் புலவர் பாடல்கள்

**(அ) நூல் அச்சிட உதவி வேண்டல்**

'அரிச்சந்திர நாடகம்' என்ற இசைக் கீர்த்தனை நூலை ஜம்பை காசிம் புலவர் இயற்றினார். தன்னைப் பற்றியும், அந்நூல் பாடிய காரணம் பற்றியும் அந்நூலின் சிறப்பு பற்றியும் கூறி அச்சிட உதவி வேண்டிப் பாடிய 24 சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தப் பாடல், இவர் 'திருநீலகண்டர் நாடகம்' என்ற இசைக் கீர்த்தனை நூலையும் பாடியுள்ளார். (இரண்டும் கிடைத்துள்ளன.)

திருமிகும் ஜம்பைநகர் மீதுகுடி கொண்டுவளர்
திகழும்இஸ் லாம்குலத்தில்
திண்புவ முகமது கனிபுதல்வன் உபயவிழி
தெரியாத மந்தகாசன்
திசைபுகழும் காசிம் எனப்பெயர் கொண்டு
திட்டமுட னேஅழைப்பர்
தெளிவுதரு காரிகை நிகண்டுதன் னூலுடன்
செம்பும் அக ராதி முதலாய்
அருமையுடன் வாசிக்க வில்லைஎளி யேன் உலகில்
ஆசான்களைப் போற்றியான்
அம்புவியில் செந்தமிழ்ப் பண்டிதர்க ளைத்துதித்து
அஞ்சிமுதி யோர்களுக்கில்
அடியேன் நமங்கரித்து உளமகிழ வேண்டினன்
அறிவில் சிறந்தஇந்த
அரிச்சந்திர நாடகம் வெவ்வேறு மெட்டுகளில்
அமைத்திசைத்துக் கொடுமான
பெருமையுடை நகரநகர் செங்குந்த குலதிலகன்
பெயரிகொண்ட குப்பமுத்துப்
பெற்றகதன் ஆறுமுக முதலியெனும் சூரி
பிச்சதா யகள்இவர்கள்
பெட்புடன் கேட்கவே சந்தோஷ முற்றுயான்
பேதமிலா மல்இதனைப்
பிஞ்ஞகன் கிருபையால் பாடினேன் இவைகளில்
பிழையிருந் தால்பொறுக்கவும்
தருமநெறி வழுவாத மண்டவத் தோர்களே
தயவுசெய்து இந்தவேனை
தண்டமிழ் வித்துவான்கன் சொற்குற்றம் மன்னித்து

தமியனைக் காக்கவேணும்
தக்கபுகழ் பெற்றதன வான்கள்இசை அச்சிடத்
தனம்உதவி செயவேண்டினன்
தம்மனம் கனிகூர்ந்து கிருபையோ டனித்துயதில்
தழைத்தோங்கி வாழ்க மாதோ!

**(ஆ) நாகூர் வழிநடைச்சிந்து**

ஜம்பை காசிம் புலவர் கண்பார்வையற்றவர். ‘நாகூர் வழிநடைச் சிந்து” என்ற நூல் பாடியுள்ளார். அதில் ஒரு பாடல் (முழுப்பகுதி கிடைக்கவில்லை) ஜம்பை முதல் நாகூர் வரை உள்ள பல பள்ளிவாசல், தர்காபற்றிய வருணனை உள்ளது என்பர்.

அக்கன்அருள் பெற்றஸ்தலம் பாரும்

அகமதுஅலி வாழும்

மக்கமாநகர் முகமதுபேரர்

மிக்கசீர் நாகூர் பதிகொண்ட தீரர்

திக்கெலாம்புகழ் ஐயம்பெறு வீரர்

எக்காலமும் திருக்காரணநாதர் (அக்கன்)

**(இ) குடியின் தீமை**

ஒருமுறை புலவர் எடப்பாடி சென்றார். அங்கு குடி.காரர்கள் இருந்தைப் பார்த்து அவர்கள்

செயலைப் பற்றி பாடினார்.

"மங்கலம் மிகுந்த புவியில் - குடியர்கள்

மாடுபோல் உழைத்துவெகு பாடுபட்டுத்தான்

செங்கையில் பணத்தைவாங்கி - வீட்டில்

செலவுக்குக் கொடுக்காமல் தாட்டிகமாய்

ஒண்டிக்கொண்டு கடையில்சென்றே - காடிபோல்

புளித்தகள் ளைக்குடித்து நெளிந்துகொண்டே

சிங்கக்குட்டி போலே கர்ஜித்து - வானர

சேஷ்டைகள் செய்துவெகு மோசங்கள் செய்து

பெண்டுபிள்ளை அலையவிட்டு"

என்பது அப்பாடலில் ஒரு பகுதியாகும்.

**(ஈ) யூசுப் சாகிப் பெயர்**

ஜம்பை பெரியவர் பாகவி முகம்மது யூசுப் சாகிப் அவர்களின் பெயர்பற்றி காசிம் புலவர் பாடிய பாடல்

மறிக்கரியே ரோசையிடும் குழலின் பேரு
மண்ணாலே செய்யாத குடத்தின் பேரு
தரணியெங்கும் புகழும்ஒரு ஒலியின் பேரு
தமிழர்தொழும் குருப்பெயரோன் செடியின் பேரு
அறிவுடையோர் இந்தவகை ஆறும் கூட்டி
அன்புடனே நரமுத்தைப் படித்துப் பார்த்தால்
இறைவனைத் தொழும்ழும்பை நகரில் வாழும்
யூசுப்சாகிப் என்று இயம்ப லாமே!

என்பது அப்பாடலாகும்.

**(உ) பவானியாற்றுப் பெருவெள்ளம்**

4.7.1901 அன்று பவானியாற்றில் ஏற்பட்ட பெருவெள்ளம் பற்றி"பெருவெள்ள தங்கச் சிந்து". "பெருவெள்ள நொண்டி.ச்சிந்து" என்ற இரு பாடல் தொகுதிகளைப் பாடியுள்ளார் சம்பை புலவர் அ. பழனியப்பபன் மூலமாகக் கிடைத்த அக்கையெழுத்து பிரதியை புலவர் செ. இராசு அவர்கள் மூலமாக அச்சிட்டு 22, 2; 24-12-2002ல் கொழும்பு நகரில் நடைபெற்ற உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாட்டில் நேரில் சென்று பேராளர், பார்வையாளர்கட்கு ஈரோடு செவாலியர் டாக்டர் கொங்கு. என். கொளந்தசாமி அவர்கள் வழங்கினார்கள்.

"சீர்பெருகும் பிலவஆண்டு மிதுனத் திங்கள்

செப்பரிய தேதியது இருபத் தொன்றில்

பேர்பெருகும் புதன்கிழமை பவானி யாற்றில்

பெருக்கெடுத்து நதிக்கடுத்த ஊர்கள்தோறும்

நேர்பெருகும் கழனிகளும் வாழை செந்நெல்

நிர்த்தூளி ஆக்கிமிகச் சூறை யாடிப்

பார்புகழும் கனவான்கள் எளியோர் எல்லாம்

பரிதவித்த சரித்திரத்தைப் பகருவோமே

என்பது அவர் பாடிய தங்கச் சிந்தின் முதல் பாடலாகும். பெருவெள்ளம் பற்றிய முழுமையான முதல் தமிழ் இலக்கியம் இதுவேயாகும். காசிம் புலவர் கண்பார்வையற்றவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உதவி புலவர் அ. பழனியப்பன், ஐம்பை.

# 111. ஹைதர் அலி - திப்பு சுல்தானும், பாளையக்காரர்களும் ஒரு வரலாற்றுப் பார்வை

மைசூர் உடையார்களின் படையில் நான்கு தலைமுறையாகப் பணியாற்றியது திப்புவின் குடும்பம். ஷாபாநாயக், பத்தேநாயக், ஐதர்நாயக் ஆகியோர் மைசூர்ப்படையில் பணியாற்றினர்.

தேவனஹள்ளிப் போரிலும் (1746) மராட்டியப் போரிலும் (1757) தம் பேராற்றலால் பெரு வெற்றிக்குக் காரணமாக இருந்த இளைய குதிரைவீரர் ஐதர்அலி மைசூர் உடையார் இம்மடி கிருஷ்ணராஜ உடையாரால் (1734-1766) அரண்மனை அத்தாணி மண்டபத்தில் பாராட்டப்பட்டு 'பத்தே ஐதர் பகதூரி' என்று பெரிதாகப் புகழப்பட்டார். மைசூரில் செல்வாக்குப் பெற்ற தேவராஜா, நஞ்சராஜா ஆகிய தளவாய்களின் நிர்வாகக் கோளாறு காரணமாகவும் மைசூர் அரச குடும்பத்தின் வலிமையற்ற போக்கினாலும் நாட்டு மக்கள் நலனுக்காக நிர்வாகத்தை ஏற்கவேண்டிய சூழ்நிலை ஐதர் அலிக்கு ஏற்பட்டது.

ஏறக்குறைய 1761ல் ஐதர் அலி முழு நிர்வாகத்தை மேற்கொண்டார். ஐதர் அலியும்,திப்பு சுல்தானும் 1799 வரை ஆட்சி செய்தனர். மைசூர் பரம்பரை அரச மரபினரான உடையார் மரபினரை அவர்கள் இருவரும் பதவி நீக்கம் செய்யவில்லை. ஐதர், திப்பு ஆட்சிக்காலத்தில் (1734-1799)

1) இரண்டாம் கிருஷ்ணராஜ உடையார் (1734-1766)
2) நஞ்சராஜ உடையார் (1766-1772)
3) ஏழாவது சாமராஜ உடையார் (1773-1776)
4) எட்டாவது சாமராஜ உடையார் (1776-1799)

ஆகிய மன்னர்களை மைசூர் வரலாறு குறிக்கிறது. 18.4.1792 அன்று எழுதப்பட்ட பட்டாலிக் கிரையப் பட்டயத்தில் "ராயஸ்ரீபெட்ட சாமராச உடைய அய்யனவர்கள் ஒபய காவேரி மத்தியரங்கமான சீரங்கப்பட்டணத்தில் ரற்றின சிம்மாசன ரூடராய் பிருத்துவிராச்சியம் பண்ணுகுற நாளையில் அவர்கள் காரியத்துக்குக் கர்த்தராயெ ஸ்ரீடீபு சுலுத்தான் சாயிபவர்கள் நாளையில்" எழுதப்பட்டதாகக் குறிக்கப்படுகிறது.

1765ஆம் ஆண்டு ஐப்பசி 2ம் நாள் எழுதப்பட்ட கோயமுத்தூர்ச் செப்பேட்டில் "மைசூர் சமஸ்தானம் சீரங்கப்பட்டணம் கிருஷ்ணராசுடையராசா ராச்சிய பரிபாலனம் பண்ணி ஆண்டருளிய னாளையில் அயிதரல்லி நவாபு பாதர் சாயபு என்ற தொடர் காணப்படுகிறது.

1799ஆம் ஆண்டு எழுதப்பட்ட பல்லடம் கஸ்பா நாரணபுரம் செப்பேட்டில் "மயிகுரு சமஸ்தானம் தளவாய் டிப்பு சுலுத்தான் பாட்சா அருளாநின்ற காலத்தில்" என்ற தொடர்

காணப்பட்டது.

மதுரை நாயக்க மரபில் முதல் மன்னனான விசுவநாத நாயக்கனும் தளவாய் அரியநாத முதலியாரும் மதுரைக் கோட்டையைச் சுற்றி பார்வையிடும்போது 72 கொத்தளங்கள் கோட்டையில் இருந்ததால் அவர்கள் ஆட்சிப் பகுதியில் 72 பாளையங்களை ஏற்படுத்தி ஒவ்வொரு பாளையம் சார்பிலும் ஒரு கொத்தளத்தில் வீரர்களை நிறுத்த ஏற்பாடு செய்தனர் என்றும் மெக்கன்சியின் ஆவணங்கள் கூறுகின்றன. அவர்களில் பழைய பாளையக்காரர்களும் புதிய பாளையக்காரர்களும் இருந்தனர்.

ஐதர் அலி, திப்பு சுல்தான் அவர்கள் ஆட்சிக் காலத்தில் பாளையங்கள் நிலை என்ன என்பதைப் பல ஆவணங்கள் கூறுகின்றன. நிகரவரி வருவாயில் 10 ல் 7 பங்கு அல்லது நிர்ணயிக்கப்பட்ட தொகையைச் செலுத்திய எந்தவொரு பாளையக்காரரும் எவ்விதத் தொல்லைக்கும் ஆளாகவில்லை. ஆனால் வரி வசூலில் கண்டிப்பு இருந்தது.

போர்க்காலத்தில் போர் நடவடிக்கையால் பட்டம் இழந்த பல பாளையக்காரர்கட்கு ஐதர் அலி, திப்பு சுல்தான் ஆணைப்படி அவர்கள் அதிகாரிகள் பட்டம் சூட்டி பாளையக்காரர்கள் ஆக்கியுள்ளனர். தாராபுரம் துக்குடி பொருளூர் பாளையக்காரன் நல்ல பெரியாக்கவுண்டன் மெக்கன்சியின் உதவியாளர்கட்கு எழுதிக் கொடுத்த ஆவணத்தில்,

“என் தோப்பனார் தெய்வகதியான பிறகு எனக்கு அக்காலத்துக்கு மைசூர் சமஸ்தானத்துக்குத் துரையான அயிதர் அல்லிகான் சாயபு துரை அவர்கள் அரசாட்சி நாளையில் இந்தச் சீமைக்கு அதிகாரியாக வந்த பீமராவ் அவர்கள் உத்தரவுப்படிக்கு நாடனைவரும் கூடிப் பட்டமும் கட்டி. நல்ல பெரியாக் கவுண்டன்”

என்று பேரும் வணங்கப் பண்ணினார்கள்” என்று கூறியுள்ளார். (மெக்கன்சி ஆவணம் டி.. 2967)

அதேபோல் பழைய கோட்டைப் பட்டக்காரர் சிறையில் இருந்தவரை திப்புசுல்தான் அதிகாரிகள் விடுதலை செய்து பழைய கோட்டைக்கு அழைத்து வந்து பட்டம் சூட்டிப் பட்டக்காரர் ஆக்கியதாக 1807ஆம் ஆண்டு சூலை மாதம் 12ஆம் தேதி எழுதப்பட்ட பழையகோட்டை ஆவணம் கூறுகிறது.

“என்னையும் என்னைச் சேர்ந்த சனங்களையும் விடுதலை பண்ணி, நானும் என்னைச் சேர்ந்த சனங்களும் காரையூருக்கு வந்து சேர்ந்திருக்கும் நாளையிலே திப்பு சுலுத்தான் பகதூரவர்கள் காரியத்துக்கு கர்த்தராகிய சுபூர் சாயபு அவர்கள் நாளையில் நாளது வருஷம் சுபதினத்தில் நாடனைவரும் கூட்டிவந்து எனக்குப் பட்டாபிஷேகம் பண்ணி நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடி என்ற பேரை வணங்கப் பண்ணினார்கள்” என்பது அந்த ஆவணமாகும் (மெக்கன்சி ஆவணம் டி.2835)

தலையநாட்டுப் பட்டக்காரர் சவுந்தர பாண்டிய வள்ளல் கவுண்டர் இறந்துவிட அவர் மகன் வள்ளல் கவுண்டருக்குத் திப்பு சுல்தானின் அலுவலர்கள் முடிசூட்டியதாக ஓர் ஆவணம் கூறுகிறது.

“ராச்சியம் பிரபுத்துவம் பண்ணப்பட்ட திப்பு சுலுத்தான் துரைத்தனத்தில் அரமனை மனுஷாள் இருந்து நாடூரு பாளையப் பட்டார் அனைவரும் வந்து பட்டமும் கட்டிவச்சு கனகசபாபதி பாண்டிய வள்ளல் எண்ணப்பட்ட பேர் வெளங்கப் பண்ணினார்கள்” (மெக்கன்சி ஆவணம் டி.3039)

திண்டுக்கல் பாளையக்காரர் குருவப்ப நாயக்கருக்கு ஐதர்அலி பல விருதுகள் கொடுத்ததை ஒரு ஆவணம் கூறுகிறது.

“அயிதரல்லிகான் பஹதூரவர்கள் மிகவும் சந்தோஷிக்க சீரங்கப் பட்டணத்திலிருந்து பச்சப் பல்லாக்கு, சிங்கமுக விருது, வெட்டுப்பாவாடை விசறப்பட்டது. 2 அவகோஜா சிக்குடுமண், பச்சக்கல், பெரிய கடுக்கள் காதிலே போடுகுறது 4, வஸ்திரங்கள் வெகுமதி அஞ்சு இதுகௌ எல்லாம் குடுத்து திண்டுக்கல் சீமை அதிகாரமும் பெத்த பறமனாவும் அனுப்பிவித்து வுங்களுக்குள்ள தண்டுகவை பவுசுதாரி அதிகாரத்துடனே கூடி சீமை அதிகாரமும் பெத்து இருக்கக் கடவதென்று காகித பத்திரங்கள் அனுப்பி வைத்தார்கள்” (மெக்கன்சி ஆவணம் 3351)

திப்பு சுல்தான் ஒரு முறை விருப்பாட்சி வந்தபோது இடையகோட்டை பாளையக்காரன் முத்து வெங்கடாத்திரி நாயக்கரை ”பெத்தபிள்ளைபோல்’’ நடத்த அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். அதிகாரிகளும் தக்க மரியாதை செய்தனர். இதனை ஆவணம் பின்வருமாறு கூறுகிறது.

“மகாராசமானிய ராசஸ்ரீ டீபு சுல்தான் நவாபு அவர்களும், பெரிய பாளையமும் வந்து விருப்பாட்சியிலே இறங்கியிருந்த முன்னிலும் அவர் பேட்டி செய்து கொண்ட முன்னுக்கு சிருது வெகுமதியும் குடுத்து நவாபு சையது சாயபு அவர்களைப் பார்த்து இந்த இடையகோட்டை குமாரமுத்து வெங்கடாத்திரி நாயக்கனை பெத்தபிள்ளை மரியாதியாயி நடப்பிவிச்சுக்கொள் என்று உத்தரவு செய்தார்கள். அந்த முன்னுக்கு சையிது சாயபு அவர்கள் குதிரையும் குடுத்து வெகுமதியும் குடுத்து அனுப்பி வச்சார்” (மெக்கன்சி ஆவணம் 2829)

இடையகோட்டை

பாளையக்காரர் குமாரமுத்து வெங்கடாத்திரி நாயக்கன் மகன் முத்துமலையாண்டி மீனாட்சி நாயக்கன் ஆட்சிக்கு வந்து இறந்தவுடன் அவனுடைய மனைவியர் வசந்தக் சுத்தூரியம்மாள், பொன்னம்மாள் அவர்கள் இருவரையும் சையது சாயபு பட்டக்காரர்கள் ஆக்கியுள்ளார். மேற்கண்ட ஆவணம்

“அவர் பெண்சாதி வசந்தக் கத்தரியம்மாள், பொன்னம்மாள் அவர் நாளையில் சையது சாயபு அவர்கள் திண்டிக்கல்லுக்குத் தருவிச்சு வெகுமதியும் செய்து பட்டக்குரிப்பும் நேமுகம் செய்து அனுப்பிவித்தார்” என்று கூறுகிறது.

மேற்கண்ட ஆவணங்கள் அனைத்தும் தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை 1981மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டின்போது வெளியிடப்பட்ட “பாளையப் பட்டுக்களின் வமிசாவளி” என்ற தொகுதிகளில் அச்சாகியுள்ளன. ஐதர்அலி, திப்புசுல்தான்

காலங்களில் பாளையக்காரர்கள் பட்டம் சூட்டப் பெற்றதையும் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றதையும் பதவிகளும் விருதுகளும் பெற்றதையும் பாளையக்காரர்களின் மனைவிமார்கள் கூட பாளைய ஆட்சி பெற்றதையும் விளக்கமாகக் கூறுகின்றன. இவை அனைத்தும் கும்பினியாட்சிக் காலத்தில் எழுதியவை என்பது குறிப்பிடத்தக்கது. இந்நிலை 1761 - முதல் 1799 வரை இருந்தது,

திப்பு சுல்தானின் மறைவிற்குப் பின் 1799 கும்பினியாரின் லே யே முழுக்கட்டுப்பாட்டில் கொங்கு மண்டலம் முழுவதும் வந்துவிட்டது. அப்போது பாளையக்காரர்கள் திப்பு காலத்தைவிட அதிக வரி கொடுக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தப்பட்டுள்ளனர். சிறிது வரி பாக்கியிருந்தால்கூட பாளையங்கள் ஜப்தி செய்யப்பட்டன. ஏலம் விடப்பட்டுள்ளது. பாளையக்காரர்கள் விரட்டப்பட்டுள்ளனர். பலர் கைதானார்கள். பலர் கொல்லப்பட்டார்கள். பாளையம் ஆண்ட குறுநில மன்னர்போல வாழ்ந்தவர்கட்கு 30, 40 ரூபாய் சம்பளம் தரப்பட்டது. பெரும்பாலான பாளையக்காரர்கள் உயிருக்குப் பயந்து கும்பிளி அதிகாரிகள் காலில் விழுந்து கெஞ்சி வாழ்ந்துள்ளனர். இதையும் கும்பினிகால ஆவணங்களே கூறுகின்றன.

ஏறத் திம்மய்ய நாயக்கர் திப்பு ’காலத்தில் தன் பாளையத்துக்கு 2703 பொன் வரி செலுத்தி வந்தார். கும்பினி நிர்வாகம் வந்தவுடன் வரி 6000 பொன்னாக உயர்த்தப்பட்டது. கும்பினிக் காகிதப்படி பணம் செலுத்துவதில் பாக்கி ஏற்பட்டது. ஆயர்துரை என்பவர் வந்து பாளையத்தை ஜப்தி செய்துவிட்டார். ஒரு வருடம் கழித்து ஏற திம்மய நாயக்கனுக்கு மாதம் 100 ரூபாய் சம்பளம் அளிக்கப்பட்டது (மெக்கன்சி ஆவணம் எண் 2829)

சிஞ்சுவாடி பாளையக்காரர் சின்னப் பொம்ம நாயக்கன் 14 கிராமங்களை நிர்வாகம் செய்தவர். ஆண்டுக்கு 7004 பணம் வரி கட்டியவர். கும்பினிக்கு விரோதி என்று கூறி அவனைத் தூக்கிலிட்டு அவர் மகன் குமார பாளையக்காரர் முத்து மலையாண்டி சம்பே நாயக்கனைத் திண்டுக்கல்லில் சிறை வைத்தார்கள். கும்பினிக் கலெக்டர் காரோ துரை அவர்கள் “கடாட்சம் வைத்து” பாளையக்கார் முத்து மலையாண்டி சம்பே நாயக்கனுக்கு மாதம் 13 பணம் சம்பளம் கொடுக்க ஏற்பாடு செய்தாராம். (மெக்கன்சி ஆவணம் எண் 3130) 13 பணம் சம்பளம் பெற்ற பாளையக்காரரின் குடும்பத்தில் 15 உறுப்பினர்கள் இருந்தனர்.

நிலக்கோட்டை பாளையக்காரர் கூளப்ப நாயக்கர் “விறலிவிடு தூது” இலக்கியம் பெற்ற தமிழ்ப் புலவர்களை ஆதரித்த பரம்பரை. ஆண்டுதோறும் 5900 ரூபாய் வரி செலுத்தி வந்தார்கள்.

ஆயுதங்களை மலையில் ஒளித்து வைத்திருந்தார் என்ற ஒரே குற்றத்திற்காக நிலக்கோட்டை பாளையத்தை ஜப்தி செய்ய ஆர்டீசு துரை காலத்தில் “சிறாது சிப்பாய்களும் கும்பினி மனுஷாளும்” வந்தனர். பாளையக்காரர் ஓடிவிட்டார். அவர் தலையைக் கொண்டு வந்தால் 1000பொன் இனாம் என்றும், அவருடைய குஞ்சு குழந்தைகளையும் மனைவியையும் கொண்டு வந்தால் 50 பொன் என்றும் அறிவித்தார்கள்.

மனைவி அகப்பட்டுக் கொண்டதால் பாளையக்காரரும் பிச்சைக்காரர் வேடத்தில் வந்து

ஆர்டீசுதுரை காலில் விழுந்து கெஞ்சினார். பத்து நாள் கழித்து அவர் ஆயுதங்களைப் பறிமுதல் செய்ததால் அதற்கு 131 பொன் கொடுத்தார்கள். பின்னும் பலநாள் கழித்து மாதம் 50 ரூ சம்பளம் கொடுத்து அனுப்பினார்கள்.

பின்னர் பேரீஷ்துரை வந்தபோது கேட்டுக் கொண்டதில் (5900 பொன் கொடுத்த பாளையத்துக்கு) 11750 பொன் வரி நிர்ணய செய்து பாளையத்தைக் கொடுத்தார்கள்.

“மழை அருந்ததாயிருந்ததினாலேயும், காச்சலில் சனம் இறந்த போனதுனாலேயும், சாகுபடியில்லாமல் இப்படி நாலா விதத்திலும் வருசத்துக்கு 4000, 3000 தக்கு விழுந்தது.” அதற்காக நிலக்கோட்டை பாளையம் ஜப்தி செய்யப்பட்டது. (மெக்கன்சி ஆவணம் எண் 3161)

ரெட்டியாம்பாடி பாளையக்காரர் முத்துக்காடி தொப்ப நாயக்கர் இறந்துவிட அவர் தம்பி ராமசாமி தொப்பய்ய நாயக்கர் பாளையக்காரர் ஆனார். அண்ணன் இறந்ததற்காக இராமேசுவரம் சென்றிருந்தபோது அவர் பாளையம் கும்பினியால் ஜப்தி செய்யப்பட்டு கும்பினி மிட்டவாக்கி அதனை ஆய்க்குடி பாளையக்காரருக்கு விற்று விட்டார்கள். திரும்பி வந்த பாளையக்காரர், “கும்பினியார் தயவுகோரி” விண்ணப்பித்தார். ஒரு பயனும் இல்லை.

“என் ரெட்டயாம்பாடிக்குச் சேர்ந்த குப்பம்பாளையத்தில் குடியிருப்புக்காரனாய் ரொம்பவும் நொந்து மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு நானும் என்னைச் சேர்ந்த ஆண்கள் 3 பெண்கள் 6 வேலைக்காரர்கள் 4 ஆக சனம் சீவனத்துக்கு மார்க்கமில்லாமல் மிகவும் இளப்பத்துடனே மகா ராஜஸ்ரீ கும்பினியாரவர்கள் கடாட்சத்துக்குப் பாத்திரவானாக யிருக்கிறேன்”

“இப்படிக்கு ரெட்டையம்பாடி சபத்தி சமீன்தாரி றாமசுவாமி தொப்பனாயக்கர் 1816 யேப்பிரல் 30 தேதி” (மெக்கன்சி ஆவணம் 3256)

பின்னர் ரெட்டையாம்பாடி 17 கிராமங்கள் அடங்கிய பாளையத்தைக் கும்பினியார் ஏலம் விட்டார்கள். ஆய்க்குடி ஜமீன்தார் குமாரக் கொண்டம நாயக்கள் ஏலத்தில் எடுத்தார்.

கும்பினி உத்தரவுக்கு விரோதமாக நடந்தார் என்று கூறிப் பல பாளையக்காரர்களையும், அவர்கள் மக்களையும் கும்பினியார் தூக்கிலிட்டார்கள். விருப்பாட்சி பாளையக்காரர் கும்பள நாயக்கரையும் அவர் மூத்தமகன் பட்டத்துக்குரிய முத்துவேல் நாயக்கரையும் அவர்கள் பாளையப்பட்டான விருப்பாட்சியி லேயே தூக்கிலிட்டார்கள்.

”கும்பினியாரவர்களுக்கு விரோதியான தம்பாக் கவுண்ட னையும் (தீரன் சின்னமலை) லக்கனாயக்கரையும் ஆதரிச்சது போலேயு ஸ்ரீரங்கப்பட்டணத்திற்கு ஆளனுப்பிவிச்சார் என்றும் கும்பினியார் உத்தரவுக்கு விரோதியாக நடந்தார் என்றும் ஆயாசனத்துளாலே எள் தொகப்பனாராகிய குப்பள நாயக்கரையும் அவருடனே கூட இருந்த என் தமயன் முத்துவேல் னாயக்கரையும்

துற்மதி வருஷம் கார்த்திகை மாதம் விருப்பாட்சியில் தூக்குப்போட்டு தெய்வகதியானார்கள்” (மெக்கன்சி ஆவணம் எண். 3259)

மேற்கண்ட ஆவணங்களின் மூலம் ஐதர்அலி, திப்பு சுல்தான் ஆட்சிக் காலத்தில் பாளையக்காரர்கள் நிலையும், கிழக்கிந்திய கும்பெனியார் காலத்தில் பாளையக்காரர்கள் நிலையும் தெளிவாகத் தெரிகிறது. ஐதர்அலி, திப்புசுல்தான் ஆகியோர் மிக அதிக வரி வாங்கினர்; பாளையக்காரர்களைக் கொடுமைப்படுத்தினர் எனச் சிலர் எழுதியுள்ளது தவறு என்றும் தெரிகிறது.

திப்பு சுல்தானின் அதிகாரியாக மீரா சாயபு திண்டுக்கல்லில் இருந்தபோது அங்கு சர்க்கார் பள்ளிக்கூடமும், சர்க்கார் தர்ம வைத்தியசாலையும் இருந்தன. தமிழ், கிரந்தம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் கற்றுக் கொடுக்கப்பட்டன. அதற்காகச் சர்க்கார் சம்பள ஆட்களை நியமித்திருந்தார்கள்.

- கோபால கிருஷ்ண அய்யன், 26.6.1816, (மெக்கன்சி ஆவணம் டி 3013; ஆர் 8267)

நாமக்கல் மாவட்டம், இராசிபுரம் வட்டம் மின்னக்கல்லுக்கு உத்திண்டமல்ல சமுத்திரம் என்று பெயர். அங்குள்ள அக்கிரகாரத்தில் கோபால கிருஷ்ணர் கோயில் உள்ளது. அங்கு மைசூர் கன்னட பிராமணர்கள் வந்து வழிபாடு செய்கின்றனர். திருப்பணியும் செய்துள்ளனர். அக்கோயிலுக்கு திப்பு சுல்தான் ஜோடிகை மானியமாக 575 ராஜகோபால வராகன் கொடுத்ததாக அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

(நாமக்கல்-சேலம் மாவட்டக் கல்வெட்டுக்கள்)

## 112. கொடைகளை நிறுத்திய கும்பினியார்

சேதுபதி மன்னர்கள் பள்ளி வாசல்களுக்கும், தர்காக்களுக்கும் பலவிதமான கொடைகளை ஏராளமாக வழங்கியிருக்கின்றனர். அவை பெரும்பாலும் இன்று நடைமுறையில் இல்லை. அதற்குக் காரணம் கும்பினியார் ஆட்சியில் 1811ஆம் ஆண்டு சர்வ மானியங்களைக் கணக்கெடுத்துப் பலமானியங்களை நிறுத்தி விட்டனர்.இஸ்லாமிய நிறுவனங்கள் பலவும் இதனால் பாதிக்கப் பட்டன.

இராமநாதபுரம் கோட்டைக்கு வெளியே லெட்சுமிபுரத்தில் அமைந்துள்ள புனித குத்பு சாயபு அவர்கள் தர்காவிற்கு இராமநாதபுரம் சுங்கச் சாவடியிலிருந்து நாள்தோறும் ஒரு பணமும், வருடத் திருவிழாவிற்கு 8 கலம் அரிசியும் இரண்டு கிடாயும் கொடுக்க வேண்டும் என்று 1769ல் சேதுபதி மன்னர் உத்தரவிட்டது நிறுத்தப்பட்டது.

இதனைப் போன்றே திருப்புவனம் மலுங்கு சாயபு தர்காவிற்கும். பார்த்திபனூர் தாடிப் பக்கீர் தர்காவிற்கும் கொடைகள் நிறுத்தப்பட்டன. இவற்றை இராமநாதபுரம் எஸ். எம். கமால் அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

மதுரை மாவட்ட ஆவணங்கள் 4680 A. 1833 பக் 406

மதுரை மாவட்ட ஆவணங்கள் 1193/27.4.1815, ப. 86-88

சேதுபதி மன்னர் செப்பேடுகள்: டாக்டர். எஸ்.எம். கமால்

# 113. தமிழ்நாடு அரசு சுவடி நூலகத்தில் இஸ்லாமிய ஆவணங்கள்

சென்னைப் பல்கலைக் கழக வளாகத்தில் பொது நூலகத்தின் உள் மாடியில் தமிழ்நாடு அரசின் சுவடி நூலகம் உள்ளது. அந்தச் சுவடி நூலகத்தில் இஸ்லாமிய ஆவணங்கள் 2000 உள்ளன. உருது (இந்துஸ்தானி), அரபு. பர்ஷியன், தமிழ் ஆகிய மொழிகளில் எழுதப்பட்ட ஆவணங்கள் அங்கு உள்ளன.

அவை தனித்துச செய்யப்பட்ட ஒரு வகைக் கறுப்பு மையால் எழுதப்பட்டவை. பல ஆவணங்கள் 200 ஆண்டுகட்கு மேலாகியும் இன்றும் மிகத் தெளிவாக உள்ளன. அவைகளைத் தொகுத்து “A Descriptive Catalog of the ISLAMIC Manuscript” என்ற பெயரில் பல தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. அவைகட்கு முறையான வரிசை எண்களும் கொடுக்கப்பட்டுள்ளன. பொது நூலகம் போல் யார் வேண்டுமானாலும் அனுமதிபெற்று ஆவணங்களைப் பார்வையிடலாம். பிரதி எடுத்துக் கொள்ளலாம். அவைகளைப் பராமரிக்கவும் ஆய்வு செய்யவும் வெளியிடவும் ‘பண்டிட்’ என்ற பதவியில் நிபுனர் உள்ளார்.

அங்கு நீதிநெறி, மருத்துவம், அறிவியல், இறையியல், தத்துவம், சமயம், இலக்கியம், மரபியல், வரலாறு, பழமொழிகள் தொடர்பான ஆவணங்கள் உள்ளன. இஸ்லாமிய ஆர்வலர்கள் அந் நூலகத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.
- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**